# புத்துணர்ச்சியும் பொலிவும் வழங்கும் ஹமாம்!



கண்டுகொள்வீர் ஹமாம் புரியும் ஜாலத்தை,
இதுவரை காணாத கூடுதல் புத்துணர்ச்சியும்
பொலிவும் உமக்கு. புதுமை குன்றாமல்
நீடித்துக் கமழும் நறுமணம். சொகுசான
நுரைவளம்—வழங்கும் என்றும் புதுமையான
ஹமாம். புத்துணர்ச்சியையும்
பொலிவையும் உணருவீர்.

**ஹமாம்**
குடும்ப சோப்




டாட்டா தயாரிப்பு

CLARION/B/T/23/203 TAM

# இரண்டாவது சுபாஷ் சந்திரபோஸ்

பிரபாகரனுக்கு வீர வணக்கம் செலுத்த வேண்டிய தருணம் வந்து விட்டதா இல்லையா தெரியவில்லை. ஆனால் ஒன்று நிச்சயம். அவர் காலமான செய்தி உண்மையாயின் ராணுவ மரியாதையுடன் அடக்கம் செய்யப்பட வேண்டியவர்.

பிரபாகரன் என்று சொன்னாலே ஆயிரக்கணக்கான தமிழர் உள்ளங்கள் பூரித்துப் போவதும் மெய்சிலிர்த்துப் போவதும் நிஜம். அமைதிப்படையை வெளியேற்ற ஈழ அரசுடன் பேச்சு வார்த்தை நடத்துவதும் அமிர்தலிங்கம் போன்ற தமிழர் தலைவர்களைக் கொல்வதும் சரியல்ல என்று பிரபாகரன் எதிர்ப்புத் தெரிவிக்கவேதான் மத்தையா பிரிவினரால் சுடப்பட்டார் என்று செய்திகள் கூறுகின்றன.

இதற்கு முன்பும் 1984 — இல் ஒரு முறை பிரபாகரன் சிங்கள ராணுவத்தால் சுடப்பட்டு இறந்து விட்டதாகச் செய்தி வந்தது. அப்போது மிகுந்த வருத்தமடைந்த நெடுமாறன் வாசலில் ஜீப் சத்தம் கேட்க, 'யார் இந்த வேளையில்?' என்று எண்ணிக் கொண்டே வாசலுக்குப் போனார். "நான் தான் வந்திருக்கேன். என் ஆவி அல்ல!" என்று கூறியபடியே பிரபாகரன் இறங்கி வீட்டுக்குள் வந்தார்! 'அந்த நிகழ்ச்சி மீண்டும் ஒரு முறை நடக்கக் கூடாதா?' என்று ஏங்குகிறார் நெடுமாறன்.

வல்வெட்டித் துறையில் திருமேனியார் குடும்பம் ரொம்பப் பிரசித்தி. அதில் பிறந்த வேலுப்பிள்ளை பிரபாகரன் தமது முன்னோர்களைப் போலவே இறை உணர்வு மிக்கவர். முருக பக்தர். வாரியாரிடம் மிகுந்த ஈடுபாடு உடையவர். அவரை விட ஒரு படி அதிகமாகப் பிரபாகரனின் மதிப்பில் உயர்ந்தவர் நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ்!

பத்தாம் வகுப்புடன் படிப்புக்கு முற்றுப் புள்ளி வைத்த பிரபாகரனின் பள்ளித் தோழர்தான் மத்தையா என்னும் மகேந்திர ராஜா. இருவரும் கொரில்லாப் போர் முறைகளைப் பயின்றது லிபியா நாட்டில்.

பிரபாகரனின் மனைவி மதிவதனி. இது காதல் திருமணம் மட்டுமல்ல, கலப்புத் திருமணமும் கூட. இயக்கத்தின் அனுமதி பெற்று மணந்தார். மதிவதனியும் புலிகளுக்கு ஆதரவாகப் பல போராட்டங்களில் கலந்து கொண்டவர். ஆண் குழந்தைக்கு, இயக்கத் தோழரில் ஒருவராக இருந்து மரணமடைந்த சார்லஸ் அன்றனி என்பவரின் பெயரைச் சூட்டினார், பிரபாகரன். மகள் துவாரகா 1987 — இல் கடுமையான நோய்வாய்ப்பட்ட போதும், மரணத்தைத் தழுவிய போதும் காட்டில் தலைமறைவாக இருந்த பிரபாகரனால் இறுதிச் சடங்குகளுக்குக் கூட வர முடியாமல் போய்விட்டது.

பிரபாகரனின் கொள்கைகள், செயல் முறைகள் ஆகியன பலருக்குப் பிடிக்காமல் இருக்கலாம். ஆனால் அந்த லட்சிய வீரரைப் பிடிக்காதவர் யாரும் இருக்க முடியாது! இன்று உள்ளம் கலங்காத தமிழர் எவரும் இல்லை.

— கௌசல்யா.





* 'கனிமுத்து பாப்பா' (1972) படத்தில் லட்சுமி — பேபி ஸ்ரீதேவி.

# குழந்தை

* 'கண்ணே பாப்பா' (1969) படத்தில் பேபி ராணி.



"சொல்லும் மழலையிலே, கண்ணம்மா! துன்பங்கள் தீர்த்திடுவாய்! முல்லைச் சிரிப்பாலே — எனது மூர்க்கந் தவிர்த்திடுவாய்!'' என்ற கவியின் வர்ணனைக்குப் பொருத்தமான இளம் ரோஜா மலரை நினைவூட்டும் முகக்களை. நான்கு பிராயந் தானிருக்கும். முகத்தில் என்ன குருகுருப்பு! மார்கழி மாதக் காலையிலே பச்சைப் பந்தலிடையே பாலசூரியனின் வரவை எதிர் நோக்கி மலர்ந்திருக்கும் முல்லைக் கொத்தை நினைவூட்டும் சிரிப்பு. வெடுக் வெடுக்கென்ற பேச்சு. நம் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விடுகிறது பேபி சரோஜா.''

— இது ''பாலயோகினி'' படத்தைப் பற்றி, இலக்கிய ஏடு 'மணிக்கொடி' 31.1.1937 இதழில், பிரசுரமாகியுள்ள விமர்சனத்தில், அதில் நடித்த பேபி சரோஜா குறித்துக் காணப்படும் பாராட்டுப் பகுதியாகும்.

தமிழ் சினிமாவின் வரலாற்றில், முதன் முதலில், அனைத்துப் பத்திரிகைகளாலும் வியந்து பாராட்டப்பட்ட குழந்தை நட்சத்திரம் இந்த பேபி சரோஜாதான்.



• ஷாலினி

பேபி சரோஜா, பேபி பாலசரஸ்வதி... இன்னும் பல பேபிகளோடு ''பாலயோகினி'' படத்தைடைரக்டர் கே.சுப்ரமணியம் 1937 — இல் உருவாக்கினார். ஆனால், பெயரைத் தட்டிக் கொண்டது பேபி சரோஜாதான்.

அப்போது, 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி ஆனந்த விகடன்' பத்திரிகையின் ஆசிரியராயிருந்தார். அப்பத்திரிகையின் 14.8.1938 இதழின் சினிமாப் பகுதியில் இந்தச் செய்தி காணப்படுகிறது: ''ஸ்ரீமதி எஸ். டி. சுப்பு லட்சுமி, பாபநாசம் சிவன், பேபி சரோஜா இந்த மூன்று நட்சத்திரங்களும் பிரகாசிப்பதற்காகவென்றே 'கல்கி' இக்கதையைச் சிருஷ்டித்திருக்கிறார்.''

அந்தக் கதை —

''தியாகபூமி.''

தொடர்கதையாக 'ஆனந்த விகடன்' ஏட்டில் வெளிவந்து கொண்டிருந்த போதே படப்பிடிப்பு நடந்திருக்கிறது. திரைப்படத்தின் புகைப்படங்களே, 'தொடர்கதைக்குரிய சித்திரங்களாக வெளியிடப்பட்டுள்ளன.

1939 — ஆம் ஆண்டில் வெளிவந்த ''தியாகபூமி'' திரைப்படமும் பேபி சரோஜாவின் புகழைப் பன்மடங்கு உயர்த்தியது. அந்த ஆண்டிலும், அடுத்த சில ஆண்டு

## நட்சத்திரங்கள்:

# அன்று முதல் இன்று வரை!

பாலமீரா (ராதா).





* 'மருமகள்' (1953) படத்தில் பேபி சரஸ்வதி



* ஷர்லி டெம்பின்



* பேபி வாஸந்தி

களிலும் தமிழர்தம் இல்லங்களில் பிறந்த குழந்தைகள் பலவற்றிற்கு "சரோஜா" என்னும் பெயரே சூட்டப்பட்டதாம். "பேபி சரோஜா ஸ்கூல்பை," "பேபி சரோஜா முகப்பவுடர்," "பேபி சரோஜா குளியல் சோப்" தோன்றிய செய்திகளும் அந்நாளைய செய்திகளில் காணப்படுகின்றன.

தமிழ் சினிமாவுக்கு வெற்றிகரமானதோர் பேபியை உருவாக்கிக் காட்ட கே. சுப்ரமணியத்திற்கு ஆதர்சமாக இருந்தவர்கள் — 1. ஷர்லி டெம்பிள், 2. வாஸந்தி.

முப்பதுகளில் இந்தியாவுக்குள் வந்த ஆங்கிலப் படங்களின் மூலம் இங்குள்ள ரசிகர்களின் இதயம் கவர்ந்தவள் — பேபி ஷர்லி டெம்பிள்.

அதே காலத்தில் தமிழகத்திற்குள் வந்த இந்திப் படங்களின் மூலம் தமிழர்களின் அன்பைப் பெற்றவள் — பேபி வாஸந்தி.

பேபி சரோஜாவுக்கு முன்னரே ஒரு பேபி; நுங்கம்பாக்கம் ஜானகி என்னும் துணை நடிகையின் மகளான அந்தச் சிறுமி

* 'யார் பையன்?' (1957) படத்தில் டெய்ஸி ராணி.





* 'தேச முன்னேற்றம்' (1938) படத்தில் பேபி ருக்மணி.



* 'தியாக பூமி' (1939) படத்தில் பேபி சரோஜா — பாபநாசம் சிவன்.

யின் பெயர் — பேபி ருக்மணி.

1935 — ஆம் ஆண்டின் 'அரிச்சந்திரா' படத்தில் அறிமுகமான பேபி ருக்மணி, பேபியாகச் சில படங்களில் நடித்து குமாரி ருக்மணியாக மாறி கதாநாயகியாகப் பல படங்களில் நடித்து — (புகழ் தந்தவை — 'ஸ்ரீவள்ளி' (1945), 'லவங்கி (1936), 'கப்ப லோட்டிய தமிழன்' (1961) — இப்போதும் குமாரி ருக்மணியாகவே இருக்கிறார். ('சில நேரங்களில் சில மனிதர்கள்' லட்சுமி குமாரி ருக்மணியின் மகள்).

'வாலிபர் சங்கம்' (1938), 'மீரா,' 'ஸ்ரீவள்ளி' (1945), 'நாம் இருவர்' (1947) போன்ற படங்களின் மூலம் புகழ் பெற்ற பேபி கமலா, 1954 — இல் விளையாட்டு பொம்மை' படத்தின் மூலம் குமாரி கமலா வாகி, பின்னர், கமலா லட்சுமணனாகி, 'கொஞ்சும் சலங்கை' (1962)யில் நடித்தார். திருமதி எம். எஸ். சுப்புலட்சுமி நடித்துப் பெரும் புகழ்பெற்ற 'மீரா' படத்தில் பேபி கமலா கிருஷ்ணனாகத் தோன்றினாலும் பால மீராவாகத் தோன்றி நடித்தவர் ராதா. ஆம், எம். எஸ். அவர்களுடன் கச்சேரிகளில் உடன் பாடும் ராதா விசுவநாதனேதான்! படத்தின் ஆரம்பத்தில் சில நிமிஷங்களே தோன்றினாலும் ராதாவின் இயற்கையான நடிப்பைப் பாராட்டி எழுதாத மீரா விமர் சனமே இல்லை!

ஐம்பதுகளில் ஒரு பேபி. "ராணி," "அவ் வையார்," "தர்ம தேவதா," "தேவதாஸ்," "சொர்க்க வாசல்" போன்ற படங்கள் இந்த பேபிக்குப் புகழ் தந்தன. அப்போது பெயர் — பேபி சரஸ்வதி; இப்போது சச்சு; பல படங்களின் சிரிப்பு நடிகை; அவ்வப் போது ம. வி. நாடகங்கள்.



* 'ஸ்ரீவள்ளி' (1945) படத்தில் பேபி கமலா.

1957 — இல் வட இந்தியாவிலிருந்து ஒரு பேபி வந்தது; "யார் பையன்?" என் னும் ஒரே ஒரு தமிழ்ப்படத்தின் மூலம் புகழை வாரிக் கொண்டது. பெயர் — பேபி டெய்ஸி ராணி.

1959 — இன் 'வீரபாண்டிய கட்டபொம் மன்' படத்து மீனாவை நினைவிருக்கிறதா? இருக்கும்... கட்டபொம்மனே கடைசிக் காட்சியொன்றில் "மீனா" என்று உரக்கக் கூவினாரே... அந்த பேபி காஞ்சனா, பின் னாளில், சில படங்களில் சிலுக்கு மாதிரி கவர்ச்சி நடனங்கள் ஆடி, அப்புறம் தலை மறைவாகி விட்டார்!

அதே போல —

"அத்தைமடி மெத்தையடி!" என்று 'கற் பகம்' (1961) படத்தில் கொஞ்சி மகிழப் பட்ட பேபி ஷகிலாவும் பின்னாளில் 'கவர்ச்சி' நடிகையானார்; காணாமல் போனார்.

'குழந்தையும் தெய்வமும்' (1965) படத் தில் இரட்டை வேடங்களில் தோன்றினார் பேபி பத்மினி. ஏற்கெனவே புகழ் பெற்ற ஒரு பத்மினி திரையுலகில் இருந்ததால் இந்த பேபி பத்மினி 'குட்டி பத்மினி' ஆனார். இப்போது தொலைக்காட்சி நாடகங்களில் கதாநாயகியாகத் தோன்றுகிற போதும் இவர் குட்டி பத்மினிதான்.

ராஜி, சுமதி, ரோஜாரமணி போன்ற பேபிகளும் குமாரிகளாகிச் சில படங்களில் தோன்றினார்கள்.

1966 — இன் "தட்டுங்கள் திறக்கப் படும்" படத்தின் பேபி மகாலட்சுமிக்கு, குமாரியான பின்னர் பெயர் மாறியது — ஷோபா.

'அழியாத கோலங்கள்,' 'மூடுபனி,' 'பசி' ஷோபாவுக்குப் புகழ் தந்த படங்கள். 1979 — இன் 'சிறந்த நடிகை' என்னும் ஜனாதிபதி விருது இவருக்கு அறிவிக்கப் பட்டது. சோக நடிப்பில் பெயர் வாங்கிய ஷோபா, சோகமான ஒரு சூழ்நிலையில் தற் கொலை செய்து கொண்டார்.

தேவரின் 'துணைவன்' (1969) படத்தில் பால முருகனாக ஒரு பேபி; இடுப்பில் ஒரு சிறு துண்டு மட்டுமே உடை; 'தெய்வீக'




# N.S.K.
## ரியல் எஸ்டேட்ஸ்

**அரசு அங்கீகாரம் பெற்ற வீட்டு மனைகள்.**

சென்னை நகரின் சுற்றுப்புறத்தில் எல்லா வசதிகளுடன் நிறைந்த வீட்டு மனைகள் விற்பனைக்கு உள்ளன.

**N.S.K. நகர், திருநின்றவூர்:** சென்னை - பம்பாய் இரயில் மார்க்கத்தில் ஆவடிக்கு அருகாமையில் திருநின்றவூர் இரயில் நிலையத்தி-லிருந்து சுமார் 2 கி.மீ. அளவில் அமைந்துள்ளது N.S.K. நகர்.

1. MMDA அரசு அங்கீகாரம் பெற்றது. எண் PPD/LO/10/87
2. 54A பஸ் மார்க்கம் - 5 நிமிடத்திற்கொரு மின்சார இரயில் மற்றும் பஸ் வசதிகள்.
3. பள்ளிகள், கோவில் மற்றும் சுகாதார நிலையங்கள்.
4. 10' ஆழத்தில் சுவையான குடிநீர்.
5. 1800 சதுர அடி மனையின் விலை ரூ. 25000/-.
6. முதலில் ரூ. 15000/- செலுத்தி மீதியை 6 மாத தவணையில் செலுத்தலாம்.
7. முழுத்தொகையை உடனே செலுத்துவோருக்கு 5% தள்ளுபடி செய்யப்படும்.

**ஸ்ரீ ராகவேந்திரா நகர்:** வல்லக்கோட்டை - சென்னை - பெங்களூர் பஸ் மார்க்கத்தில் ஸ்ரீ பெரும்புதூர் அருகே அமைந்துள்ளது ஸ்ரீ ராகவேந்திரா நகர்.

1. D.T.P. அரசு அங்கீகாரம் பெற்றது எண்: LP/DTCP 474/89.
2. 5 நிமிடங்களுக்கொரு பஸ்.
3. புகழ்பெற்ற வல்லக்கோட்டை முருகன் கோயில் அருகாமையில் உள்ளது.
4. சுவையான குடிநீர்.
5. 1800 சதுர அடி மனையின் விலை ரூ. 6000/- மட்டுமே.
6. முதலில் ரூ. 3000/- செலுத்தி மீதியை 6 மாத தவணையில் செலுத்தலாம்.
7. முழுப்பணத்தை செலுத்துவோருக்கு 5% தள்ளுபடி செய்யப்படும்.



தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**N.S.K. ரியல் எஸ்டேட்ஸ்**

ரூம் நெ. 109 ஹை-வே லாட்ஜ். (செம்பூர் இரயில் நிலையம் அருகில்),
(சாவன் பஜார்) பம்பாய் - 71. தொலைபேசி எண்: அலுவலகம் : 555217.
வீடு: 5556842/5552777.

சென்னை அலுவலகம்: 38-B , பர்கிட் சாலை, சென்னை-17.
தொலைபேசி எண்: 445252/442106.



துவைக்க வேண்டுமே
என்ற கவலை எனக்கில்லை!





# ஏஞ்சல்
## வாஷிங் மெஷின்

தமிழக அரசின் குவாலிடி கண்ட்ரோல் சென்டரின் அங்கீகாரம் பெற்றது

மாடல்கள் :

- முழு எவர்சில்வர்
- ரிவர்சிபிள்
- ஃபைபர் கிளாஸ்
- வாஷர்கம் டிரையர்.
- எலக்ட்ரானிக் ரிவர்சிபிள்

விலை ரூ. 2750/-

விலை ரூ. 3850/-

ஏஞ்சல் டொமஸ்டிக் எக்யுப்மென்ட்ஸ்
கோயமுத்தூர் - 641 025

டிஸ்ட்ரிபியூட்டர்கள்: * மார்ஸ் என்டர்பிரைசஸ், சென்னை — 5, போன்: 84 3018 & 84 0236 * மாடர்ன் எலக்ட்ரோ மெஷின்ஸ், கோவை-18, போன்: 35608 & 35147. * திரு முத்து செல்வி கார்ப்பரேஷன், மதுரை — 1, போன்: 224 88 & 27087. * செந்தூர் கார்ப்பரேஷன், திருச்சி-2, போன்: 29261.

டீலர்கள்: * ஸ்டேன்டர்டு எலக்ட்ரானிக்ஸ், ஈரோடு-1, போன்: 73177. * லக்ஷ்மி ஜுவெல்லர்ஸ், தி. நகர், போன்: 444629. * ஸ்ரீ கோகுலம் & கோ, கோடம்பாக்கம், போன்: 4 36868 & 4 36256. * T. V. எலக்ட்ரானிக்ஸ், பெரம்பூர், போன்: 619315. * சந்தா ஏஜென்சீஸ், தூத்துக்குடி-1, போன்: 24985. * S. S. அண்ணாமலை என்டர்பிரைசஸ், திருவான்மியூர், போன்: 4 15272. * M. A. P. P. தொழிலாளர் நுகர்வோர் கூட்டுறவு பண்டகசாலை லிட், P.D.P.M. காலனி, கல்பாக்கம். * பிரியன் என்டர்பிரைசஸ், பாண்டிச்சேரி, போன்: 27598. * அங்கம்ம் ஏஜென்சீஸ், கரூர்-1, போன்: 23912. * குவாலிட்டி பர்னிச்சர், தஞ்சாவூர்-9. போன்: 22244. * மெக்கின் ஏஜென்சீஸ், சிதம்பரம்-1. * R. M. H. கார்ப்பரேஷன், சேலம். போன்: 64655. * கோல்டன் டிரேடர், மதுரை-1, போன்: 364 15 & 23018. * ஸ்ரீ வாணி பர்னிச்சர், தேனி. * ராஜ் & ராஜ் என்டர்பிரைசஸ், திண்டுக்கல், போன்: 6849.

---




# VISTRAM
## — a high fibre food

விஸ்ட்ரம் முற்றிலும் தானிய வகைகளால் தயார் செய்யப்பட்ட ஒரு நார் பொருள் உணவு (High Fibre Food) சர்க்கரை வியாதிக்காரர்களுக்கும், ரத்த அழுத்தம் உள்ளவர்களுக்கும், உடல் பருமன் உள்ளவர்களுக்கும் ஏற்ற மிகச்சிறந்த உணவு. உணவுக்கட்டுப்பாட்டை கவனத்தில் கொண்டு தயார் செய்யப்பட்டுள்ளது. கொழுப்புச்சத்து சிறிதும் இல்லாதது. செயற்கை மணம், ருசி கலக்கப்படாதது. ஆகையால் எந்த விதமான பின் விளைவுகளும் பாதிப்பும் ஏற்படாது.

SPSS

தயாரிப்பாளர்கள் :
**VISTRAM FOODS**
**98, ELDAMS ROAD, TEYNAMPET,**
**MADRAS-600 018, PHONE : 455298.**

கிடைக்கும் இடங்கள்:
எல்லா மருந்து கடைகளிலும், ஸ்பென்சர், நீல்கிரீஸ் போன்ற டிபார்ட்மென்ட் கடைகளிலும் கிடைக்கும்.

TAS

## அட்டைப்பட நட்சத்திரங்கள்

அஞ்சு வயசுப் பையனா இப்படி அமர்க்களப்படுத்துகிறான்!' என்று வயது வித்தியாசமின்றிப் பார்ப்பவர்கள் அத்தனை பேரின் மனசையும் சாந்தமாய்க் கவருகிறான் லிட்டில் ஸ்டார் சிம்பு. படத்துக்குப் படம் ரசிகர்களிடையே பெரியதொரு வரவேற்புப் பெற்று வரும் சிம்பு, இப்போது டான் பாஸ்கோவில் முதல் வகுப்பில் படிக்கிறான்.

''படிப்பு, நடிப்பு இரண்டையும் ஒன்றோடொன்று குறுக்கிடாமல் பார்த்துக் கொள்கிறோம். பள்ளிக்கூடத்திலிருந்து வந்தபின் தான் இவன் சம்பந்தமான காட்சிகள் எடுக்கப்படும். படுபுத்திசாலி. எதையும் ஒரு தடவை சொன்னாலே போதும்! சட்டெனப் பிடித்துக் கொள்வான்!'' என்று சொல்கிறார் உஷா ராஜேந்தர்.

ஒரு சமயம், ரஜினி செட் ஒன்றில் சிம்பு நின்று கொண்டிருக்க, ஓர் உதவியாளர் அவனை அனுப்பிவிடக் கருதி, ''தம்பி, இங்கே நிற்கக் கூடாது. இது காமிரா ஃபீல்டு'' என்று கூற, சிம்பு ஒரு நோட்டம் விட்டுவிட்டு, காமிராமேனைப் பார்த்து, ''அங்கிள்! நான் நிற்குமிடம் காமிரா ஃபீல்டா? இருக்க முடியாதே?'' என்று கேட்க, செட்டில் அனைவரும் வாயடைத்துப் போனார்கள்!

''மற்றவர்கள் படங்களில் சிம்புவை நடிக்க அனுமதிக்கும் எண்ணமுண்டா?''

''இல்லை. நான் சிம்புவுக்கென்றே பாத்திரங்கள் அமைத்து, அவன் 'மூடு'க்கு ஏற்பப் படமெடுப்பேன். ஆனால் அதே மாதிரி மற்றவர்கள் விஷயத்தில் எதிர்பார்க்க முடியாதே!'' என்கிறார் டி. ராஜேந்தர்.

சிம்புவின் தங்கை தமிழ் இலக்கியா. இந்த மூன்று வயதுக் குழந்தையும் நடிக்க வந்து ரசிகர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டு விட்டது. ''பிரபல பள்ளியில் இலக்கியாவுக்குப் பிரி கே. ஜி.க்கு சீட்டிற்கு முயற்சி செய்தேன். அரசியல் காரணங்களுக்காக சீட் மறுக்கப்பட்டு விட்டது'' என்கிறார் டி. ராஜேந்தர்.

சந்திப்பு: **நமது நிருபர்.**

---

மணம் கமழ்ந்தது.

அதே பேபி ''16 வயதினிலே'' (1977) படத்திலும் வெறுங்கால்களைக் காட்டினார். விரசமாக இருந்தது.

''துணைவன்'' படத்தின் போது பெயர் — பேபி ஸ்ரீதேவி; இப்போது இந்தியாவின் புகழ்மிக்க கவர்ச்சிக் கதாநாயகியாக விளங்குகிறார். பெயர் — ஸ்ரீதேவி.

இப்போது, எண்பதுகளில் கேரளத்திலும் தமிழகத்திலும் புகழ்பெற்ற பேபி — ஷாலினி.

அறுபதுகளுக்குப் பின்னர், தமிழ் சினிமாவில் தோன்றிய பேபிகளும் பொடி நடிகர்களும் பல சந்தர்ப்பங்களில் இயல்பாக அல்லாமல் அவர்களது வயசுக்கு மீறிய சாகஸங்களைச் செய்பவர்களாகவே நமது பட அதிபர்களாலும் டைரக்டர்களாலும் நடிக்க வைக்கப்படுகிறார்கள்.

பழைய தமிழ் ஏடுகளின் திரைப்பட விமர்சனங்களைத் தேடித் தேடிப் படிக்கிறபோது, அப்போதைய பேபிகள் பேபிகளுக்குரிய குணங்களுடனேயே நடிக்க வைக்கப்பட்டதைத் தெரிந்து கொள்ள முடிகிறது.

இதோ —

''பால யோகினி'' படத்தில் நடித்த பேபி சரோஜாவின் நடிப்பு பற்றி, 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி எழுதிய விமர்சனம்...

''அப்பழுக்குச் சொல்ல முடியாதபடி, தமிழ் டாக்கியில், முதன் முதலாக வெற்றி பெற்றிருப்பது இந்த சரோஜா கண்ணு தான்! இந்தக் குழந்தையின் நடிப்பில் எங்கேயாவது ஓரிடத்தில் 'கொஞ்சம் விரசமாக இருந்தது' என்று சொல்வதற்கு இடம் வேண்டுமே! கிடையாது.'' ('ஆனந்த விகடன்' 21.2.1937).

பேபி சரோஜா, 'தோழன்' (1960) முதலான படங்களில் நடித்த பேபி உமா, 'குழந்தைக்காக' (1968) முதலிய படங்களில் நடித்த பேபி ராணி போன்றோர் பேபிகளாகவே திரையுலகிலிருந்து விலகிக் கொண்டார்கள்.

எனவே —

அவர்கள் என்றென்றும் பேபிகளாகவே நம் இதயங்களில் மழலை மொழிகளை உதிர்த்துக் கொண்டு நிரந்தரம் பெற்று ஜீவிக்கிறார்கள்.

பேபி சரோஜாவின் நடிப்பைப் பாராட்டி விட்டு 'கல்கி' தொடர்ந்து எழுதினார்: ''நமக்கு அடுத்த தலைமுறையில் வரப் போகும் நமது சந்ததிகள் விடுதலை பெற்ற தேசத்தில் வீர சுதந்திரத்துடன் வாழப் போகிறார்கள் என்று நாமெல்லாம் நம்பியிருக்கிறோமல்லவா? அதுபோலவே கலைச் செல்வத்திலும் அவர்கள் நம்மைவிட எத்தனையோ மேம்பட்டு விளங்கப் போகிறார்கள் என்பதில் எனக்கு இப்போது எள்ளளவும் சந்தேகமில்லை'' ('ஆனந்த விகடன்' 21.2.1937)

பேராசிரியர் 'கல்கி'யின் எதிர்பார்ப்பையும் நம்பிக்கையையும் திரை உலகம் பல விதங்களில் பூர்த்தி செய்திருந்தாலும் குழந்தை நட்சத்திரங்களைப் பொறுத்தமட்டில் செயற்கைத் தன்மை அதிகரித்திருப்பதாகவே தோன்றுகிறது. இது ஒரு ஸீஸன் என்றும் இந்தப் போக்கு மீண்டும் திசை மாறும் என்றும் எதிர்பார்ப்போம்.

**— அறந்தை நாராயணன்.**


ஆளுங்கட்சியும் எதிர்க்கட்சிகளும் போட்டி போட்டுக் கொண்டு என் மானத்தைக் கப்பலேத்தறாங்க!
இந்திய பார்லிமெண்ட்


சிங்களவர்
கண்டிஷனா சொல்லிட்டேன். அமைதிப் படை வாபஸ் ஆகணும்னு!
பிரேமதாச


சர்தான் போய்யா, உன் கூட்டத்துக்கு நான் என்ன வர்றது?
காவிரி நீர் பேச்சு - சர்வகட்சி கூட்டம்



# கல்கி

1989 ஆகஸ்ட் 6
மலர் 48 இதழ் 1
சுக்ல ஆடி 22



## எதிர்க்கட்சி எம். பிக்களின் ராஜினாமா

போஃபோர்ஸ் விஷயத்தில் ராஜீவ் காந்தி போட்டு வந்த வேஷங்கள் பலமுறை கலைக்கப்பட்டு விட்டன. கடைசி முகமூடியையும் நாட்டின் பிரதம கணக்காயரின் அறிக்கை கிழித்தெறிந்து கோரமான உண்மைச் சொரூபத்தை அம்பலப்படுத்தியிருக்கிறது. ஜனநாயக நாகரிகம் அவருடைய ராஜினாமாவைக் கோருகிறது. ஆனால் அதைச் செய்ய அவர் தயாராக இல்லை. மனச்சாட்சி உள்ளவர்களுக்குத்தானே தலைகுனிவு ஏற்படும்? அதைக் கொன்று விட்டவர்களிடம் ராஜினாமாவை எப்படி எதிர்பார்க்க முடியும்?

'போஃபோர்ஸ் பேரத்தில் கமிஷன் கிடையாது' என்றார். கமிஷன் தரப்பட்டதாக நிரூபணம் ஆயிற்று. 'அது கமிஷன் அல்ல; பணி முடிப்புத் தொகை' என்றார். இல்லை, கமிஷனேதான் என்பதற்கு ஆதாரங்கள் வெளியாயின. 'கமிஷன் தரப்பட்டிருக்கலாம்; ஆனால் எந்த இந்தியரும் பெறவில்லை' என்றார். இந்தியர்களுக்கே வழங்கப்பட்டிருப்பதாக ஆவணங்கள் பிரசுரமாயின. 'போஃபோர்ஸ் மிகச் சிறந்த பீரங்கி; நாட்டின் பாதுகாப்பை உத்தேசிக்கும் போது இதை விடச் சிறந்த பீரங்கியைப் பெற்றிருக்க முடியாது; இதைத்தான் முக்கியமாகக் கவனிக்க வேண்டும்' என்றார். இந்தக் கூற்றும் தவறானது என்று பிரதம கணக்காயர் அறிக்கையிலிருந்து தெரிய வருகிறது; இதை விடச் சிறந்த பீரங்கிகள் என்று முதலில் கருதப்பட்ட பிரெஞ்சு பீரங்கிகளை ஒதுக்கி விட்டுத் திடுமென ஸ்வீடிஷ் பீரங்கிகளைத் தேர்ந்தெடுக்கச் சரியான காரணங்கள் இல்லை; முன்னதை விடப் பின்னதைச் சிறந்தது என்று கருதப் போதிய ஆதாரங்கள் இல்லை.

போஃபோர்ஸ் பேரத்தை நுணுக்கமாக ஆராய்ந்து பல திடுக்கிடச் செய்யும் தகவல்களைத் தந்திருக்கிறார் பிரதம கணக்காயர்; போஃபோர்ஸ் பீரங்கிகளின் ஆற்றலும் குறைவு; இடைத் தரகர்கள் இருந்திருக்கிறார்கள்; அதனால் விலையும் கூடுதலாகியிருக்கிறது; வரி செலுத்தும் மக்களுக்குப் பல கோடி ரூபாய் நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது.

தில்லுமுல்லுகள், அதிகார துஷ்பிரயோகங்கள், லஞ்ச ஊழல்கள் எல்லாமே அம்பலமாகியுள்ளன. ஆனால் பிரதமரும் அவரது தோழர்களும் பாதிக்கப்பட்டதாகவே தெரியவில்லை. நெஞ்சை நிமிர்த்திப் பேசுகிறார்கள். பிரதம கணக்காயருக்கே உள்நோக்கம் கற்பிக்கிறார்கள். அவர் அதிகார வரம்புகளை மீறியதாக அவதூறு சுமத்தி, அவரது தீர்ப்பையே அலட்சியம் செய்யவும் துணிகிறார்கள். அதாவது, அரசியல் சாசனத்தையே அவமதித்து, ஜனநாயகப் படுகொலை செய்கிறார்கள். எல்லாம் மெஜாரிடி பலம் தரும் துணிச்சலினால்தான்.

நாடாளுமன்ற ஜனநாயகம் என்பது மெஜாரிடி பலம் என்கிற ஆமாம் சாமிகளின் அடிப்படையில் மட்டும் இயங்குவதல்ல. மனச்சாட்சியைக் கொன்று விட்டும் முதுகெலும்பைக் கழற்றி வைத்து விட்டும் உறுப்பினர்கள் நடந்து கொண்டால் அந்த மெஜாரிடி ஆட்சி, சர்வாதிகாரத்துக்கு மாற்றுப் பெயராகத்தான் இருக்க முடியும்.

இத்தகைய சூழ்நிலையில் நாடாளுமன்றத்தில் தாங்கள் செயலாற்றிப் பயனில்லை என்ற கருத்தில் எதிர்க்கட்சியினர் பலர் ராஜினாமா செய்துள்ளனர். இது வரலாறு காணாத புதுமை என்றாலும் அர்த்தமுள்ள வாதமோ ஏற்கத்தக்க நடைமுறையோ அல்ல. உள்ளுக்குள்ளேயே இருந்து கொண்டு 'ராஜீவ் காந்தி ராஜினாமா செய்ய வேண்டும்' என்று கூப்பாடு போடுவதும், கலாட்டா செய்து நாடாளுமன்றத்தையே நடக்க விடாமல் செய்வதும் போகாத ஊருக்கு வழி தேடும் அபத்தமான காரியங்கள். எத்தகைய சோதனையான சூழ்நிலையிலும் மனம் தளராமல், அமைதியான முறையில் தர்ம நியாயங்களை எடுத்து வைப்பதே எதிர்க் கட்சிகளின் பணி. அரசு கேட்காமல் போனாலும் மக்கள் செவிமடுப்பார்கள்.

இப்போது எதிர்க் கட்சிகளின் ராஜினாமா பொறுப்பற்ற செயலாகவே கருதப்படும். பிரதம கணக்காயரின் அறிக்கையை நிராகரிப்பதும் பஞ்சாயத்து ராஜ் போன்ற சட்டங்களை நிறைவேற்றுவதும் ராஜீவ் அரசுக்கு எளிதாகிப் போகும். எப்படி இருந்தாலும் இன்னும் ஆறு மாதங்களில் பொதுத் தேர்தல் வரப் போகிறது என்ற நிலையில், இன்றைய எம்.பிக்களின் ராஜினாமா ராஜீவ் அரசுக்கு ஒரு சவாலாக விளங்க வேண்டுமானால், அவர்களுடன் சேர்ந்து மனச்சாட்சிக்கு மதிப்பளிக்கும் சில ஆளும் கட்சி எம்.பிக்களும் ராஜினாமா செய்தால்தான் உண்டு. இல்லையெனில், நிகர லாபம், எதிர்க் கட்சி எம்.பிக்களின் சம்பளம், பென்ஷன் முதலியன அரசுக்கு — வரி செலுத்துவோருக்கு — மிச்சமாவது ஒன்று மட்டுமே!

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

அறிமுகப்படுத்துகிறோம்

## புதிய சுவைகள் கொண்ட ஆந்திர உணவு வகைகள்

# கோதாவரி A/C

சைவ மற்றும் அசைவ ஆந்திர உணவகம்



சென்னையிலேயே உயர்ந்த ரக அறுசுவையுடைய ஆந்திர உணவு வகைகளை அளிக்கும் ஒரு புதிய ரெஸ்டாரெண்ட்.

நாவின் சுவைக்கேற்ப பல்வேறு உணவு வகைகளை பக்குவத்துடன் அளிக்கும் ஒரு சிறந்த ஆந்திர ரெஸ்டாரெண்ட். வீட்டில் தயாரிக்கப்பட்டது போன்ற தனித்தன்மை வாய்ந்த உணவு வகைகளை அளிக்கிறது.

சென்னை பெருநகருக்கு வருகை தரும் எவரும், புதிதாக தயாரிக்கப்பட்ட, ஆவி பறக்கும் உணவு வகைகளை உண்ண "கோதாவரிக்கு" வருகை தாருங்கள்.

எங்கள் உணவு வகைகளின் சிறப்பை பலரும் பலமுறை கூறக் கேட்பீர்கள்.

நாவிற்கு அறுசுவையூட்டும் உணவு வகைகள், உடலுக்கு ஏற்ற வகையில் அமைந்துள்ளன.

சிறந்த உணவகத்தைத் தேடி நீங்கள் வேறு எங்கும் செல்ல வேண்டியதில்லை.

எங்களது சிறப்பு உணவு வகைகள் : **மட்டன் பிரியாணி**
**சிக்கன் கோதாவரி**

103, ஜெனரல் பேட்டர்ஸ் சாலை,
சென்னை — 600 002.
தொலைபேசி எண்: 848163

# கிந்திஜியைத் தெரியலையே!




### அடக் கடவுளே!

○○ தேசத் தலைவர்களைப் போல வேடமிட்ட மாணவர்கள் ஒவ்வொருவராக வர, கண்மணிப் பூங்கா நிகழ்ச்சி நடத்தும் பெண்மணி, கூட்டத்தில் ஒரு மாணவனை அழைத்து வேடமணிந்த அந்தத் தலைவர் யார்? அவர் நாட்டிற்கு என்ன செய்தார்? என்று கேட்டுக் கொண்டிருந்தார். அதன்படி ஒரு மாணவன் நேருவைப் போல உடையணிந்து வர, நிகழ்ச்சியை நடத்திக் கொண்டிருந்த பெண்மணி ஒருவனை அழைத்து, அந்தத் தலைவர் யார் என்று கேட்க, அந்த மாணவனும் சரியாக 'நேரு மாமா' என்று சொல்லி விட்டான். அதையடுத்து மற்றொரு மாணவன் காந்தியைப் போல வேட்டியணிந்து கையில் ஒரு தடியுடன் மேடையில் தோன்றினான். உடனே, நிகழ்ச்சியை நடத்தும் பெண்மணி ஒரு மாணவனை அழைத்து இவர் யார் என்று கேட்க? அவனோ, 'அவன் பையன்' என்று கூற, அந்தப் பெண்மணியோ 'நன்றாக பார்! அவர் கையில் தடி, வேட்டி கட்டியிருக்கிறார்; இவர் நமது நாட்டின் தேசத் தந்தை' என்று ஞாபகப் படுத்த, அந்த சிறுவனோ ஒன்றும் புரியாமல் விரலைச் சூப்பிக் கொண்டு 'இல்லை அவன் பையன்' என்று கூறினான். நிகழ்ச்சி நடத்திக் கொண்டிருந்த பெண்மணி உள்பட எல்லோரும் சிரித்தனர்.

— கோ. பாஸ்கர், சென்னை — 4.

### 'கடி' தொடர்கிறது...

○○ எனக்கு ஹிந்தி நன்றாகப் பேசவும், எழுதவும், படிக்கவும் தெரியும். ஆனால் என் கணவருக்கோ ஹிந்தி அறிவு 'சூன்யம்' தான். நான் 'சித்ரஹார்' நிகழ்ச்சி பார்க்கும் சமயம், நல்ல பாடலாக இருந்தால், எல்லோரையும் நிசப்தமாக இருக்கச் சொல்லி விட்டு, மிகவும் ரசிப்பேன். அந்தப் புதன் கிழமையும் அப்படித்தான். ஹீரோ, ஹீரோயினைப் பார்த்து, 'மோஸம், மோஸம், ஸுஹானி மோஸம்!' என்று பாட, அவளும் பதிலுக்கு அதே போல பாடி, ஆடிக் கொண்டிருந்தாள். உடனே என் கணவர், தான் ஏதோ சாமர்த்தியமாகப் பேசுவதாக நினைத்துக் கொண்டு, என்னிடம் 'இவர்கள் ஏன் இப்படி ஒருவரை ஒருவர், 'மோசம், மோசம்' என்று திட்டிக் கொள்கிறார்கள் என்றார். காலேஜ் படிக்கும் அவர் தம்பியோ, 'அண்ணா, இருந்தாலும் நீங்கள் இப்படியெல்லாம் கடிக்கக் கூடாது' என்று கூற, அவர் அசடு வழிந்ததைப் பார்த்து, நாங்கள் சிரித்த சிரிப்பு இருக்கிறதே — அப்பப்பா! ஆனாலும், மனிதருடைய 'கடி' தொடர்கிறது! (சித்ரஹார் பொழுதுதான்).

— ஜே. சாரதா, சென்னை — 28.

### ப(க்)த்தி மணம் கமழ்ந்தது!

○○ சென்ற வாரத்தில், எட்டாம் வகுப்பில் படிக்கும் என் மகள் கூம்பு வடிவத்தில் இருக்கும் ஊதுவத்தியைக் (தசாங்கம் என்று சொல்வார்கள்) கொளுத்தி, டீ.வி. மேல் வைத்ததை நாங்கள் யாரும் கவனிக்கவில்லை. ஊதுவத்தி முழுவதும் எரிந்து டீ.வி.யின் மேல்புறம் துளைக்கப்பட்டு, இளகிய மேல்புறம் உருகி, உள்ளுக்குள்ளேயே வழிந்து டீ.வி.யின் கீழ்ப்புறமும் ஓட்டையாகி, அடியில் இருந்த டேபிள் துணி கருகிக் கொண்டிருந்த போதுதான், வீட்டினுள் நுழைந்த என் கணவர் 'என்ன துணி கருகும் வாசனை' என்று பார்த்துக் கண்டு பிடித்த பிறகுதான் நாங்கள் கவனித்தோம். ஆளாளுக்கு அவளைத் திட்டினோம். நல்ல வேளையாக(!) டீ.வி.க்கு ஒன்றும் ஆகவில்லை. இருந்தாலும் இறுக்கமான சூழ்நிலை நிலவியது. அப்போது என் தம்பி, "நான் அப்போதே நினைத்தேன் அத்தான். என்ன, இந்த நிகழ்ச்சியில் ப(க்)த்தி மணம் கமழ்கிறதே என்று" என்றான்.

இறுக்கமான சூழ்நிலை தளர்ந்து, கொல்லென அனைவரும் (என் கணவர் உட்பட) சிரித்து விட்டோம்.

— எஸ். முத்துலட்சுமி, விருதுநகர்.

### 'களிகளம்' கலிகாலம் ஆனது!

○○ என் அத்தை கடந்த கோடை விடுமுறையில் சென்னையிலிருந்து எங்கள் வீட்டிற்கு வந்திருந்தார். எங்கள் ஊரில் பக்கத்திலிருக்கும் திருவனந்தபுரம் டீ.வி. நிலைய நிகழ்ச்சிகள் தெரியும். என் அத்தை டீ.வி. நிகழ்ச்சி நிரலைத் தமிழ்ப் பத்திரிகையொன்றில் மாலை 6.30—க்குக் 'கலிகாலம்' என்று போட்டிருப்பதைப் பார்த்து டீ.வி. போட்டிருக்கிறார். ஆனால் குறித்த நேரத்தில் விளையாட்டு நிகழ்ச்சிகளையே காட்டியிருக்கிறார்கள்.

மாலை அலுவலகத்திலிருந்து வந்த என்னிடம் பத்திரிகையைக் காண்பித்து, விஷயத்தைச் சொன்னார். ஓரளவு மலையாளம் தெரிந்த நான் உடனே பத்திரிகையை வாங்கிப் பார்த்து விட்டு, "அத்தை

மலையாளத்தில் 'களிகளம்' என்றால் விளையாட்டு அரங்கம் என்று அர்த்தம். 'களிகளம்' என்பதைத் தமிழில் 'கலிகாலம்' எனப் பத்திரிகையில் அச்சிட்டிருக்கிறார்கள்'' என்று கூறி விளக்கியவுடன்தான் அவர் சமாதானம் அடைந்தார்.

— ந. ஆறுமுகம், நாகர்கோவில் – 2.

## அதில் அப்படியென்ன இருக்கிறது?

OO சமீபத்தில் ஒரு வெள்ளிக் கிழமை இரவு, டீ.வி.யில் ஒலியும்—ஒளியும் பார்க்க அக்கம் பக்கத்தவர்கள் எங்கள் வீட்டுக் கூடத்தில் அமர்ந்திருந்தனர். ஒலியும் – ஒளியும் முடிந்து, செய்திகளும் வாசித்த பின் நாளைய நிகழ்ச்சிகள் என்று கூறினார் அறிவிப்பாளர். டீ.வி. திரையில் கடற்கரையையும், துள்ளி வரும் அலைகளையும் காட்டினர். அடுத்த நாளைக்கான நிகழ்ச்சி ஓர் ஓரத்தில் வெளியாகிக் கொண்டிருந்தது. கூடத்தில் அமர்ந்திருந்த பாட்டி, ''எவ்வளவு நேரமா பீச்சை (கடற்கரை)க் காட்டுகிறார்கள். இதில் பார்க்க அப்படியென்ன இருக்கிறது'' என்றார்.

உடனே என் மகன், ''அதுவா பாட்டி! 'நாளைக்கான நிகழ்ச்சிகளை அறிவிக்கிறோம். ஆனால் அதை நீங்கள் பார்த்தே ஆக வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. விருப்பப்பட்டால் பாருங்கள், இல்லையென்றால் காலாற நடந்து வந்து கடற்கரை மணலில் நிம்மதியாக அமர்ந்து விட்டுப் போங்கள்' என்பதைச் சிம்பாலிக்காகக் காட்டுகிறார்கள்'' என்று கூறக் கூடமே வெடிச் சிரிப்பில் அதிர்ந்தது.

— ராகினி தியாகராஜன்,
சென்னை – 39.

## டீ.வி. 'பங்க்சர்' ஆனது!

OO எனது நண்பருக்கு ஆபீஸில் அடையாள வேலை நிறுத்தத்தினால் அன்று எதிர்பாராத விடுமுறை. பொழுது போகாததனால், சரி டீ.வி.யின் பின்பக்கமெல்லாம் ஓரே ஒட்டடையாக இருக்கிறதே, தட்டிச் சுத்தம் செய்யலாம் என்று நினைத்து, ஒரு கைத்துண்டு சகிதம் உட்கார்ந்து, டீ.வி.யின் பின்பக்கம் திறந்து உள்ளே நன்கு துண்டினால் தட்டிப் புழுதியெல்லாம் சுத்தப்படுத்தினார். ஓர் இடத்தில் துண்டு ஏதோ ஒரு கம்பியில் மாட்டிக் கொண்டது. அதை விடுவிக்கும் போது, ஏதோ சைக்கிள் பங்க்சர் ஆவது போல் 'புஸ்' என்று காற்றுப் போகும் சப்தம் கேட்டது.

முன்பக்கம் இருந்த அவர் பையன் திடீரென்று ''ஐ, டீ.வி. உள்ளே எல்லாம் கண்ணாடி வழியா நல்லாத் தெரியுதுப்பா'' என்றான். நண்பர் முன் பக்கம் வந்து பார்த்தார். பிக்சர் ட்யூப் இருந்த இடத்தில் கண்ணாடி மாதிரி க்ளியராக இருந்தது. டீ.வி.யை போட்டால் சத்தம் வந்தது, வெளிச்சமே வரவில்லை. மெக்கானிக் பார்த்து விட்டு, ''பிக்சர் ட்யூபிலிருந்து காஸ் வெளியேறி விட்டதால், 'ட்யூப் அவுட்' என்று சொல்லி விட்டார். பிறகு என்ன, புது பிக்சர் ட்யூப் ரூ. 650, ஆட்டோ சார்ஜ், மெக்கானிக் ரிப்பேர் செலவு!

— ஐ.ஓ.சி. சிவாஜி, சென்னை – 83



## அதற்குள்ளாகவா குழந்தை?

OO என் அண்ணன் மகளின் முதலாம் ஆண்டு திருமண நிறைவு விழா, சென்ற மாதம் நடந்தது. அவள் திருமண வீடியோ கேசட்டின் முடிவிலேயே குழந்தையின் ஆண்டு விழா நிகழ்ச்சிகளையும் பதிவு செய்தோம்.

என் தோழி ஒருத்தி சமீபத்தில் தான் அமெரிக்காவிலிருந்து வந்திருந்தாள். அவள் திருமணத்திற்கு வரவில்லை. எனவே, அவளுக்கு அதே வீடியோ கேசட்டைப் போட்டுக் காட்டினோம். ரிஸப்ஷன் வரை பார்த்தாயிற்று. உடனே தொடர்ந்தன குழந்தையின் ஆண்டு விழா நிகழ்ச்சிகள். உடனே என் தோழி, ''என்னடி, இப்பத்தானே ரிஸப்ஷன் முடிந்தது. அதற்குள் எப்படிக் குழந்தை!'' என்றாளே பார்க்கலாம். சிரிப்பொலியால் வீடே அதிர்ந்தது!

— வ. வசுதா, சென்னை – 17.

## மெகானிக்கின் பெருந்தன்மை!

OO நாங்கள் கறுப்பு—வெள்ளை டீ.வி. வாங்கிச் சரியாக ஒரு வருடம் முடிந்து மூன்று நாட்களானதும் கோளாறு வந்து விட்டது. சப்தம் வந்ததே தவிர, படம் தெரியவில்லை. காரண்டி பீரியட் முடிந்து விட்டதால் ரிப்பேர் செலவு கையைக் கடிக்குமே என்ற கவலை! என் மாமனார் ரொம்பச் சிக்கனம். கம்பெனிக்குப் ஃபோன் செய்து மெகானிக்கை வரச் சொன்னேன். காரண்டி பீரியட் முடியாத மாதிரியே சொல்லியிருந்தேன். மோட்டார் சைக்கிளில் மெகானிக் வந்து சரிபார்த்து நன்கு படம் தெரிகிற அளவுக்கு டீ.வி.யைச் சரி செய்தார். ''சார்ஜ்'' கேட்கப் போகிறாரே என்ற கவலை ஒருபுறம். நல்லவேளை ஒரு வருடம் ஆகவில்லையென்று நான் சொன்னதை நம்பி விட்டதாகத் தோன்றியது. ''நன்றாக ஏமாந்து விட்டாரே'' என்று கூடத் தோன்றியது. அவரை வழியனுப்ப வாசல் வரை வந்தேன். மெகானிக் மோட்டார் சைக்கிளில் ஏறும் போது மெல்லச் சிரித்துக் கொண்டே சொன்னார்: ''காரண்டி பீரியட் முடிந்து மூன்று நாட்களாகி விட்டன. பழைய தேதி போட்டுக் கம்ப்ளைண்ட் எழுதிக் கொண்டு வந்து சரிபார்த்தேன். சார்ஜ் வேண்டாம்.'' – அவருடைய பெருந்தன்மையை எண்ணி அசடு வழிந்தேன்.

— உஷா கணேஷ், சென்னை – 92.

# தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு
# ஆர்.சி.எப்பின்
# உளமார்ந்த நல்வாழ்த்துக்கள்

மண் செழித்து பொன் விளைய
சுபலா 15:15:15 20:20:0
காம்ப்ளக்ஸ் உரங்கள்















**ராஷ்ட்ரீயா கெமிக்கல்ஸ் அண்டு பெர்டிலைசர்ஸ் லிமிடெட்**

(இந்திய அரசாங்க நிறுவனம்)
'பிரியதர்சினி' ஈஸ்டர்ன் எக்ஸ்பிரஸ் ஹைவே, பம்பாய்-400 022
சென்னை வட்டார அலுவலகம்:
No. 3, குஞ்குமார் ரோடு,
நுங்கம்பாக்கம்,
சென்னை — 600 034. போன்: 866245



* ...தாக்க முயற்சி.

# 'சோ'வைத் தாக்க நடந்த முயற்சி பற்றி...?

* ஆர். பிரகாசம், நல்லாலம்.

? இரக்க சிந்தனை எப்போது உதயமாகிறது?

! நம் நாட்டில் திரும்பிய பக்கமெல்லாம் இரக்க சிந்தனை உருவாக்கும் காட்சிகளே!

* பாக்யமுத்து, திருச்சி — 20.

? சினிமாக் கட்டணம் உயர்ந்தும் கூட்டம் குறையலையே?

! கட்டணம் உயர்ந்த நிலையிலும் குறைந்த செலவில் இரு புலன்களுக்குக் கிடைக்கும் பொழுது போக்கு அது ஒன்றாகவே இருப்பதால்.

* ஜி. ராஜப்ரியா, வலங்கை.

? ஐந்தாம் வகுப்பு வரை பெண்களையே ஆசிரியர்களாக நியமிக்க அரசு முடிவு செய்திருப்பது பற்றி...?

! ஒரு காலத்தில் சம உரிமைகளுக்காகப் போராடி வந்த பெண்களை இப்போது சலுகைகள் கேட்காமலே வந்தடைகின்றன. எல்லாம் அரசியல் நோக்கில் வோட்டு அறுவடையைக் கருதி அளிக்கப்படுகிறவை. 'நாங்கள் கேட்பது சம உரிமைகளைத்தான் சலுகைகளை அல்ல' என்று கூற எந்த மாதர் நலச் சங்கத்துக்கும் துணிவில்லையே? இவ்வாறு சலுகைகளை வளர்த்துக் கொண்டே போவது புதிய பிரச்னைகளைத் தோற்றுவிக்கும்.

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

பி. எல். பரமசிவம்,
7, செல்லையா காம்பவுண்டு,
பாம்பன் ரோடு, மதுரை — 1.

* எம். உஷாராணி, போடிநாயக்கனூர்.

? சமீபத்தில் தாங்கள் கண்ட வேதனையான நிகழ்ச்சி?

! நண்பர் ஒருவரின் தாயார் இறந்து விட்டார். கண்ணம்மாப்பேட்டை சுடுகாட்டில் கட்ட வேண்டிய கட்டணம் ரூ. 185 தான். ஆனால் மயான ஊழியர்கள் வற்புறுத்தி வாங்கியது ரூ. 500—க்கும் அதிகம்! வேதனைக்கு மேல் வேதனை அளிக்கும் இந்தக் கொடுமைக்கு ஒரு முடிவு ஏற்படாதா?

* பி. எஸ். வாசன், ஈரோடு.

? வலம்புரி ஜான் என்ன செய்து கொண்டிருக்கிறார்?

! கோபாலபுரத்தின் கதவுகளைத் தட்டிக் கொண்டிருக்கிறார். திறக்கப்படுமா? தேவனுக்கே வெளிச்சம்!

* பா. புஷ்பமுருகேச ராஜன், சின்னமனூர்.

? கிரேக்க நாட்டின் முன்னாள் பிரதமர் எழுபது வயதில் காதல் திருமணம் செய்து கொண்டிருக்கிறாரே?

! தனி மனிதர் உரிமைகளில் தலையிட நமக்கு அதிகாரம் இல்லை. எனினும் சின்ன வீடு வைத்துக் கொள்வதைவிடப் பகிரங்கமாக முன்வந்து திருமணம் செய்து கொள்வது எவ்வளவோ மேல் என்பதால் அந்த நேர்மை நமது பாராட்டைப் பெறுகிறது.

* க. ராம்குமார், கும்பகோணம்.

? 'தேசிய முன்னணி ஒரு தேசியக் கட்சியே அல்ல' என்று சஞ்சீவ ரெட்டி கூறியிருக்கிறாரே?

! அது உண்மை. அது ஒரு கட்சியல்ல. பல கட்சிகளின் கூட்டணியே. தொகுதி உடன்பாடு காரணமாகக் காங்கிரஸைத் தோற்கடிப்பது அதற்கு ஒருவேளை சாத்தியமாகலாம். ஆனால் அதன் பிறகு அமையும்

நெல்லிக்காய் மூட்டை அரசு விரைவில் பிரிந்து சிதறும். சரித்திரம் திரும்ப நிகழும்.

* வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி, சென்னை.

**? தம்மிடம் யாரும் யோசனை கேட்க மாட்டேனென்கிறார்கள் என்று மொரார்ஜி தேசாய் அங்கலாய்க்கிறாரே?**

! ஒரு முன்னாள் பிரதமர் இப்படி அலுத்துக் கொள்வது அழகல்ல. முக்கியமான பிரச்னைகளில் அவருக்கு வலுவான கருத்து இருக்குமானால் அதனைப் பத்திரிகைகளுக்கு அறிக்கையாக அனுப்பலாம். நிச்சயம் பிரசுரமாகும். யோசனை ஏற்கப்படுகிறதா இல்லையா என்பது பற்றிக் கவலைப்படாமல் தமது கடமையை அவர் செய்து கொண்டு போக வேண்டும். அல்லது அரசியலிலிருந்து முற்றிலும் விலகி விட்டதாகக் கூறிச் 'சிவனே' என்று இருக்க வேண்டும்.

* வி. சுந்தரராமன், குத்தாலம்.

**? துக்ளக் ஆசிரியர் 'சோ'வைத் தாக்க முயற்சி செய்த அராஜகச் செயல் பற்றி...?**

! கண்டனத்துக்குரிய, கேவலமான, கோழைத்தனமான, ஜனநாயக விரோதமான செயல் என்பதில் சந்தேகமேயில்லை. ஆனால் 'தி. மு. க. ஆட்சியில்தான் இப்படிப்பட்ட அராஜகங்கள் நடக்கும்' என்பது போல் 'சோ' கூறியிருப்பது நியாயமல்ல. ஜனநாயகப் பண்புகளைக் கடைப்பிடிக்காத வன்முறையாளர்கள் உலகெங்கும் எல்லா ஜனநாயக நாடுகளிலும் உண்டு.

* சி. மணி, புத்தனாம்பட்டி.

**? பாதாம் பருப்பு, முந்திரிப் பருப்பு — சுவை எதில் அதிகம்?**

! இலேசாய்ச் சிவக்க நெய்யில் வறுத்துக் கொஞ்சம் உப்புத் தூவி, அளவாகக் காரமும் சேர்த்தால் என் வோட்டு முந்திரிக்கே... ஆனால்... ஹிஹி... ஓசியில் கிடைப்பதாக இருக்கணும்!

* எல். மாறன், மேல்பட்டி.

**? தராசு பதிலில் பத்திரிகைக் காகித விலை உயர்வைக் கண்டித்தும் பயனில்லை என்று பதில் கூறியிருந்த வேளையிலேயே, பத்திரிகைக் காகிதத்துக்கான தீர்வைகள் குறைக்கப்பட்டுள்ளதாகத் தினமணியில் செய்தி வெளியானது குறித்து...?**

! விலை ஏற்றம் முழமென்றால் தீர்வை குறைப்பு ஓர் அங்குலம். நிற்க. அந்தச் சலுகையும் குறைந்த விற்பனை எண்ணிக்கை உடைய சிறு பத்திரிகைகளுக்குத்தான். இப்படிப் பல குழப்பங்களைச் செய்து மக்களையும் குழப்பி அரசு தனக்கு நல்ல பெயரைச் சம்பாதித்துக் கொள்ளவும், பத்திரிகைகளுக்குக் கெட்ட பெயரைச் சம்பாதித்துத் தரவும் முயற்சி செய்கிறது. பத்திரிகைக் காகிதத்தின் உற்பத்தி, இறக்குமதி, விலை நிர்ணயம் முதலியவற்றை அரசு தன் பிடியில் சிக்க வைத்திருக்கும் வரை மெய்யான பத்திரிகைச் சுதந்திரம் என்பது இல்லை. ஊழலும் கறுப்புச் சந்தையும்தான் அதிகரிக்கும்.

* பி. எல். பரமசிவம், மதுரை.

**? தந்தத்துக்காக ஆப்பிரிக்க யானைகள் கொல்லப்படுவதைத் தடுக்கச் சுமார் ஐந்து கோடி மதிப்புள்ள யானைத் தந்தங்களைத் தீவைத்துக் கொளுத்திய கென்யா ஜனாதிபதி டேனியல் ஆரப்மாயின் செயல் திறனைப் பாராட்டுகிறீர்களா?**

! யானை வேட்டையாடித் தந்தம் கடத்துகிறவர்களைக் கண்டுபிடித்துக் கடுமையான தண்டனை வழங்கி அதனைப் பிரசாரம் செய்வதுதான் யானைகளைப் பாதுகாக்க வழி. விளம்பரத்துக்காக டேனியல் கொளுத்தியது கைப்பற்றப்பட்ட, அரசுடைமையான தந்தங்களை. அவை தேசிய சொத்து. அவை போதைப் பொருள்களைப் போல் யாருக்கும் எந்தத் தீங்கும் விளைவிக்கப் போவதில்லை என்னும்போது அவற்றைக் கொளுத்தியதால் அந்நாட்டுக்குத்தான் பெரு நஷ்டம். எனவே டேனியலின் செயலை உணர்ச்சி பூர்வமாகப் பாராட்டினாலும் அறிவு பூர்வமாக ஏற்றுக் கொள்ள முடியவில்லை!



* அங்கலாய்ப்பு...



* தட்டுகிறார்!



* ஓர் உண்மை...

# "உங்களைப் 'பம்ப்' அடிக்கச் செய்ய வேண்டும்!"




* 'நிணறடிக்கும் மருத்துவச் செலவுகள்' கட்டுரை மிக நன்றாக இருந்தது. கட்டுரையின் முடிவில் குறிப்பிட்டுள்ளபடி, உடல் உறுப்புகளைத் தானம் செய்ய அனைவரும் முன் வரவேண்டும்.

திருச்சி – 14. இரா. கிருத்திகா.

* நமது உடலில் ஏற்படக்கூடிய சிறு நோயையும் பெரிதாக்கி, மருத்துவச் செலவைப் பூதாகர மாக்கும் வகையில் செயல் படும் மருத்துவ உலகின் அவலங்களை வெளியே சொல்ல முடியாமல் பொருமிக் கொண்டிருந்த எண்ணற்ற மக்களின் உள்ளப் பிரதி பலிப்பாக இருந்தது. 'திணறடிக்கும் மருத்துச் செலவுகள்' கவர் ஸ்டோரி.

திருச்சி – 16. எஸ். ராஜ கோபால்.

* அட்டைப்படக் கட்டுரை, மருத்துவத்துறையில் உள்ள கடினங்களையும், சிரமங்களையும் விளக்கியது. இதற்கெல்லாம் அரசுதான் நல்லதொரு வழியை மேற்கொள்ள வேண்டும். டாக்டர் ஜெகதீசன் கூறியவை யாவும் உண்மையே. அதிலும் அக்கா லத்து டாக்டர்களின் பொறுமையும், இக்காலத்தில் பணத்துக் காக அவசரமாகத் தொழில் செய்வதும் நூற்றுக்கு நூறு உண்மை.

கோழிக்கோடு. கிருஷ்ணன்.

* கறுப்புப் பண ஒழிப்பு பற்றி நமது அரசு விவேகமாகச் சிந்தித்தால் சிக்கல்களிலிருந்து விடுபடலாம் என்று தாங்கள் எழுதிய தலையங்கம் சூப்பர். ஆனால் சுயநலம் பெரிதாயிருக்கும் போது மக்களுக்காகச் செயல்படும் விவேகம் எப்படி வரும்.

குமராட்சி. எம். பிரபு.

* 'அலெக்ஸாந்தர் கூறிய கசப்பான உண்மைகள்' – தலையங்கம் அருமை. கறுப்புப்பணத்தை வளரச் செய்வதன் மூலம், பணவீக்கமும், விலைவாசி உயர்வுமே ஏற்படும் என்ற கவலையை ஆட்சியாளர்கள் உணர்ந்த பாடில்லை. இதை உணராத ஆட்சியாளர்கள் அடையப்போகிற பலனையும் முடிவாகச் சொல்லி விட்டார்கள். இதுவே பலிக்கப் போகிறது!

'அமிர்தலிங்கத்தின் உயிர்த் தியாகம்' – உபதலையங்கத்தில்

குறிப்பிடப்பட்ட கருத்துக்கள் ஒவ்வொரு தமிழ் நெஞ்சத்திலும் உள்ள கருத்துக்களே.

இடையகோட்டை. சாகுல் அமீது – ஆசாத்.

* அ.தி.மு.க தலைமைப் பொறுப்பை ஏற்பீர்களா என்று எங்கள் தாரகையைப் பார்த்துக் கேட்க எப்படித்தான் மனசு வந்ததோ அந்த வாசகருக்கு.

திருச்சி – 3. ராஜேந்தர்பிரியன்.

* இந்த வார ஜோக்குகள் எல்லாவற்றையும் மிஞ்சி விட்டது. 'மூட்டு வலிக்குப் பாட்டி வைத்தியம்' தாரக பதில், உண்மையில் வாய்விட்டுச்சிரித்தேன்.

திருச்சி – 2. ஆற்காடு எழிலன்.

* 'கண்முக்கியமா? சட்டம் முக்கியமா?' என்று கேட்டு, அதற்கு உடனடி நடவடிக்கை எடுத்த காமராஜரின் உறுதியான – திறமையான நிர்வாகத்தை நினைத்தாலே 'அப்படி ஒரு காலம் வராதா?' என்று மனம் ஏங்குகிறது.

தேனி. தேனிமுருகேசன்.

* 'பம்ப் அடிப்பதால் பலன் உண்டு" என்று ஜோக்குகளை வெளியிட்டுப் பம்ப் அடிப்பவர்களின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கொண்ட உங்களை விடிய விடியப் பம்ப் அடிக்கச் செய்ய வேண்டும்.

அயன்புரம். த. சத்திய நாராயணன்.

* "வரம்" படத்தின் விமர்சனத்தைக் காலம் கடந்து தாமதமாகக் கொடுத்திருந்தாலும் தரமான முறையில் இருந்தது.

சென்னை – 23. அயன்புரம் கொஜிபாபு.

* வரவர எல்லாத் திரைப்படத்திற்கும் பரவாயில்லை – சுமார் என்கிறீர்களேயொழிய எங்கள் காசை வீணாக்குகிறீர்களே!

கும்பகோணம். கே.ஆர். பவானி.

* சத்தியமங்கலம் எங்கள் ஊரிலிருந்து மேற்கேயிருக்கிறதா, தெற்கேயிருக்கிறதா என்று கூட எனக்குத் தெரியாது. ஆனாலும் உங்கள் கட்டுரையால் சத்தியமங்கலத்தையே ஒரு சுற்றுச் சுற்றி வந்தது போல ஓர் உணர்வு ஏற்படுகிறது.

மங்கைநல்லூர். ஆர். செல்வ ராணி.

* வேதுர்ஷிணியின் 'புதுடவுசர்' சிறுகதை கிராமிய வாடையோடு அருமையாக மணந்தது. கதாசிரியர் எந்த இடத்திலும் கோட்டை விடாமல், கடைசி வரைக்கும் கதையில் கிராமிய மணம் கமழ எழுதியிருந்தது பாராட்டுக்குரியது.

திருப்பூர். என். பெனிட்டோ குமார்.

* வையவன் சார், ஒரு காதல் ஜோடியைச் சேர்த்து வைத்த பாஸ்கரனின் விலாசம் கொடுங்கள்! நேரில் போய்ப் பாராட்ட வேண்டும் என்று ஆவலாய் உள்ளது! உங்களின் "செய்தி" எங்களுக்கு இனித்தது.

கடலூர் – 2. ஆர். வேலுமணி.

* வெறும் கதைகளை மட்டுமே படித்து விட்டு என்ன செய்வது என்று புரியாமல் புனிதமான உறவைத் தவறாக எடைபோட்டுக் கொச்சைப் படுத்தத் தலைப்பட்ட பெண்ணுக்குச் சரியான பாதையைக் காட்டிய 'குழ்நிலை மயக்கங்கள்' சிறுகதை அருமை.

அரூர். மு. மதிவாணன்.

* சக நண்பர்களின் துர்போதனையால், குடும்பம் எனும் சோலையில் ஏற்படும் சச்சரவுகளை 'தூண்டில்' சிறுகதை மூலம் நன்கு சித்திரித்திருக்கிறார் தமிழ்வியன். மைதிலியின் தன்னிலை விளக்கம், இன்றைய பெரும்பாலான குடும்பப்பெண்களின் தன்னிலை விளக்கமாகும்.

திருச்சி – 4. தாயு. செந்தில் குமார்.

வட்டமேஜை

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி—1989 முடிவுகள்

* நடுவர் குழு பரிசீலித்த போது...



பூர்ணம் விசுவநாதன், இந்திரா பார்த்த சாரதி, நிர்மலா சுரேஷ், புனிதன், கி. ராஜேந்திரன் (ஆசிரியர், கல்கி) ஆகியோரைக் கொண்ட நடுவர் குழு, கடந்த 16.7.89 அன்று பின்வரும் கதைகளைப் பரிசுக்குரியவையாகத் தேர்ந்தெடுத்தது.

OO ''அரும்பு'' — ரூ. 1500 முதல் பரிசு பெறும் இக்கதையை எழுதியவர்: மேலாண்மை பொன்னுச்சாமி (மேலாண் மறைநாடு, காமராஜர் மாவட்டம்—626 127).

OO ''உயிர்க் குருவிகள்'' — ரூ. 750 இரண்டாவது பரிசு பெறும் இக்கதையை எழுதியவர்: முருகேஷ், (12/47, ராமலிங்க நகர், குருசாமி பாளையம், சேலம் மாவட்டம்). (அறிமுக எழுத்தாளர்).

OO ''சபதம் செய்யாத பாஞ்சாலிகள்''— எழுதிய எஸ். பட்டம்மா (134, சாத்தார வீதி, ஸ்ரீரங்கம், திருச்சி — 6) மற்றும் ''வருகை'' — எழுதிய சுப்ரபாரதிமணியன் (8—2—409 கம்மர் குடா, செகந்திராபாத்—3) ஆகிய இருவரும் தலா ரூ. 375 வீதம் மூன்றாவது பரிசைப் பெறுகிறார்கள்.



* நிர்மலா சுரேஷ்



* இந்திரா பார்த்தசாரதி



* பூர்ணம் விசுவநாதன்



* புனிதன்

OO மற்றும் பிரசுரத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகள் பதினாறு. (இவற்றின் விவரம் அடுத்த இதழில்.).

OO பரிசு பெற்றவர்களுக்கு வாழ்த்துக்கள். பல்லாயிரக்கணக்கில் கலந்து கொண்டு இப்போட்டியைச் சிறப்பித்த எல்லா எழுத்தாளர்களுக்கும் கல்கி தனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

— ஆசிரியர்

படங்கள்: யோகா

# மூட்டு வலியா?
# போக்கிடுங்கள் மூவ் மூலம்.

moov
moov
moov
moov

## முழங்கால் மூட்டு வலியா?
## பின்புற மூட்டு வலியா?

உங்கள் உடலின் மூட்டுகள், குறிப்பாக முழங்கால்களிலும் பின்புறமும் வயதானாலோ அல்லது கடின செயல்களினாலோ, இவை வலி ஏற்படும் இடங்களாக விளங்குகின்றன. மூட்டுகளில் லூப்ரிகேட்டிங் திரவம் சுரப்பது குறைவதனால், அதில் உராய்வு ஏற்பட்டு, வலிக்கவும் அசௌகரியத்திற்கும் காரணமாகிறது.

## ஆழ ஊடுருவிச் செல்வது

மூவில் மிக அடர்த்தியான விரைவில் ஆவியாகிற இயற்கை எண்ணெய் அடங்கியுள்ளது. அது சருமத்தின் ஊடே மூட்டுவலி ஏற்படுத்தும் பாகம்வரை ஆழமாக ஊடுருவிச் செல்கிறது.

## விரைந்து செயலாற்றுவது

மூவிலுள்ள இயற்கையான எண்ணெய், அதிக வீரியம் வாய்ந்த நிவாரண சாறுகளைக் கொண்டு — உடனடியாக இரத்த ஓட்டத்தை அதிகரிக்கச் செய்து, லூப்ரிகேட்டிங் திரவத்தை மீட்டுப் பெற்றுத் தந்து, விரைவாக நிவாரணம் அளிக்கிறது.

## நீடித்து செயலாற்றுவது

மூவைத் தடவியதும், இதன் ஒப்பற்ற விதம் 'பார்முலேட்' செய்த 'பேஸ்' இயற்கையான எண்ணெயைத் தொடர்ந்து செலுத்தி, வலிக்கும் இடத்தை நீண்ட நேரம் இளஞ் சூடாகவும், மிருதுவாகவும் விளங்க செய்கிறது. இது சருமத்தில் எரிச்சலை உண்டுபண்ணுவதில்லை. வலியற்ற இயக்கத்தை மீண்டும் பெறுகிறீர்கள். நீங்கள் மீண்டும் பழையபடியே ஓடியாடி வேலை செய்யலாம்.

**உண்மையாகவே உடனடி நிவாரணம்**

# மூவ்

மூட்டு வலி நிவாரணி



PARAS PHARMACEUTICALS PVT. LTD.
Jeendra Chambers, Ashram Road, AHMEDABAD 380 014

Interact: PPPL: 169 : Tam.

# அடுத்த நூற்றாண்டு



* இன்டெல் i860 என்கிற அதிசயச் சில்லை வடிவமைத்த N. 10 அணி. இந்தியர்கள் எத்தனை பேர் என்று எண்ணிப் பாருங்கள்.....

①

''உண்மையிலேயே 21 – ஆம் நூற்றாண்டில் விஞ்ஞான, தொழில்நுட்ப வளர்ச்சி உலக அரங்கில் எப்படிப் பிரமிக்க வைப்பதாக இருக்கும்? அந்த வளர்ச்சிக்கு ஏற்ப உடல், மன உணர்வு ரீதியில் நம்மை நாமே தயார்ப்படுத்திக் கொள்வது எப்படி? மேல்நாடுகளுடன் போட்டி போட்டுக் கொண்டு வளர, நாம் எத்தகைய மனப்பான்மைகளை வளர்த்துக் கொள்ள வேண்டும்? நிகழப் போகும் பெரிய மாறுதல்கள் மனித குலத்தை மேம்படுத்தப் போகின்றனவா? அப்போதும் நம் கிராமங்களில் குடிநீருக்கு மைல் கணக்காக நிற்கும் நிலை மாறாதா?'' இவ்வாறு கல்கி ஆசிரியர் கி. ராஜேந்திரன் எனக்கு ஒரு கடிதத்தில் கேட்டு எழுதியிருந்ததில் கிளைத்தது இந்தக் கட்டுரைத் தொடர்.

அடுத்த நூற்றாண்டுக்கு இன்னும் பத்து வருடங்கள் கூட இல்லை. இந்தக் கட்டுரைத் தொடரைப் படிக்கும் பெரும்பான்மையினர் அடுத்த நூற்றாண்டில் அடியெடுத்து வைக்கப் போகிறீர்கள். அதனால் ஏதாவது 'ரீல்' விட்டால் மாட்டிக் கொள்வேன்.

பத்து வருஷம் என்பது மனித சரித்திரத்தில் அத்தனை பெரிய விஷயமில்லை. ஓர் எளிய, சிறிய, ஆதிகாலத்து 'மாலிக்யூல்' விபத்திலிருந்துமனிதன் பரிணமித்துச்செல்களாக மாறி, நீரில் மிதந்து, நிலத்தில் தவழ்ந்து, நீரும் நானுமாக மாறக் கோடிக் கணக்கான வருடங்களாகியிருக்கின்றன.

அதனால் பத்து வருஷம் என்பது கண்ணிமைக்கும் நேரத்துக்குக் கூடச் சமனில்லை. இந்தப் பத்து வருடங்களில் இந்தியாவில் பிரமிக்கத்தக்க மாறுதல்களை எதிர்பார்ப்பது சரித்திர அறியாமை. விரைவான மாறுதல்களைத் தாங்கி, வாங்கிக் கொள்ளும் தகுதி நம் இந்தியச் சமூகத்தில் இல்லை. அதற்கான இயக்கம், அமைப்பு நம்மிடம் இல்லை.

இன்றைய தினம் நமக்கு ஒரு டெலிபோன் இணைப்புக்கு மனுப் போட்டுக் கிடைக்கப் பத்து வருடங்கள் ஆகின்றன. கொலை காரனைத் தண்டிக்கப் பத்து வருடங்கள் ஆகின்றன. மந்திரி நாட்டிய அடிக்கல் கட்டடமாக மாறப் பத்து வருஷங்கள் ஆகின்றன. அதனால் பத்து வ ரு ட ங் க ளி ல் நம் குடிநீர் வரிசைகள் மாயமாய் மறையப் போவதில்லை. மைல் கணக்காக நிற்கா விட்டாலும் ஒரு பத்துப் பேராவது கி. பி. இரண்டாயிரத்தில் குடிநீருக்கு நிற்பார்கள்.

இருப்பினும் இந்த நூற்றாண்டின் இறுதிப் பத்து வருடங்கள், ஒரு விதத்தில் ஒரு சிகரம்தான். அதனால் வெகு வேக மாறுதல்கள் நிகழும் சாத்தியங்கள் அதிகம் தான். போன நூற்றாண்டின் இறுதிப் பத்து வருடங்களும் இந்த நூற்றாண்டின் இறுதிப் பத்து வருடங்களும் மிகவும் வேறுபட்டவை.

**சுஜாதா**

எப்படி என்று சொல்கிறேன்...

மின்சாரம் கண்டுபிடிக்கப்பட்டது கி. மு. 600 – இல், கிரேக்கர்களால். அதற்கப்புறம் கி. பி. 1672 வரை இந்த இயலில் எதுவுமே நிகழவில்லை. ஆட்டோ வான் கெரிக் என்பவர் ஒரு கந்தகப் பந்திலிருந்து நிறைய மின்சாரம் உரசிக் காட்டினார்.

பின்னர் 1729 – இல் ஸ்டீபன் கிரே என்பவர் உலோகங்கள் மூலம் மின்சாரம் பாயும் என்று கண்டுபிடித்தார். அப்புறம் பாஸிட்டிவ், நெகட்டிவ் மின்சாரம். பின் 1820 – இல் அலஸ்ஸாண்ட்ரோ வோல்ட்டா என்பவர் மின்கலம் பாட்டரியைக் கண்டு பிடித்தது ஒரு திருப்பு முனை.

**மி**ன்சாரத்தின் முதல் இரண்டாயிரத்து நானூறு வருட சரித்திரத்தில் மூன்று அல்லது நான்கு முக்கிய நிகழ்ச்சிகளே நிகழ்ந்திருக்கின்றன. 1820 – லிருந்து இந்த நூற்றாண்டின் இன்றைய தினம் வரை, மாறுதலின் வேகம் படிப்படியாக அதிகமாகி, மின்னியல் மின்னணுவியலாகி நூற்றாண்டின் ஆரம்பத்தில் வால்வு, அதன்பின் ட்ரான்ஸிஸ்டர் (1948 – இல்) கண்டுபிடிக்கப்பட்டு, ஐஸி என்னும் சிலிக்கன் சில்லுகள் ஐம்பதுகளில் கண்டுபிடிக்கப்பட்டு, அறுபதுகளில் அவைகளின் நுட்பம் அதிகரித்து, எழுபதுகளின் ஆரம்பத்தில், ஒரு சிலிக்கன் சிறிய சதுரத்தில் ஆயிரம் இணைப்புக்கள் கொண்ட மைக்ரோப்ராசஸர்கள் கொண்டு வந்து விட்டுப் பிரமித்தார்கள்.

அதிலிருந்து பதினெட்டு வருடங்கள் கழித்து, இன்று இன்டெல் கம்பெனியின் தயாரிப்பான ஐ 860 என்கிற சிலிக்கன், அரை இஞ்ச் சதுரத்தில் பத்து லட்சம் இணைப்புக்கள் கொண்டு வந்து 'க்ரே' என்று சொல்லக் கூடிய மிலியன் டாலர் ஸூப்பர் கம்ப்யூட்டர் திறமையை உங்கள் உள்ளங்கைக்குக் கொண்டு வந்து விட்டார்கள்.

விலை 750 டாலர்!

எனவே பத்து வருடங்கள் என்பது எப்போது பத்து வருடங்கள் என்பதைப் பொறுத்து இருக்கிறது. இன்றைய தினம் நாம் ஆயிரக்கணக்கான விஞ்ஞானிகளின் உழைப்புக்களின் உன்னத உச்சியில் சுகமாக உட்கார்ந்து கொண்டிருக்கிறோம். நியூட்டன்களும் மாக்ஸ்வெல்களும், ஐன்ஸ்டைன்களும் கட்டிய கோட்டையில் வீற்றிருக்கிறோம். எடிஸன்களும், கிரஹாம் பெல்களும் செலவழித்த, தூக்கமில்லாத ராத்திரிகளின் பயன்களை அனுபவித்துக் கொண்டிருக்கிறோம். அவர்கள் தயவால் அடுத்த பத்து வருஷங்களில் மேலைநாட்டு விஞ்ஞானத்தில் நிச்சயம் பிரமிக்கத் தக்க மாறுதல்கள் இருக்கத்தான் போகின்றன. அந்த மாறுதல்களின் எதிரொலிகளை நம் நாட்டிலும் உணரத்தான் போகிறோம்.

அவை எந்த அளவில் நம் வாழ்க்கை நிலையைப் பாதிக்கப் போகின்றன என்பதை அறியுமுன், மாறுதலை ஏற்றுக் கொள்ளத் தேவையான அடிப்படைத் தகுதிகளையும் சாதனங்களையும் கவனிக்கலாம்.

முதலில் படிப்பு வேண்டும். எல்லா விஞ்ஞான மாறுதல்களும் படித்தவர்கள் கொண்டு வந்ததுதான். அவர்களுக்கேற்ற ஆராய்ச்சி வசதிகள் இருந்த மேலைநாடுகளில்தான் பெரும்பாலும் நிகழ்ந்திருக்கின்றன. அங்கே ஒரு ராமன் இங்கே ஒரு ராமானுஜன் மட்டும் போதாது. நம் கல்வி அமைப்பில் மாறுதல் ஏற்பட்டு, நம் புத்திசாலி இளைஞர்கள் வெளிநாட்டுக்கு ஓடாத சூழ்நிலையை உண்டாக்குவது மிகவும் அவசியம். நான் முன்பு சொன்ன இன்டெல் கம்பெனியின் அதிசயச் சதுரத்தைக் கண்டு பிடித்தவர்களில் ஆறு பேர் இந்திய இளைஞர்கள். ஆனால் அவர்கள் இந்திய நாட்டில் இதைக் கண்டுபிடித்திருக்க முடியாது. இந்தியாவில் வசதி இல்லை. வசதி இருந்தாலும் ஒத்துழைப்பு இல்லை. மேலை நாடுகளின்,

* i860 – இன் உள்ளமைப்பு. ஒரு பெரிய கம்ப்யூட்டருக்கு உண்டான அத்தனை இணைப்புக்களும் இந்த 0.4 × 0.6 அங்குல நீள் சதுரத்தில் அடங்கியுள்ளன.



ஜப்பானின் வெற்றிக்கு முக்கிய காரணம் ஒத்துழைப்புத்தான். அந்த ஒத்துழைப்புக்கு உதவி செய்யும் ஆராய்ச்சி அமைப்புத்தான். தனித்தனியே மேதைகள் அவர்களுக்குத் தேவையில்லை. ஒத்துழைக்கும் புத்திசாலிகள் போதும் அவர்களுக்கு. மேல்நாட்டு ஆராய்ச்சி அமைப்பு 'சிஸ்டம்' திறமைக்காரர்கள் சேர்ந்து இயங்க வழி வகுக்கிறது.

அந்த அமைப்பை நம் தேசத்தில் கொண்டு வரும்வரை பிரமிக்கத்தக்க மாறுதல்கள் வர முடியாது. 'அக்னி' ஏவுகணை பற்றிப் பெருமையுடன் நாம் பேசிக் கொள்கிறோம். காரணம் அதன் ஆராய்ச்சி முறையில் மேல்நாட்டு வகை சிஸ்டம், அப்ரோச் – அதைக் கொஞ்சமேனும் கடைப்பிடித்ததால்தான். மொத்த வேலையைப் பங்கு பிரித்துக் கொடுத்து, பகுதி பகுதியாக முன்னேற்றத்தைக் கவனித்து, நூற்றுக்கணக்கான விஞ்ஞானிகள் ஒரு ஸிம்ஃபனி வாத்திய கோஷ்டி போல ஒத்துழைத்ததில்தான் வெற்றி. இந்த வகை ஒத்துழைப்பு நம் எல்லாத் தொழில் நுட்பங்களிலும் கொண்டு வரப் பத்து வருஷம் போதாது.

மேலைநாடுகளின் முன்னேற்றத்துக்கு மற்றொரு முக்கியமான காரணம், செய்தித் தொடர்பு. டெலிபோன், டெலக்ஸ், டெலிஃபாக்ஸ் போன்ற சாதனங்களை அவர்கள் சகட்டு மேனிக்குப் பயன்படுத்துகிறார்கள். ஏதாவது ஒன்று தேவையென்றால் விரல் நுனியில் சுழற்றினால் 'ரிங்' அடிக்கிறது. கால் கிடைக்கிறது. சுருக்கமாகப் பேசி வைத்து விடுகிறார்கள். சிங்கப்பூர் போன்ற நாடுகளில் இரண்டு பேருக்கு ஒரு டெலிபோன் இருக்கிறது. டெலிபோன் வேலை செய்கிறது.

நம் நாட்டில் டெலிபோன் சிஸ்டம் இருபது முப்பதுகளில் வெள்ளைக்காரன் வைத்ததிலிருந்து பல இடங்களில் இன்னமும் மாறாமல் ஸ்ட்ரோஜர் இணைப்புக்களாகவே இருக்கின்றன. ஆயிரம் பேருக்கு ஒரு டெலிபோன் என்கிற விகிதாச்சாரத்துக்கே கஷ்டப்படுகிறோம். கிடைத்த போனில் மிக அதிகம் பேசுகிறோம். டெலிபோன் நமக்குச் செய்தித் தொடர்புச் சாதனம் மட்டும் இல்லை. "வெச்சுரட்டுமா வெச்சுரட்டுமா குட்டியோட பேசறியா? குட்டி! பள்ளிக்கூடம் போய்ண்டிருக்கியா, பொறந்த நாளைக்கு என்ன வாங்கிண்டே? அப்புறம் டாமி எப்படி இருக்கு? டாமியைப் பேசச் சொல்லு. அப்புறம் மாமியைப் பேசச் சொல்லு."

டாமி – "வல் வல்"

இம்மாதிரி அனாவசியத்துக்கு இருக்கிற போனையும் வெட்டி முறிப்பதில் டெலிபோன் எக்ஸ்சேஞ்சுகளில் லோடு அதிகமாகிப் பொறுமையில்லாத விரல்கள் மறுபடி மறுபடி முயல, அதனால் வேறு பழுது.

அதிக டெலிபோன்கள் வந்து அதில் நாம் குறைவாகப் பேசக் கற்றுக் கொண்டால்தான் வரும் நூற்றாண்டைச் சந்திக்க முடியும். டெலிபோன்களில் வரும் மாறுதல்களைப் பற்றி அடுத்த வாரம் தொடரும் முன் ஒரு கேள்வி (நான்கில் ஒரு விடையைத் தேர்ந்தெடுக்கவும்.)

டெலிபோனில் லேட்டஸ்ட் என்ன?

1. கார்ட்லஸ் போன்,
2. கார் போன்,
3. பிக்சர் போன்
4. ஐ. எஸ். டி. என்.

சரியான விடை எழுதுபவரில் ஒருவருக்கு என்னுடைய 'கி.பி. 2000–த்துக்கு அப்பால்' என்னும் புத்தகம் பரிசு. அன்னம் வெளியீடு.

போஸ்ட் கார்ட் பதிலுக்கு முடிவு தேதி: 10.8.89.

## யானை பயப்படுமா?



கோயில் யானை ஒன்று நன்றாகக் குளித்து விட்டு நெற்றியில் பட்டை தீட்டிக் கொண்டு சுத்தமாக வந்து கொண்டிருந்தது. ஓர் ஒடுக்கமான பாலத்தில் அது வரும்போது, எதிரே சேற்றில் குளித்து விட்டு ஒரு பன்றி வாலையாட்டிக் கொண்டு வந்தது. யானை ஓர் ஓரத்தில் நின்று அதற்கு வழிவிட்டது. உடனே பன்றி எதிரே வந்த இன்னொரு பன்றியிடம், "பார்த்தாயா, அந்த யானை என்னைக் கண்டு பயந்து விட்டது" என்று சொல்லிச் சிரித்தது.

"அப்படியா?" என்று அந்த யானையைப் பார்த்து இன்னொரு யானை கேட்டது. அதற்கு யானை பதில் சொல்லிற்று: "நான் சுத்தமாக இருக்கிறேன். பன்றியின் சேறு என் மேல் விழுந்து விடக் கூடாதே என்றே ஒதுங்கினேன். நான் ஏறி மிதித்தால் அது துவம்சமாகி விடும். ஆனால் என் கால் அல்லவா சேறாகி விடும்!" என்றது யானை.

ஆணவத்தைக் கண்டு நாம் அடக்கத்தோடு ஒதுங்கி விடுவது நல்லது.

நன்றி: "இந்து சமயத் தத்துவங்கள் ஐந்நூறு"

தகவல்: ஏ. ஜெகதாம்பாள்.



# பொறுத்தது போதும்!

தலைப்பைப் பார்த்ததும் நினைவுக்கு வருவது மனோகராதானே? அடிப்படை ஒற்றுமையும் உண்டு. தாயின் கறை துடைக்கப் போராடிய மனோகரனைப் போலத்தான் இதன் நாயகனும் தாய்க்குக் களங்கம் கற்பித்துத் தற்கொலை செய்து கொள்ள வைத்தவர்களைப் பழிவாங்குவதையே தன் வாழ்க்கை லட்சியமாகக் கொண்டு வாகை சூடுகிறான். (கலைஞர் வசன பாதிப்பு வாகை கிகை என்றெல்லாம் நமக்கும் வருது!)

விஜயகாந்துக்கு இரட்டை வேடம். வக்கீல் ஒன்று. அவரே போட்டுக் கொள்ளும் ஒரு கை ஒரு கண் மைனஸ் வேடம் ஒன்று. இரண்டிலுமே விஜயகாந்த் வஞ்சனையில்லாமல் வியர்வை சிந்தியிருக்கிறார்.

சூப்பர் வசனமாகவே இருக்கட்டும். ஒரு ரேப் கேஸ் வாதத்தில், 'ஊசியில் நூல் கோக்க முடியுமா?' என்று வாதித்து வக்கீல் விஜயகாந்த் தன் கையில் ஊசியையும் எதிர் வக்கீல் கையில் நூலையும் கொடுத்துக் கோக்கும்படி டெமான்ஸ்ட்ரேட் செய்து, 'எனவே, ஊசி அசையாமல் ஒத்துழைப்புக் கொடுத்தால்தான் நூலைக் கோக்க முடியும். அது போல் அந்தப் பெண்ணின் சம்மதத்துடன் ஒத்துழைப்புடன்தான் என் கட்சிக்காரர்...' என்று சொல்லி, வெற்றி பெறுகிறாராம். அபத்தம்! இந்த வாதத்தை முன் மாதிரியாய் வைத்து, வரவிருக்கும் கற்பழிப்பு வழக்குகளையெல்லாம் நீதிபதிகள் தள்ளுபடி செய்யாமலிருக்க வேண்டுமே, கடவுளே!

இன்ஸ்பெக்டர் டேவிட்டின் காரெக்டர் கடைசி நேரத்தில் வெளிப்படும் கட்டத்தில் ஓர் அதிர்ச்சி நிறைந்த அனுதாபத்தைச் சம்பாதித்துக் கொள்கிறார் ஜெய்சங்கர்! தன்னைப் பழிவாங்கும் நோக்கத்தில்தான் விஜயகாந்த் அநியாயத்துக்குத் துணை போகிறார் என்ற உண்மை உறைந்த கையோடு நியாயம் வெல்ல வேண்டும் என்பதற்காகவாவது அந்த நல்லவர் தன்னிலை விளக்கம் தந்திருக்க வேண்டுமே! அவரது உத்தமமான காரெக்டருக்கு அதுதானே முறை? 'அப்புறம் பாதியிலேயே கதை முடிந்தால் மீதியை முடித்துத் தர நீயா வருவாய்?' என்று திரைக்கதை ஆசிரியர் கேட்டால் வேணாம் சார், வம்பு!

நிரோஷா 'உமன்ஸ்லிப்' பிரதிநிதியாம். ஏதோ மாக்ஸி பட்டாளம் திரட்டிக் கொண்டு போராட்டம், நீதிமன்றம் என்று மகா செயற்கையான ஒரு மாடர்ன் கூத்து நடத்துகிறார். பெண்களை இழிவுபடுத்தி வெற்றி காணும் வக்கீலிடம் மகா வெறுப்பும் ஊருக்கு உபகாரியான ஒற்றைக் கையனிடம் பிரேமையும் கொண்டு அவர் தடுமாறுவதும் தவிப்பதும் ஓரளவு சுறுசுறுதான். ஒரு ரௌடிக் கும்பலிடமிருந்து தப்பியோடி ஒரு கட்டட மாடி விளிம்பில் அவர் தொற்றிக் கொண்டு தொங்க, பின்னாலேயே வந்த ஒற்றைக் கையன் அவரைக் காப்பாற்றும் முயற்சியில் மறைத்திருந்த மறு கையை வெளிக்கொணர்ந்து நீட்ட, அந்த ஆபத்து நேரத்திலும் மத்தாப்பூக் கொளுத்தியது போல் முகத்தில் மலர்ச்சி காட்டும் தித்திப்பு மனதில் இனிக்கிறது.

கொஞ்சம்தான் என்றாலும் குருட்டு ரஞ்சனி படுபாந்தம். 'வெய்ட் அன்டில் டார்க்' காஸெட்டைத் திரும்பத் திரும்ப போட்டுப் பார்த்த பாதிப்பு நன்கு வெளிப்படுகிறது. ஆட்ரிஹெப்பர்னின் அதே குருட்டு அதிர்ச்சி, அதே தடுமாற்றம், அதே பரிதவிப்பு. மனசுக்குள் ஐயோ பாவமாய் நிற்கிறார்.

ஸ்ரீவித்யா கதையை ஆரம்பித்து அதே இடத்தில் முடிந்து போனாலும் பின்னணியில் அடிக்கடி தோன்றி ஒலித்துக் கொண்டேயிருக்கிறார். இருந்தாலும் பாவம்தான்.

எத்தனையோ ஓட்டைகள் இருந்தாலும் படத்தின் ஓட்டத்தைப் பாராட்டலாம். இடைவேளை வரும் போது 'அட அதற்குள்ளா?' என்று தோன்றுகிறது.

— பி. எஸ். எஸ்.



# பூப்பல்லக்கு

**பத்மா மாத்ரே**

'லொக்கு, லொக்கு' என இருமிக் கொண்டு கட்டிலோடு ஒட்டிக் கிடந்த தன் கிழட்டுத் தகப்பனாரைப் பார்க்கப் பரிதாபமாய் இருந்தது சுமதிக்கு. வெந்நீர் கொண்டு வந்து குடிக்கக் கொடுத்தாள். நெஞ்சை நீவி விட்டபடி, ''சுடச் சுட இட்லி எடுத்திட்டு வரட்டுமாப்பா?'' என்று கேட்டாள்.

''வேண்டாம்மா. பசியில்லை,'' என்றார் சங்கரன்.

''பசியில்லேன்னு பட்டினி கிடந்தா என்னப்பா அர்த்தம்? இருமுவதற்காவது சக்தி வேண்டாமா? ராத்திரியும் சாப்பிடலை,'' என்று கடிந்தவளை அண்ணி அம்பிகாவின் குரல் அழைத்தது.

''காலங்கார்த்தாலே கிழத்துக்கிட்டே என்னடி கொஞ்சல் வேண்டியிருக்கு? வசுதாவுக்கு ஸ்கூலுக்கு நேரமாகலை? அவளுக்கு டிபன் எடுத்து வை, போ. வரவர இந்த வீட்டிலே ஒண்ணுமே சரியா யில்லை...!'' என்று பாதிக் குத்தலும், பாதி முணுமுணுப்புமாகச் சொன்னாள் அம்பிகா.

'கல்லாட்டம் நிக்கிறியே, உன் குழந்தைகளின் தேவைகளை நீ கவனித்துக் கொண்டால் என்ன! எல்லாத்துக்கும் நான்தான் அகப்பட்டேனோ! கிழமாம் கிழம். நீ எத்தனை நாள் இப்படியே குமரியா இருக்கப் போறேன்னு நானும்தான் பார்க்கப் போறேன்...' என்று மனத்திற்குள்ளாகக் கறுவிக் கொண்டாள் சுமதி.

வெளிப்படையாகச் சொல்லத் தைரியம் வரவில்லை அவளுக்கு. அவளுடைய தைரியமும், கலகலப்பும் அவளுடைய அம்மா இறந்த அன்றைக்கே அவளிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு போய் விட்டன. 'ஒரே பெண்' என்ற செல்லத்துடன் வளர்க்கப்பட்டவள் இன்று வீட்டு வேலைகள் அனைத்தையும் தனியாகச் செய்யும் ஒரு வேலைக்காரியின் இடத்தில் வைக்கப்பட்டிருக்கிறாள். அவள் அப்படி உழைத்தால் தான், அவளுக்கும், அவளுடைய தகப்பனாருக்கும் சோறு கிடைக்கும் என மறைமுகமாய் உணர்த்தப்பட்டாள்.

''நாளைக்கு ஒருத்தனோடு போய்க் குடித்தனம் பண்ணப் போறவ. வீட்டுக் காரியங்களைச் செய்யத் தெரிஞ்சிருக்க வேண்டாமா!'' என்ற சாக்குப் போக்குடன் அவளை ஓட ஓட விரட்டி வேலை வாங்கினாள் அண்ணி அம்பிகா.

அண்ணனின் நான்கு பிள்ளைகளை வளர்க்கும் பொறுப்பு முதற் கொண்டு வீட்டில் சமையல், துடைத்தல், கழுவுதல் எல்லாவற்றையும் தனியாளாகச் செய்ய முடியாமல் தவித்துத்தான் போகிறாள் சுமதி.

பாத்ரூமில் வழுக்கி விழுந்ததிலிருந்து சங்கரன் நடக்க முடியாமல் படுக்கையாகிப் போனார். அவருடைய தேவைகளையும் சுமதிதான் கவனித்துக் கொண்டாள். இரண்டு நாட்கள் டாக்டர் வந்து பார்த்ததோடு சரி. அதற்குப் பின் எந்த மருந்தும், மாத்திரைகளும் இல்லை. ''அதான் டாக்டர் சொல்லிட்டாரே. இடுப்பு எலும்பு பிசகியிருக்குன்னு. வயசும் ஆயிட்டுது. எதுக்கு இப்பப் போய் ஆபரேஷனும் அதுவும். சும்மா வீட்டிலே படுத்துக் கிடக்கட்டும். இவர் எழுந்து நடமாடி என்னத்தைச் சாதிக்கப் போகிறார்!'' என்று அலட்சியமாக மூன்று அண்ணன்மார்களும் ஒதுங்கிக் கொண்டனர். சரி, ஆபரேஷன்தான் வேண்டாம், வேதனையைக் குறைக்க மருந்து கொடுக்கலாமில்லையா?

மற்ற இரண்டு அண்ணன்மார்களும் தாங்கள் வந்தால் மருத்துவச் செலவு தங்கள் தலையில் விழுந்து விடும் என அஞ்சி 'லீவு கிடைக்கவில்லை' என்று எழுதித் தெரிவித்துவிட்டு ஒதுங்கிக் கொண்டனர். ஒருவன் பம்பாயிலும், மற்றவன் கல்கத்தாவிலும் குடித்தனம் நடத்துகின்றனர்.

அவர்களுக்குத் தானும், தந்தையும் பெரிய அண்ணனிடம் நடத்தப்படும் விதத்தை விவரித்து எழுதிப் போட்டாள் சுமதி. அவர்களில் யாராவது தங்களுடன் அழைத்துப் போய் இதைவிடக் கௌரவமான வாழ்க்கையைத் தரமாட்டார்களா என்ற நப்பாசை அவளுக்கு. ஆனால், அவர்களுடைய பதில் அவள் மனத்திலிருந்த கொஞ்சநஞ்ச நம்பிக்கையையும் துடைத்து விட்டது.

''...நீ வீணாக அலட்டிக் கொள்கிறாய். பெரிய அண்ணாவிடம் இருப்பதே உங்க

ளுக்கும், எல்லோருக்கும் வசதி. இங்கே என் வீடு சின்னது. மேலும், அக்கம்பக்கத்தில் எல்லோரும் வடக்கத்திக்காரர்கள். பாஷை தெரியாமல் நீங்கள் கஷ்டப்பட வேண்டியிருக்கும்...'' என்பது போல் இருவரும் அவனுக்குப் பதிலெழுதினர்.

சுமதியால் அவர்களை வெறுக்காமல் இருக்க முடியவில்லை. பிள்ளைகளின் சந்தோஷத்திற்காக, வசதியான வாழ்விற்காக ஓடோடி உழைத்து, உருகித் தவித்த தந்தை இன்று சந்தோஷமாக இருக்கிறாரா நிம்மதியான, கவலையற்ற வாழ்வு வாழ்கிறாரா என்று கவனித்துச் செய்வது பிள்ளைகளின் கடமையல்லவா! என்று நினைத்தாள் சுமதி.

மூத்தவனுக்கு மதிப்பெண்கள் குறைவு என்பதால் எந்தக் கல்லூரியிலும் இடம் கிடைக்காமல் போகவே, சங்கரன் அங்கும் இங்கும் ஓடி, 'டொனேஷன்' என்று பெருந் தொகையை அழுது, இன்ஜினியரிங் காலேஜில் இடம் பிடித்துக் கொடுத்தார். இரண்டாவது பையனுக்கு வேலை கிடைத்த பொழுது டிபாஸிட் கட்டக் கையில் பணம் இல்லாமல் தவிக்க, அம்மா சற்றும் தயங்காமல் தன் நகைகளைக் கழற்றிக் கொடுத்தாள். மூன்றாமவன், 'வேலை செய்கிற இடம் வெகு தொலைவில் இருக்கிறது. தினமும் பஸ்ஸுக்காகக் காத்திருந்து கால் வலிக்கிறது' என்று மூக்கால் அழுது தகப்பனாரின் ஓய்வுத் தொகை அனைத்தையும் பிடுங்கி மோட்டார் சைக்கிள் வாங்கிக் கொண்டு, மீதிப் பணத்தைத் தன் தமையன்மாரோடு பங்கு போட்டுக் கொண்டான்.

''பணத்தை வீணாக்காதீங்கப்பா. சுமதி கல்யாணத்துக்கு நிக்கறா...'' என்று அவர் மறுப்புச் சொன்ன பொழுது, ''நாங்க மூணு அண்ணன்மார்கள் கல்லாட்டம் இருக்கறச்சே ஏம்பா கவலைப்படறீங்க! எங்ககிட்டே நம்பிக்கை இல்லையா?'' என்று அவருடைய வாயை அடைத்தார்கள்.

இன்று அந்த வாக்குறுதி என்னாயிற்று? இருபத்தாறு வயதைக் கடந்து நிற்கும் சுமதிக்கு ஒரு வரன் பார்க்கக் காணோம். அட, அது போகட்டும், பெத்தவன் இருமிக் கொண்டிருக்கிறான், மருந்து வாங்கிக் கொடுக்க நாதியில்லை. இரண்டு வேளைச் சோறும், கட்டிக்கக் கந்தலும்தான் பிள்ளைகளின் கடமையா? அன்பு, பாசம், மனிதாபிமானம் இவையெல்லாம் கடமைக்கு அப்பாற்பட்டவையா? சம்பந்தமே இல்லாதவையா?

தகப்பனாரின் இருமல் சத்தம் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்தது. சுக்குக் கஷாயம் செய்து கொடுத்தாள் சுமதி. இரண்டு நாட்கள் தொடர்ந்து குடித்ததில் வயிற்றுப் போக்கு உண்டாயிற்று.

மாலையில் அண்ணன் ஆபீஸிலிருந்து திரும்பிய பிறகு தயங்கித் தயங்கிச் சொன்னாள். ''அப்பா ரொம்ப இருமுறார் அண்ணா. டாக்டர்கிட்டே காட்டணும்.''

அவன் அவளை முறைத்தான். ''டாக்டர்கிட்டே ஒரு தடவை போனா போயிட்டே இருக்க வேண்டியதுதான். இருமலுக்கெல்லாம் டாக்டர்கிட்டே போய்க் கட்டுப்படியாகுமா? இங்கே பணம் என்ன காய்ச்சா தொங்குது? பணத்தின் அருமை தெரியுமா உனக்கு? போய்ச் சம்பாதிச்சுப் பாரு, தெரியும். சும்மா வீட்டிலே உட்கார்ந்து தின்னுட்டிருந்தா இப்படித்தான் கொழுப்புப் பிடிச்சுப் பணத்தை எங்கே போய்க் கொட்டலாம்னு அலைய வைக்கும்'' என்று அதட்டினான்.

சமயம் பார்த்து அம்பிகா, ''அதுதான் நான் தெனமும் சொல்றேன். இங்கே கிடைக்கிற ராஜ சாப்பாட்டில் கஷ்டம் தெரியாம திமிர் எடுத்துப் போய்க் கிடக்கிறாங்க.



உங்க தம்பிகிட்டே கல்கத்தாவுக்கோ, பம்பாய்க்கோ அனுப்பி வையுங்கன்னா கேட்டாத்தானே!'' என்று ஊசியேற்றினாள்.

சுமதிக்கு 'ச்சீ' என்றாகி விட்டது. கண்களில் நீர் திரண்டது. மனம் வெதும்பிப் புலம்பியது. உறவும், உலகமும் வெறுத்துப் போயின. 'அடப்பாவிகளா! பெத்த பாசத்தைச் சுவடு தெரியாமல் துடைச்சுப் போட்டுட்டீங்களா! உங்களுக்காக அவர் எத்தனை செய்திருக்கார்டா. உங்களுக்கு ஒண்ணுன்னா அவர் எத்தனை துடிப்பார்! இப்ப நீங்க பணத்துக்குக் கணக்குப் பார்த்துப் பாசத்தைக் கழிச்சுட்டீங்களே!' என்று மனம் அரற்றியது.

மருந்து மாத்திரைகள் இல்லாமல் இருமலும் உன்னை விட்டேனா பார்! என ஒரே பிடியாகப் பிடித்துக் கொண்டது. சுமதிதான் குடிக்கச் சுடு தண்ணீர் கொடுத்து நெஞ்சை நீவி விடுவாள். தகப்பனாரின் அவஸ்தையைத் தாங்காமல் முனிசிபல் ஆஸ்பத்திரிக்குப் போனாள். ஆனால், நோயாளியைப் பார்க்காமல் டாக்டர் மருந்து கொடுக்கத் தயாராயில்லை. இடுப்பொடிந்து நடக்க முடியாமல் கிடக்கும் தகப்பனைச் சுமதிதான் எப்படி அழைத்துச் செல்வாள்!

கேட்பாரற்று, கவனிப்பாரற்று நெஞ்சு அபரிமிதமாய்ச் சளியைச் சேர்த்துக் கொண்டது. நெஞ்சு வலியும், ஜுரமும் ஏறிற்று. அதன் பிறகுதான் மூத்தவனுக்குக் கொஞ்சம் ஸ்மரணை வந்தது. டாக்டரை அழைத்து வந்தான். ''இவ்வளவு லேட்டா மருத்துவம் செய்யறீங்களே... பிழைப்பது கஷ்டம்,'' என்று கையை விரித்துவிட்டார் டாக்டர்.

டாக்டர் சொன்னதைக் கேட்டுப் பாறாங்கற்களின் அடியில் சிக்கி நசுங்கிப் போன மாதிரி தவித்துப் போனாள் சுமதி. அவளுக்கிருக்கும் ஒரே துணையையும் ஆண்டவன் பறித்துக் கொள்ளப் போகிறானா?

அவளைக் காட்டிலும் சங்கரன்தான் அதிகம் தவித்தார். ''உனக்கு ஒரு வழி செய்யாம போறேனேம்மா!''

பெரியவன் டாக்டர் சொன்னதைக் கேட்டுப் பயந்து போய்க் கல்கத்தாவுக்கும், பம்பாய்க்கும் தந்தியடித்து மற்ற இரு தம்பிகளையும் வரவழைத்தான். அவர்களுடைய முகத்தில் விழிக்க விருப்பம் இல்லாதவர் போல அவர்கள் வருவதற்கு முன்னரே தம் பிராணனை விட்டார் சங்கரன்.

சங்கரனின் உடலைக் குளிப்பாட்டி, சரிகை வேட்டி உடுத்திக் கூடத்தில் கிடத்தியிருந்தார்கள். உடலை மலர் மாலைகள் அலங்கரித்திருந்தன.

சுற்றம் கூடி ஒப்பாரி வைக்கையில் சுமதி மட்டும் தந்தையின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். உயிரோடு இருக்கையில் இரண்டு கத்தல் வேட்டிகளையே மாற்றி மாற்றிக் கட்டிக் கொண்டிருந்தவருக்கு இன்றுதான் சரிகை வேட்டியின் அதிர்ஷ்டம் அடித்திருக்கிறது. அதை அனுபவிக்கத்தான் அவர் இல்லை.

அவளுடைய மூன்று அண்ணன்மார்களும் பேசிக் கொண்டிருந்தவை சுமதியின் செவிகளில் விழுந்தன, தெளிவாக. 'பூப்பல்லக்கில் மேளதாளத்தோடு தகப்பனின் கடைசி யாத்திரையை நடத்த வேண்டுமெனத் தீர்மானித்துக் கொண்டிருந்தனர் அவர்கள். வழியில் வாரி இறைப்பதற்குச் சில்லறை தேடிக் கொண்டிருந்தனர்.

சுமதிக்கு ஆத்திரமாய் வந்தது. 'அடப்பாவிகளா! உயிரோடு இருக்கையில் அவரை ஏனென்று கேட்கவில்லை. இப்பொழுது... இப்பொழுது யாருக்காக இந்த வேஷம்!'

சுமதியால் அதற்கு மேலும் பொறுத்திருக்க முடியவில்லை. அவள் ஆவேசம் வந்தவளாக எழுந்தாள். தன் அண்ணன்மாரைப் பார்த்துக் கத்தினாள். ''கத்தலைத் தவிர வேறு உடை உடுத்தியறியாத, இரண்டு வேளை பருப்புச் சோற்றைத் தவிர வேறு உணவறியாத என் அப்பாவுக்குப் பூப்பல்லக்கும், மேள தாளமும் வேண்டாம் அண்ணா. மயானத்துக்குத் தூக்கிட்டுப் போற வழியெல்லாம் சில்லறை இறைக்கப் போறீங்களா, இப்ப மட்டும் பணம் மரத்திலே காய்க்குதா? என்ன அப்படி முழிக்கிறே? அப்பா முடியாம கிடந்தப்ப டாக்டரிடம் காட்டச் சொன்னதற்கு நீ என்ன சொன்னே? பணம் மரத்திலே காய்க்கலைன்னு சொல்லலை? அப்ப தகப்பனுக்கு மருத்துவம் பார்க்கப் பணம் இல்லை, இப்ப பூப்பல்லக்கிற்கும், மேளதாளத்திற்கும் பணம் எங்கேர்ந்து வந்தது? நீங்களெல்லாம் எதுக்குக் கல்கத்தாவிலிருந்தும், பம்பாயிலிருந்தும் வந்திருக்கீங்க வேலை மெனக்கெட்டு? ஊரார் பேச்சுக்கு இடம் கொடுக்கக் கூடாதுன்னா? ஏண்டாப்பா அண்ணன்மார்களே, ஒரு சுமையா இருந்தவன் ஒழிஞ்சு போயிட்டார்ங்கிற சந்தோஷத்திலா மேள தாளம் கொட்டப் போறீங்க? ஊர் மெச்சணும்னா பூப்பல்லக்கிலே தூக்கிட்டுப் போகப் போறீங்க? அந்த மனுஷன் உயிரோடு இருந்தப்ப நாயினும் கேவலமா நடத்திட்டு, இப்ப பூப்பல்லக்கிலே, மேளதாளத்தோடு அனுப்பி வைக்கிறதை நான் சம்மதிக்க மாட்டேன். அவர் தினமும் உடுத்துற கத்தலை உடுத்திச் சாதாரண மூங்கில் பாடையில் வைத்துத்தான் தூக்கிட்டுப் போகணும். அவரைச் சுமக்கவும் உங்களுக்குக் கஷ்டமாயிருந்தாச் சொல்லுங்க, என் தோள்ல சுமந்து எடுத்திட்டுப் போய் நான் அவருக்குக் கொள்ளி வைக்கிறேன்.''

மூச்சு விடாமல் பேசிய சுமதி, திகைத்து நின்றிருந்த தன் அண்ணன்மார்களைப் பார்த்தாள். அவர்களும், அண்ணிமார்களும் அவமானத்தால் கூனிக் குறுகி நின்றிருந்ததைப் பார்க்க, அவளுக்குத் திருப்தியாயிருந்தது

# அரும்பு

சாரல் காற்று குளிர்ச்சியை வாரியிறைத்தது. கூதலடிக்கிறது. அப்படியே மூடிக்கொண்டு முடங்கிக் கொள்ள ஆசைப்படுகிற குழந்தை மனசு. 'நிமாண்ட நாழியிலே ரெடியாகு'. சாட்டைக் குச்சியாக மனசுக்குள் குத்துகிற ஏஜெண்டின் குரல்.

உறக்கத்துக்கு ஏங்கித் தவித்த மனசை, அம்மாவின் இருமல் சத்தம் திசை திருப்பி வழிநடத்தியது. அடுப்புச் சாம்பலில் பல்லைத் தேய்த்தாள். கஞ்சியைக் குடித்தாள். தலையில் எண்ணெய் வைத்து, பின்னிக் கொண்டாள். கணக்குச் சிட்டையையும், சில்லறை டப்பாவையும் எடுத்துக்கொண்டாள். சோறு வைத்த தூக்குச் சட்டியை நீட்டினாள், வேலாயி.

பாவம், அம்மா! நோய் அவளைத்



# மேலாண்மை பொன்னுச்சாமி

துளைத்துத் துவட்டியெடுத்து விட்டது. தசையையெல்லாம் கரைத்துக் குடித்து விட்டு, எலும்பும் தோலுமாக்கி விட்டது. நிற்கக் கூடத் தெம்பில்லாமல், இடது கையால் சுவரைப் பிடித்துக் கொள்கிறாள்.

''நேத்து எம்புட்டுக் கட்டை அடுக்கினே, செல்லம்?''

''இருவத்தி ஒண்ணும்மா''

''இன்னிக்கு சனிக் கிழமை. நாளை லீவ். திங்கட் கிழமை என்ன செய்யப் போறே?''

அடிபட்டவளாய்த் திகைத்து நிமிர்ந்தாள், செல்வி. சட்டென்று வாடிக் கறுக்கிற பிஞ்சு முகம். சிறு கண்களில் கலக்கம். இமைகளில் ஈர மினுமினுப்பு. எதுவும் சொல்லத் திசையற்றுப் போய், மௌனத்தில் உறைந்தாள்.

வேலாயியின் குலை பதறியது. பெற்ற மனசு பதைத்தது. மகளின் தலையை அன்புடன் தடவினாள். அவள் கண்களில் மாலை மாலையாகக் கண்ணீர்

''ஏசெண்டுத் தம்பி கண்டிசனா சொல்லிருச்சே.'' மனசைப் பிசைகிற வேதனையோடும் தவிப்போடும் புலம்பினாள், வேலாயி. தாயைப் பார்த்து மனம் கலங்கி, பீதியுடன் நிற்கிற எட்டு வயசுச் சிறுமி செல்வி.

'செடிக்குச் செடியா உக்காந்து பறக்கிற தட்டானைப் போல... தெருவுலே ஓடி விளையாட வேண்டிய சின்ன அரும்பு. விடியுறதுக்கு முந்திப் போய், பாடுபட்டு, பொழுதடைஞ்சு இருட்டுனப் பிறகு வீடு வந்து சேருகிற கொடுமை!'

மனக் குமுறல் தாளாமல், மார்பில் மடேரென்று அடித்துக் கொண்டாள், வேலாயி. 'அடப் பாதரவே. கூத்துவன் என்னை ஒடிச்சுப் போட்டுட்டு, இப்படி கூத்துப் பார்க்கானே! கண்ணு முழியாத இந்தக் குஞ்சு ஒழைச்சுக் காலம் ஓட வேண்டியதாயிடுச்சே. அந்த 'ஒழக்கரிசிச் சிவன்' இருந்திருந்தா... நமக்கு இந்தக் கதி வந்திருக்குமா?

வேட்டு வெடித்த கிணற்றுப் பாறையில், நசுக்குண்டு இறந்து போன புருசனை நினைத்தாள். அந்த இழப்பின் கன பரிமாணம், நொந்து போன இந்த நேரத்தில் முழுசாகத் தாக்கியது. விசும்பினாள்.

அழுது கதறுகிற அம்மாவைப் பார்க்கச் செல்வியின் மனம் சகிக்கவில்லை. முட்டுகிற விம்மலை அடக்கிக் கொண்டாள்.

''நேரமாச்சும்மா... நா போகட்டா?''

''போறியா? போய்ட்டு வா, கண்ணு. யார் கூடயும் சண்டை கிண்டை போடாம, கருத்தா வேலையைப் பாரம்மா. எல்லாத்தையும் எடுத்துக்கிட்டியா?''

தலையசைத்து விட்டு வாசல்படியைத் தாண்டிய செல்வியை இருட்டு அப்பிக் கொண்டது. 'நாய் குரைக்குமோ...' பயத்தில் திகைத்துப் போய்த் தேங்கி நின்றாள். நல்லவேளை, மேலத் தெரு முத்துலட்சுமி வந்து விட்டாள்.

''வாரியா?''

துணை கிடைத்து விட்டது.

''திங்கட் கிழமைக்கு ஒண்ணும் பதில் சொல்லாமப் போகுது, புள்ளை. என்ன செய்யப் போறாளோ...'' அம்மாவின் புலம்பல் சத்தம், காலை நேர அமைதியில் துல்லியமாகத் தூரத்துகிறது.

தெருவில் ஒரு சுடு குஞ்சு கூட விழித்திருக்கவில்லை. நாய்கள் கூடக் கூதலடிக்காத இடம் பார்த்துப் போய் முடங்கிக் கொண்டன. அத்துவானக் காட்டில், ஒத்தையில் நடப்பது போலிருந்தது, செல்விக்கு.

கீழடி வானம் முகம் சிவக்கத் தொடங்கியது. விடி வெள்ளியைச் சாரல் மேகம் ஒளித்துக் கொண்டது.

கிராமத்தையே கதிகலங்கடிக்கிற மாதிரி... விடாத ஓங்காரமாய் ஹாரன் சத்தம். பஸ் வந்து விட்டது. செல்வி நடையை எட்டிப் போட்டாள். முத்துலட்சுமி நடைக்கு ஈடு கொடுக்க முடியவில்லை. சிறுமி குட்டோட்டமாய் ஓடினாள்.

ஏற்கெனவே வந்திருந்த பிள்ளைகள், பஸ்ஸுக்குள் ஏறிப் படுத்திருந்தன.

ஓட்டமும் நடையுமாக ஓடி வருகிற இவர்களைப் பார்த்து கண்டக்டர் கோபமாய் அதட்டினார்.

''என்ன, தேரு மாதிரி ஆடியசைஞ்சு வாரீக? விருட்டுன்னு வாங்க. இன்னும் ஏழு ஊர்கள்லே புள்ளைகளை ஏத்திக்கிட்டு, ஆறு மணிக்குத் தீப்பெட்டியாபீஸ் போய்ச் சேர்ந்தாகணும்.''

இந்த அதட்டல் உருட்டலெல்லாம் செல்வி மாதிரியான சிறுமிகளிடம்தான். தாவணி போட்ட முற்றிய சிறுமிகளிடம் — பூப் பெய்திய இளம் பெண்களிடம் — தொனியே மாறி விடும். அவர்களிடம்

அமரர் கல்கி
நினைவுச் சிறுகதைப் போட்டி
1500 ரூபாய் முதல் பரிசுக் கதை



## 'தையல்' என்ன மட்டமா?

'இன்று மக்கள் பெரிதும் விரும்புவது தனியார் தைத்துத் தரும் உடைகளையா? ரெடிமேட் உடைகளையா?' இது பட்டி மன்றத் தலைப்பு. இதை நடத்தியவர் தமிழ் நாடு தையற் கலைஞர்கள் சங்கத்தின் தலைவரும், 'உலக தையற் கலைஞன்' இதழின் ஆசிரியருமான டி. வி. எஸ். மணி. அவரைச் சந்தித்தோம். தையற்காரர்கள் சார்பில் பொரிந்து தள்ளினார்:

●● எங்களைத் தொழிலாளர்கள் என்றும் ஏற்பதில்லை. கலைஞர்கள் என்றும் ஏற்பதில்லை... திரைப்படம், நடனம், நாடகம் — இதில் எதிலாவது தையற் கலைஞன் சம்பந்தப்படாமல் சோபிக்க முடியுமா? ஆனால் 'கலைமாமணி' பட்டம் எங்களில் யாருக்கும் இதுவரை கொடுக்கப்பட்டதில்லை!

●● அழகான ஷோ ரூம் வைத்துக் கொண்டு ஐம்பது அறுபது ரூபாய் சார்ஜ் செய்யும் தையற் கலைஞர்கள் அதிகம் இல்லை. ஆனால் தெரு ஓரங்களில், கடை

பேசும் போது. எத்தனை தெளிவு... என்ன மாய்ச் சிரிப்பு... எவ்வளவு குழைவு!

அதைப் பார்த்தாலே... செல்விக்குப் பற்றிக் கொண்டு வரும். கண்டக்டர் கழுத்துக்கு மேலே ஓநாய் மூஞ்சி இருப்பது போல மனசுக்குள் பயமாகவும் வெறுப்பாகவும் இருக்கும். காறித் துப்பணும் போல மனசில் தோன்றும்.

இப் பெட்டியாபீஸுக்குள் போய் விட்டால்... இது போல நிறைய ஓநாய் மூஞ்சிகள்... எச்சில் வடிகிற நாக்குகளோடு ஓநாய்கள்...

செல்வி பஸ்ஸுக்குள் ஏறி உட்கார்ந்தாள். தாராளமாய் இடம் கிடந்தது. அடுத்த ஊரிலேயே சீட்டுகளெல்லாம் நிரம்பி விடும். அப்புறம் உள்ள ஊர்களில் ஏறுகிற பிள்ளைகளெல்லாம் ஃபுட் போர்டோடுதான்!

மாதாங்கோவில்பட்டியைத் தாண்டுகிற போது, பஸ்ஸுக்குள் மூச்சுப் போக இடமிருக்காது. புளிச் சிப்பமாகப் பிள்ளைகள் திணிக்கப்பட்டு, கிட்டிக்கப்பட்டு... வியர்த்து, கசங்கி, திணறி...

சில சமயங்களில் ஒன்றிரண்டு பிள்ளைகள் மயக்கமே போட்டுத் துவண்டு விடும்.

மந்தையாடுகளைப் பற்றிக் கொண்டு வருவதைப் போல... குழந்தைகளை நகர்த்திக் கொண்டு பஸ்ஸுக்குள் அடைத்தார். ஏஜெண்ட் தலைகளை எண்ணிப் பார்த்தார்.

"ஒண்ணு குறையுதே, யாரு?"

"ஆவுடைச்சி.

"அவாதான் சடங்கா(பூப்பெய்து)கிட்டாளே. இன்னும் பானைஞ்சு நாளுக்கு வர மாட்டாளே..." சொல்லி விட்டுக் கண்டக்டர் அசிங்கமாகக் குறுநகை செய்தான்.

"ஆமா... நாந்தான் அயத்துட்டேன். அப்பச் சரி.. வண்டி போகலாம். ரைட்" ஏஜெண்ட் இறங்கிக் கொண்டார்.

டிரைவர், சாமி படங்களை — ஸ்டீரியங்கை — எல்லாம் கும்பிட்டு விட்டு ஸ்டார்ட் பண்ணினார். கிடங்கும் மேடுமான சாலையில் இடமும் வலமுமாய்ப் பஸ் ஆடியசைந்து குலுங்கும்போதெல்லாம்... சிறு பிள்ளைகள் குதூகலமாகச் சிரித்தனர்; கை தட்டினர்; "ஹோ...ஹோ" வென்ற மழலைக் கூச்சல்கள்...

எரிச்சலில் நெருப்பாகச் சீறினார், டிரைவர்.

"ஏய் குட்டிப் பிசாசுகளா! என்ன இளிப்பு வேண்டிக் கிடக்கு? வாயைப் பொத்திக்கிட்டுச் சும்மா கிடங்க."

சட்டென்று பஸ்ஸுக்குள் ஏறிக் கொண்ட மௌனத்தின் அழுத்தத்தைத் தாங்கமுடியாமல்...டிரைவர் கண்டக்டருடன் பேச்சுக் கொடுத்தார்.

ஜன்னலோரம் உட்கார்ந்திருந்த செல்வி, வெளியே இருட்டையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவளைத் 'திங்கட்கிழமை' மிரட்டிக் கொண்டிருந்தது. விலக்ச் செல்லப் பாதையில்லை. வழிமறித்துக் கொண்டு நிற்கிறது. மென்னியைப் பற்றிக் கொண்டு இறுக்குகிறது.

மூந்தா நாள். ராத்திரி எட்டு மணி. இலேசாக சாரல் தூறியது. பஸ்ஸிலிருந்து இறங்கிய செல்வி, ஓட்டமும் நடையுமாய் ஓடி வீட்டுக்குள் வந்து விழுந்தாள். பேயின் இறுகலான பிடியிலிருந்து விடுபட்டுத் தாயின் மடியில் வந்து விழுந்த ஆறுதல். மனசுக்குள் சுகமான ஆசுவாசம்.

என்னமோ விசாரித்த அம்மாவுக்குக் கூட பதில் சொல்லாமல், மூலையில் சரிந்து உட்கார்ந்து கொண்டு விரலைச் சூப்பினாள். அதட்ட ஆளில்லாத இடம். 'நாய்களா, குச்சியடுக்காம என்ன செய்றீக?' என்று கடித்துக் குதறுகிற நாய்கள் இல்லை. வீடு. தாய் மடி போன்ற வீடு. சுதந்திரமாக சுகமாக விரலைச் சூப்பினாள்.

அம்மாவைத் தேடிக் கொண்டு ஏஜெண்ட் வந்தார்.

வாசல்களில் ஒரு மெஷினைப் போட்டுக் கொண்டு, சத்தமும் தூசியும் தொல்லைப் படுத்த, மிகக் குறைந்த 'ரேட்' வாங்கும் தையற் கலைஞர்கள்தாம் நிறையப் பேர். மதுரையில், புது மண்டபத்தில் ஐம்பது, அறுபது டெய்லர்கள் ஒன்றாக அமர்ந்து தைப்பார்கள். இவர்களைப் போன்றவர்களுக்குச் சென்னையில் இல்லாவிட்டாலும், மாவட்டங்களிலாவது டெய்லரிங் காம்ப்ளெக்ஸ் கட்டிவிட்டால், தூசியிலிருந்து இவர்களைக் காப்பாற்றலாம்.

●● ஆஸ்த்மாதான் தையற் கலைஞரை முதலில் தாக்கும் நோய். உட்கார்ந்தே இருந்து தொழில் செய்வதால் உடம்பு உஷ்ணப்பட்டுப் போகிறது. பீடியும் டீயும் குடித்து இது இன்னும் அதிகமாகிறது. கண் பார்வை சீக்கிரத்தில் பழுதுபடுகிறது...

●● முன்பெல்லாம் பண்டிகைகளுக்குப் புதுத் துணி வாங்கித் தைத்துக் கொள்ளும் வழக்கம் இருந்தது. இப்போது தொழிலாளர்களுக்கு போனஸ் பிரச்னை. கடைசி வரை பேச்சு வார்த்தையில் இழுத்தடித்து தீபாவளி சமயத்தில் இரண்டு நாட்கள் அல்லது ஒரு வாரம் முன்புதான் போனஸ் பணம் கொடுக்கப்படுகிறது. துணி வாங்கிக் கொடுத்தால் தையற்காரர் எங்கே சமயத்துக்குக் கொடுக்கப் போகிறார் என்று எல்லோரும் ரெடிமேட் சட்டை, பாண்ட் என்று வாங்கி விடுகிறார்கள்.

●● எக்ஸ்போர்ட் கார்மென்ட்ஸ் தைக்கும் தொழிலாளர்களில் அதிகமாகப் பெண்கள்தான் இருக்கிறார்கள். குறைந்த சம்பளம். அவர்களுக்கு டாய்லெட் வசதிகள் கூடச் செய்து கொடுப்பதில்லை இந்த நிறுவனங்கள். அரசே ஏன் இந்தத் தொழிலில் இறங்கி, ஒரு முன் மாதிரியாக விளங்கக் கூடாது? அப்போது தனியாரும் அந்த அளவுக்குச் சம்பளமும் வசதிகளும் கொடுப்பார்கள் இல்லையா?

சந்திப்பு: **யெஸ்வி**

படம்: **ஸ்ரீஹரி**

---

"யக்கா ..."

"என்னய்யா, தம்பி" தள்ளாடித் தவித்து எழுந்தாள், அம்மா.

"செல்வி ஏதாச்சும் சொன்னாளா?"

"இல்லியே... என்னமும் நடந்து போச்சா?" பதறிப் பதைக்கிற அம்மா. ஆறுதல் படுத்துகிற ஏஜெண்ட். விரலைச் சூப்புகிற இன்ப மயக்கத்தோடு பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாள், செல்வி. மனசுக்குள் பூரான் ஊர்கிற மாதிரி... மெல்லிய திகில்.

"யக்கா, இப்போ... குளோரைடு கிடைக்சு மாட்டேங்குது. ஏகத் தட்டுப்பாடு. நிறையத் தீப் பெட்டியாபீஸ்க மூடிக் கிடக்கு. ஒண்ணு ரெண்டு ஆபீஸ்கள்லேதான் வேலை நடக்குது. வேலைக்கு வர்ற புள்ளைகளைக் குறைக்கச் சொல்லி, எங்க மொதலாளி நச்சரிக்காரு."

வேலாயி திகிலோடு பார்த்தாள். இருமல் வரப் போவதை உணர்கிற போது மனசில் ஏற்படுமே, அதே படபடப்பும், பீதியும்!

"ஆனா... நம்ம கிராமங்கள்லே மழை தண்ணியில்லே. வறட்சி. வெள்ளாமை வெளைச்சல் இல்லே. கூலிச் சனங்களுக்குக் காட்டு வேலை ஒண்ணு கூடக் கிடைக்கல்லே. ஆபீஸ் வேலைக்கு 'நா வாரேன், நீ வாரேன்'னு இவுக அலை மோதுறாக."

"நிலைமை அப்படித்தானே இருக்கு, தம்பி"

"இதுலே இன்னொரு சிக்கல். சின்னப் புள்ளைகளை வைச்சு வேலை வாங்கக் கூடாதுன்னு ஏதோ சட்டம் இருக்காம். அப்பப்ப அதிகாரிமார்க வந்து, புள்ளைக வேலை செய்றதைப் பாத்துட்டு, ஆயிரக் கணக்குலே அவராதம் போட்டுடுறாங்க."

"அடக் கொடுமையே! பெத்தவுகளைக் காப்பாத்தாத சட்டம், புள்ளைக மேலே இரக்கப்பட்டு, திங்குற சோத்துலே மண்ணைப் போடுதாக்கும்? புள்ளைகளைக் கொடுமைப்படுத்த பெத்த தாய்க்கு ஆசையாகவா இருக்கும்? வவுத்துக் கொடுமை.. வறுமைப் பொழைப்பு... வேற புகல் இல்லியே! இதையும் மறிக்கிறாகளாக்கும், பாவிப் பயக?"

"ஆமாக்கா. மொதலாளி கண்டிசனாச் சொல்லிட்டாரு. இந்த வாரத்தோட, நம்ம செல்வி மாதிரியான சின்னப் புள்ளைகளையெல்லாம் நிறுத்தியாகணுமாம்."

எதிர்பார்த்த இடி வேலாயிக்குள் இறங்கியே விட்டது. உள் மனசின் ஆழம் வரை பரவிப் பாய்கிற நடுக்கம். வயிற்றுக்குள் தீக் கோலைச் சொருகுவது போலிருந்தது.

மாடு வைத்து விவசாயம் பார்த்த புருஷன். மாட்டுக்கும் மேலாக ராவும் பகலுமாக உழைத்த புருஷன். எத்தனை விளைய வைத்தாலும், வருஷா வருஷம் மிஞ்சி நின்ற கடன். நிலத்தை விற்று விட்டுக் கூலி வேலைக்குப் போன புருஷன். கிணறு வெட்டிக் கொண்டிருந்த போது வெடித்த வேட்டில், கருங்கல்லை ரத்தமாக்கி விட்டுப் போய்ச் சேர்ந்த புருஷன்.

நாதியற்றுப் போன குடும்பம். ஓடி வந்து பற்றிக் கொண்ட நோய், உடம்பை ஒடித்துக் கட்டிலில் துடிக்கப் போட்டு விட்ட நோய்.

செல்வியும் வேலை பார்க்கப் போக முடியாமல் போனால்... வீட்டில் எப்படி அடுப்புப் புகையும்?

நெஞ்சை முட்டிப் பிளக்கிற சோகம். தாட்சண்யம் பாராமல் சப்பென்று அறைகிற அவலம். கண்ணுக்குள் குத்தலெடுக்க, மாலை மாலையாகக் கண்ணீர். உதடுகள் நடுங்கித் துடித்தன.

"தம்பி, வாரத்துக்குத் தொண்ணூறு ரூவா இந்தப் புள்ளை கொண்டு வருது. இதுலேதா ரெண்டு ஜீவனோட ஜீவனம் நடக்குது. இதுக்கு ஒரு மாத்து யோசனை இல்லியா...ய்யா?

"இருக்கு... ஆனா, நீங்க செய்யணுமே?"

"சொல்லுய்யா..."

"நம்ம செல்வி சின்னப் புள்ளைதா.

இருந்தாலும் சும்மாவாச்சும் தாவணியைச் சுத்தி அனுப்புங்க. மத்ததை நா பாத்துக் கிடுதேன். யக்கா, மனசுலே ஞாபகம் வச் சுக்கங்க. தாவணி போட்டா திங்கட் கிழமை வரலாம். இல்லேன்னா... நின்னுக் கிட வேண்டியதுதான்."

ஏஜெண்ட் போய் விட்டார். வேலாயி வேரறுந்தவளாக அப்படியே சுவரில் சாய்ந் தாள். குத்துக்கால் வைத்துச் சரிந்து உட்கார்ந்து விட்டாள். குமுறிக் குமுறிச் சத்தமில்லாமல் அழுதாள். உடம்பெல்லாம் நடுங்கிக் குலுங்குகிற கோரம்.

'இப்படியும் ஒரு வங்கொடுமையா? அதுதுக்குரிய வயசு வராமெ, விரலைச் சூப்புற புள்ளைக்கு எப்படித் தாவணி போடுறது? ஊரையழைச்சு, உறவைக் கூப்பிட்டு, விருந்து வைச்சு, தாய் மாமன் சீர் வரிசையோட, கூடுன கூட்டத்துலே போட வேண்டிய தாவணியை... சட்டத்தை ஏமாத்துறதுக்காக எப்படிப் போட? ஐயோ... எம்புள்ளைக்குமா, இந்தக் கதி? அடக் கடவுளே, எளியவங்க பொழைப்பை எதுக்கு விதி, இப்படி பிய்ச்சுப் பிடுங்கிப் போடணும்?'

உள் மனசைச் சுட்டுப் பொசுக்குகிற அக்கினிக் கொழுந்துகளாக நினைவுகள். நினைக்க நினைக்க உள்ளுக்குள் ஏதோ ஒன்று உடைந்து நொறுங்குகிறது.. கோவென்று வெடித்து அழத் துவங்கிய போது, இருமலும் ஆரம்பித்து விட்டது. வாடிப் போன மரத்தை ஆட்டிப் பிடுங்குகிற புயலாக, இருமல், இருமல்... இருமல்கள்..

அம்மாவின் அழுகையையும் இருமலை யும் பார்க்கப் பார்க்கச் செல்விக்குள் அழுகை விம்மிக் கொண்டு பீறிடுகிறது. நாசி நுனி துடிக்கிறது. காந்தலெடுக்கிறது. கண்களில் ததும்பித் திரை போடுகிற கண்ணீர்...

அந்தப் பிள்ளை,தாவணி அச்சுறுத்தியது. உள் மனசின் மெல்லிய ஜவ்வுகளைப் பற்றி இழுத்தது. நினைத்தாலே திகிலில் மனசு துடிக்கிறது.

பூப் பெய்தாத பெண்ணைக் கல்யாணத் திற்கும் உடலுறவுக்கும் நிர்ப்பந்தப்படுத்துகிற போது ஏற்படுவதைப் போல...' வினோத மான அவமான உணர்ச்சி, செல்வியைக் கசக்கியது.

இயல்பாக நிகழ வேண்டிய மலர்ச்சியை... ஊர் வேஷத்திற்காகக் கசக்கிப் பிழிந்து மலர வைக்கிற வேதனை. தாயிடம் கூட சொல்லியழ முடியாத ரகசிய உணர்ச்சி யவஸ்தை. அவளைத் திக்குமுக்காட வைக்கிற கொடிய அவஸ்தை.

'ஊஹூ...ம்.. செத்தாலும் சரி.. இப்ப நா தாவணி போடவே மாட்டேன். சம்மதிக் கவே மாட்டேன். என்னாலே முடியாது... முடியவே முடியாது... அதை விட உசுரை வுட்டுருவேன்...'

**ஞா**யிற்றுக் கிழமை கனமாய் நகர் கிறது. அந்த இரண்டு ஜீவன்களையும் மௌனச் சோகத்தில் அரைத்துக் கொண்டு நத்தையாக ஊர்கிறது.

திகிலும் பீதியுமாய்... வேதனையும் விசும்பலுமாய் வீடு. மூன்றாவது ஆளாய் வந்து உட்கார்ந்து கொண்டு பேயாட்டம் போடுகிறது, அவலம்.

முகம் செத்துக் கிடக்கிற மகளைப் பார்த்தாள், வேலாயி. சிறிய கண்களில் பீதி. வெட்டுண்ட பல்லி வாலாகத் துடிக் கிற இமைகள். பார்க்கவே பாவமாக இருந் தது. 'இந்த அரும்பை அடகு வைச்சா... நாம உசுர் வாழணும்?'

செல்வியும் அம்மாவையே பார்த்தாள். அம்மா, தாவணி போடச் சொல்லி வற் புறுத்தினால்... மறுத்து விடத் தயாராக இருந்தாள். பணிந்து விடக் கூடாது என்ற வீராப்பு, மனசுக்குள். ஒரு விறைப்பு.

"செல்வி..."

"என்னம்மா?"

"நாளை நீ வேலைக்குப் போக வேண் டாம்மா..."

"......?"

"ஒன்னைக் கேவலப்படுத்தி அடகு வைச்சு, ஊரியலங்காரம் பண்ணி.. நா கஞ்சி குடிக்க வேண்டாம். நாம உசுரு வைச்சு இருக்கவும் வேண்டாம்மா..."

"ஏம்மா?"

"பூக்க வேண்டிய அரும்பைப் புடிச்சு நசுக்கி மோந்து பாக்குற பாவத்தைச் செய்றதுக்கு, இந்தத் தாய் மனசுலே தைரிய மில்லேம்மா."

"........."

"விதி நம்மளை எப்படி விட்டிருக்கோ... அப்படியே நடக்கட்டும், கண்ணு. நீ நாளை யிலேருந்து வேலைக்குப் போக வேண் டாம்."

தாயின் முகம் முன்னை விடப் பிரகாசிப் பது போலிருந்தது செல்விக்கு. அந்தக் கண்களில் பொங்கித் ததும்பிய பரிவு... வறுமையில் நீர்த்துப் போகாத தன்மானம்... வாழ்க்கைக்குப் பணிந்து போய் விடாத பாச வைராக்கியம்...

செல்வி துவண்டு விட்டாள். மனசுக்குள் ளிருந்த விடைப்பு... விறைப்பு, வீராப்பு எல்லாம்... தாயின் பாசக் கண்ணீரில் நனைந்து.. மனசே தளர்ந்து போய்...

அடிபட்டவளைப் போல கோவென்று அழுதாள். புறங்கையால் கண்ணைக் கசக் கிக் கொண்டு விம்மி விம்மியழுத அந்தக் கண்ணு முழியாத பச்சை மண்ணை, மடியில் இழுத்துப் போட்டுக் கொண்டு கதறியழுதாள் வேலாயி.

**மு**த்துலட்சுமி இருட்டில் வந்து கொண்டிருந்தாள். வாசலில் திகைத்துப் போய் செல்வி.

"என்ன செல்வி, வேலைக்கு வரல் லியா?"

"வாரேன்" உயிரில்லாமல் முனங் கினாள்.

"தாவணி?"

"மடிச்சு கையிலே வைச்சிருக்கேன். பஸ் கிட்டே போய் போட்டுக்கணும்" சத்தமில் லாத தெருவில், சத்தமில்லாமல் நடந்தனர்.

இழவு வீட்டுச் சங்காக அலறுகிற தீப் பெட்டியாபீஸ் பஸ்ஸின் ஹாரன்.

ஒரு பிரேதத்தைப் போல... அடங்கிப் போன சலனங்களுடன் நடந்தது, அந்த அரும்பு.

# உங்கள் குழந்தைக்கு
# அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் தொடக்கத்திலிருந்தே

உங்கள் குழந்தைக்கு நான்காம் மாதத்திலிருந்தே பாலோடு திட உணவும் தேவை. அப்போது ஸெரிலாக் அனுகூலம் அளியுங்கள்.

**போஷாக்கு அனுகூலம்:** ஒவ்வொரு முறை ஸெரிலாக் ஊட்டும் போதும், புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின், மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்குச் சத்துக்களும் சரியான விகிதத்தில் உங்கள் குழந்தைக்குக் கிடைக்கிறது.

**சுவை அனுகூலம்:** ஸெரிலாக் சுவையில் குழந்தைகளுக்குக் கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம்:** ஸெரிலாக் ஏற்கனவே பதமாக்கப்பட்டது: பாலும் சர்க்கரையும் கலந்தது. காய்ச்சி ஆறிய நீரில் கலந்தாலே போதும்

**தேர்ந்தெடுக்க அனுகூலம்:** இப்போது ஸெரிலாக், மூன்று வெவ்வேறு வகைகளில்!

*சுகாதாரமான முறையில் தயாரிக்கவும், சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும் டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.*




6 மாதங்களிலிருந்து




4 மாதங்களிலிருந்து




6 மாதங்களிலிருந்து

இலவசம்
ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக்,
தபால் பெட்டி எண். 3
புது தில்லி-110008




**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

RK SWAMY/TN/5112/TAM





# பொன்னியின்

## பூர்வ கதை

இன்றைக்குச் சுமார் ஆயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன்பு விஜயாலய சோழன் இரண்டாவது சோழ சாம்ராஜ்யத்துக்கு அடிகோலினான். சோழ நாட்டின் சேனா வீரர்கள் நாலு திசைகளிலும் படை எடுத்துச் சென்று வெற்றிக்கு மேல் வெற்றி அடைந்து சோழ சாம்ராஜ்யத்தின் எல்லையை விசாலப்படுத்தி வந்தார்கள். சுந்தர சோழ சக்கரவர்த்தியின் காலத்தில் மதுரைப் பாண்டிய குலத்தின் கடைசிப் பிரிதிநிதியான வீரபாண்டியன் கொல்லப்பட்டான். பாண்டிய நாடு சோழ சாம்ராஜ்யத்தில் முற்றிலும் ஐக்யம் அடைந்தது.

சுந்தர சோழ சக்கரவர்த்தியின் மூத்த புதல்வனும் வீர பாண்டியனுடைய தலைகொண்டவனுமான ஆதித்த கரிகாலன் சோழ சாம்ராஜ்யத்தின் பட்டத்து இளவரசனாக முடிசூட்டப் பெற்றான். வடதிசைச் சைன்யத்துக்கு மாதண்ட நாயகனாகிக் காஞ்சியைத் தன் இருப்பிடமாகக் கொண்டான். காஞ்சியில் புதிதாகப் பொன் மாளிகை கட்டித் தன் தந்தையை அங்கு வந்து இருக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டு, பழைய வாணர் குடியில் பிறந்த வந்தியத் தேவன் என்னும் வீரனிடம் ஓலை கொடுத்து அனுப்பினான்.

சுந்தர சோழ சக்கரவர்த்தி அரண்மனையில் பாரிச வாயுவினால் பீடிக்கப்பட்டு நடமாட்டமின்றிப் படுத்த படுக்கையாக இருந்தார். உடல் நோயைக் காட்டிலும் அதிகமாக மன நோயினால் சுந்தர சோழர் பீடிக்கப்பட்டிருந்தார்.

இளம் பிராயத்தில் ஈழ நாட்டை அடுத்திருந்த ஒரு சிறு தீவில் சுந்தர சோழர் தங்கியிருக்க நேர்ந்த போது கரையர் குலத்தைச் சேர்ந்த ஊமைப் பெண் ஒருத்தியினால் கரடியின் வாயிலிருந்து காப்பாற்றப்பட்டார். அந்தப் பெண்ணிடம் காதல் கொண்டார். சில காலம் இருவரும் அத் தீவில் ஆனந்த வாழ்க்கை நடத்தினார்கள்.

அப்போது சுந்தர சோழர் தாம் ஒரு காலத்தில் சக்கரவர்த்தியாகக் கூடும் என்று எதிர்பார்க்கவில்லை; அவர் பாட்டனாரான புகழ் பெற்ற பராந்தக சக்கரவர்த்தி அனுப்பிய வீரர்கள் அவரைத் தேடிப் பிடித்து அழைத்துப் போனார்கள்.

பராந்தக சக்கரவர்த்தியின் மூத்த புதல்வர் இராஜாதித்தர் தக்கோலத்தில் இரட்டை மண்டலச் சைன்யத்துடன் நடந்த பெரும் போரில் வீர சொர்க்கம் அடைந்தார். அவருக்கு அடுத்த கண்டராதித்தருக்கு அச் சமயம் மக்கள் இல்லை. அவருக்கு இளையவரான அரிஞ்சய சோழர் வைதும்பராயன் மகளாகிய அழகிற் சிறந்த கல்யாணியை மணம் செய்து கொண்டிருந்தார். அவர்களுடைய ஏக புதல்வர் சுந்தர சோழர். பராந்தக சக்கரவர்த்தி மரணத் தறுவாயில் தமக்குப் பின் கண்டராதித்தரும் அவருக்குப் பிறகு சுந்தர சோழரும் சிம்மாதனம் ஏற வேண்டுமென்று திட்டமிட்டுக் காலமானார்.

சிவ நேசச் செல்வரான கண்டராதித்தர் பட்டத்துக்கு வந்த பிறகு செம்பியன் மாதேவி என்று சரித்திரப் புகழ் பெற்ற மழவரையர் மகளை மணந்தார். அவர்களுக்கு மதுராந்தகன் என்னும் மகன் பிறந்தான். ஆயினும் கண்டராதித்தருக்குப் பின்னர், அவருடைய சகோதரர் அரிஞ்சய சோழர் ஒரு வருஷம் ஆட்சி புரிந்து இறந்த பிறகு, சுந்தரசோழர் சிம்மாதனம் ஏறினார்.

பாட்டனாரின் விருப்பத்தின்படியும் மற்றும் இராஜ குடும்பத்தினர் அனைவருடைய சம்மதத்தின் பேரிலும் சுந்தர சோழர் சக்கரவர்த்தியானார். அவர் திருக்கோவலூர் மலையமான் மகளை மணந்தார். அவர்களுக்கு இரு வீரப் புதல்வர்களும் ஓர் அருமை மகளும் பிறந்தார்கள். சுந்தர சோழரின் சாம்ராஜ்யம் விரிந்தது போலவே அவருடைய புகழும் நாலா திசையிலும் பரவியது. ஆனாலும் அவர் மனத்திற்குள் மதுராந்தகனுக்குப் பட்டமில்லாமல் செய்த குற்றம் உறுத்திக் கொண்டிருந்தது. நோய்வாய்ப்பட்டுப் படுத்த பிறகு அவருடைய மனசாட்சி அவரை அதிகமாகத் தொந்தரவு செய்தது. இது போதாது என்று, ஈழத் தீவைச் சேர்ந்த ஊமைப் பெண் ஆவி வடிவத்தில் வந்து அவரைத் துன்புறுத்தியதாக எண்ணிப் பிரமை கொண்டிருந்தார். இந்தக் காரணங்களினால் அவர் தமது குமாரர்களாகிய ஆதித்த கரிகாலனுக்கும் அருள்மொழிவர்மனுக்கும் சமாதானம் கூறி விட்டு மதுராந்தகனுக்கே தமக்குப் பின்னால் பட்டம் கட்டி விட்டால் நல்லது என்று கருதத் தொடங்கினார்.

விஜயாலய சோழர் காலத்திலிருந்து சோழ சாம்ராஜ்யத்தில் பழுவேட்டரையர் வம்சத்தினர் மிகச் செல்வாக்குப் பெற்று விளங்கி வந்தனர். சுந்தர சோழரின் காலத்தில் பெரிய பழுவேட்டரையர் சோழ நாட்டின் தனாதிகாரியாகவும் சின்னப் பழுவேட்டரையர் தஞ்சைக் கோட்டையின் தளபதியாகவும் பதவி





# செல்வன்




வகித்து வந்தார்கள்.

அவர்களிடம் சுந்தர சோழர் பரிபூரண நம்பிக்கை வைத்திருந்தார். அவர்களுடைய விருப்பத்துக்கு மாறாக எதுவும் செய்ய அவர் விரும்பவில்லை.

பழுவேட்டரையர்களும், மற்றும் சோழ நாட்டுச் சிற்றரசர்கள் பலரும், முரட்டுச் சுபாவம் கொண்டவனாகிய ஆதித்த கரிகாலனை வெறுத்தார்கள்.

கரிகாலனுடைய சகோதரி குந்தவைப் பிராட்டியும் சகோதரன் அருள்மொழிவர்மனும் சோழ நாட்டு மக்களின் அன்பைப் பூரணமாகக் கவர்ந்திருந்தார்கள்.

இதனால் அவர்கள் பெரிதும் சிற்றரசர்கள் அசூயை கொண்டிருந்தார்கள். இக்காரணங்களினால் சிற்றரசர்கள் குலமுறைச் சட்டத்தை அனுசரித்து மதுராந்தகத் தேவனைச் சிம்மாதனத்தில் ஏற்ற விரும்பினார்கள். கொள்ளிடத்தின் வட கரையில் உள்ள கடம்பூர் சம்புவரையர் அரண்மனையில் அந்தரங்கக் கூட்டம் நடத்தி அவ்விதம் தீர்மானம் செய்தார்கள். இந்த அந்தரங்கக் கூட்டத்தின் நடவடிக்கைகளை வாணர் குலத்தைச் சேர்ந்த வந்தியத் தேவன் என்னும் வீரன் தெரிந்து கொள்ளும்படி நேர்ந்தது.

சுந்தர சோழ சக்கரவர்த்தியிடம் வந்தியத் தேவன் கரிகாலருடைய ஓலையைச் சேர்ப்பித்து விட்டுப் பழையாறையில் இளையபிராட்டி குந்தவையைச் சந்தித்தான். முற்பிறவியின் தொடர்ச்சியினால் அவர்களுடைய உள்ளங்கள் ஒத்து ஒன்றாயின. குந்தவையின் விருப்பத்தின்படி அவளுடைய தம்பி அருள்மொழிவர்மனை அழைத்து வர வந்தியத்தேவன் இலங்கை சென்றான். பூங்குழலி என்னும் ஓடக்காரப் பெண் அவனைப் படகிலேற்றிக் கொண்டு போய் ஈழ நாட்டில் சேர்த்தாள். இலங்கையில் அநுராதபுரத்துக்கு அப்பால் வந்தியத்தேவன் அருள்மொழிவர்மனைச் சந்தித்துக் குந்தவையின் ஓலையைக் கொடுத்தான். அதில் "பொன்னியின் செல்வ! இராஜ்யத்துக்கு அபாயம் நேர்ந்திருக்கிறது. உடனே திரும்பி வரவும்" என்று எழுதியிருந்தது.

அருள்மொழிவர்மன் குழந்தைப் பிராயத்தில் காவேரி நதியில் தாய் தந்தையருடன் உல்லாசப் படகிலே சென்று கொண்டிருந்த போது தவறி நதியின் வெள்ளத்தில் விழுந்து விட்டான். விழுந்த சமயத்தில் அதைப் படகில் இருந்தவர்கள் யாரும் கவனிக்கவில்லை. கரையிலேயிருந்த பெண் ஒருத்தி நதி வெள்ளத்தில் பாய்ந்து குழந்தையைக் காப்பாற்றிப் படகிலிருந்தவர்களிடம் கொடுத்து விட்டு உடனே மறைந்து விட்டாள். காவேரி அன்னைதான் அவ்வாறு இளவரசனைக் காப்பாற்றி மறைந்தாள் என்று பலரும் கருதினார்கள். இதன் காரணமாக, அருள்மொழி வர்மனுக்குப் 'பொன்னியின் செல்வன்' என்ற பட்டப் பெயர் ஏற்பட்டது.

பிற்காலத்தில் இராஜ ராஜ சோழன் என்று சரித்திரப் பிரசித்தி அடைவதற்கிருந்த பொன்னியின் செல்வன் அப்போது ஈழத்துப் போரில் ஈடுபட்டிருந்தான். மகிந்தன் என்னும் இலங்கை மன்னன் போரிலே தோற்று ஓடி மலைப் பிராந்தியத்தில் ஒளிந்து கொண்டான். புத்த பிக்ஷுக்களில் ஒரு பகுதியார் அருள்மொழிவர்மனை இலங்கை அரசனாக மணிமகுடம் சூட்டிக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டார்கள். பொன்னியின் செல்வன் அதை ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டான்.

அருள்மொழிவர்மன் ஈழநாட்டிலிருந்த போது, காடுகளில் பித்தியைப் போல் திரிந்து கொண்டிருந்த ஊமைச் செவிட்டு ஸ்திரீ ஒருத்தியைப் பார்த்தான். அவள் இளவரசனைச் சில அபாயங்களிலிருந்து காப்பாற்றினாள். அவளே தன்னைப் பொன்னி நதியின் வெள்ளத்திலிருந்து காப்பாற்றியவள் என்றும் அறிந்து கொண்டான். அவள் சித்திரங்களின் மூலம் தன்னுடைய பழைய வரலாற்றைத் தெரிவித்தாள். அதிலிருந்து மந்தாகினிக்கும் சுந்தர சோழருக்கும் இளம் பிராயத்தில் ஏற்பட்டிருந்த இணையில்லாத அன்பைக் குறித்து இளவரசன் அறிந்து கொண்டான்.

இப்போது வந்தியத்தேவனும் அந்த ஸ்திரீயை ஈழ நாட்டில் பார்க்க நேர்ந்தது. அவளுக்கும் பெரிய பழுவேட்டரையரின் இளைய ராணி நந்தினிக்கும் உருவப் பொலிவில் இருந்த ஒற்றுமையைக் கண்டு அவன் வியந்தான். அதைப் பொன்னியின் செல்வரிடமும் தெரியப்படுத்தினான்.

நந்தினி என்பவள் குழந்தைப் பிராயத்தில் பழையாறையில் ஆலய பட்டர் வீட்டில் வளர்ந்தாள்.

அமரர் கல்கி

அவனிடம் ஆதித்த கரிகாலன் பிரியம் கொண்டான். குந்தவையோ அவளுடைய அழகைக் கண்டு அசூயை கொண்டாள். செம்பியன்மாதேவியின் கட்டளையினால் நந்தினி குழந்தைப் பருவத்திலேயே பாண்டிய நாட்டுக்கு அனுப்பப்பட்டாள்.

ஆதித்த கரிகாலன் இறுதியான பாண்டியர் யுத்தத்தில் வீரபாண்டியனைத் தேடிச் சென்று வைகை நதிக் கரையில் நந்தினி வாழ்ந்த சிறிய குடிசையில் கண்டு பிடித்தான். நந்தினி வீரபாண்டியன் உயிரைக் காப்பாற்றும்படி இரந்து மன்றாடினாள். கரிகாலன் அதைக் கேளாமல் வீரபாண்டியனுடைய தலையை வெட்டிக் கொன்றான்.

பின்னர், நந்தினி வயது முதிர்ந்த பெரிய பழுவேட்டரையரை மணம் புரிந்து கொண்டாள். வீர பாண்டியனுடைய ஆபத்துதவிப் படையைச் சேர்ந்த ரவிதாஸன், ரேவதாஸன், சோமன் சாம்பவன், கிரமவித்தன் முதலிய சதிகாரர்கள் வீர பாண்டியனுடைய மரணத்துக்குப் பழிவாங்கும் பொருட்டுச் சுந்தர சோழரின் குலத்தை அடியோடு கருவறுப்பதாகச் சபதம் செய்திருந்தார்கள். அவர்களுக்குப் பழுவேட்டரையரின் இளையராணியாகிய நந்தினி இரகசியமாக உதவி புரிந்து வந்தாள்.

கொள்ளிடக் கரைக் காட்டில் சதிகாரர்கள் கடைசி முறை இரகசியமாகக் கூடிப் பாண்டிய குலத்துச் சிறுவன் ஒருவனுக்குப் பட்டமும் கட்டினார்கள். ஆதித்த கரிகாலனைக் கொல்லும் பொறுப்பை நந்தினியே ஏற்றுக் கொண்டாள். அதே சமயத்தில் சுந்தர சோழரையும் பொன்னியின் செல்வனையும் கொன்று விட வேண்டும் என்றும் சதிகாரர்கள் முடிவு செய்தார்கள்.

பொன்னியின் செல்வன் ஈழ நாட்டிலிருந்து கோடிக்கரைக்குப் பிரயாணமாகி வந்த போது நடுக் கடலில் கப்பல் சுழிக்காற்றில் அகப்பட்டு முழுகியது. அருள்மொழியும் வந்தியத்தேவனும் பூங்குழலியினால் உயிர் தப்பிக் கரை ஏறினார்கள். ஆனால் ஈழ நாட்டில் அப்போது பரவியிருந்த கொடிய தொற்று சுரம் பொன்னியின் செல்வனைப் பற்றிக் கொண்டிருந்தது. கரை ஏறும் போது அவன் பிரக்ஞை அற்றிருந்தான். அவனைப் பூங்குழலியும் அவளுடைய இன்னொரு அத்தை மகனாகிய சேந்தன் அமுதனும் படகில் ஏற்றி நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் கொண்டு போய்ச் சேர்த்தார்கள்.

குந்தவைப் பிராட்டியும் கொடும்பாளூர் இளவரசி வானதியும் நாகைப்பட்டினத்துக்கு வந்து சூடாமணி விஹாரத்துக்கு அருகில் கால்வாய்க் கரையில் இருந்த நந்தி மண்டபத்தில் அருள்மொழியைச் சந்தித்தார்கள். சோழ நாடெங்கும் சதியும் குழப்பமுமாக இருப்பதால் இன்னும் சில நாள் சூடாமணி விஹாரத்திலேயே தங்கிப் பூரண உடல் வலிவு பெறும்படி குந்தவை அருள்மொழியைக் கேட்டுக் கொண்டாள். சகோதரியிடம் எல்லையற்ற மரியாதை வைத்திருந்த பொன்னியின் செல்வன் அதற்கு இணங்கினான்.

ஊமை ஸ்திரீ மந்தாகினி உயிரோடிருப்பதை அறிந்த குந்தவை அவளை எப்படியாவது சுந்தர சோழரிடம் சேர்ப்பிக்க விரும்பினாள். மந்தாகினி பொன்னியின் செல்வனைப் பார்ப்பதற்காகக் கோடிக்கரை வந்தாள். முதன் மந்திரி அநிருத்தரின் கட்டளைப்படி அவளைப் பலவந்தமாகக் கைப்பற்றித் தஞ்சைக்கு அழைத்துச் சென்றார்கள். தஞ்சைக்கு அருகில் அவள் தப்பி ஓடி விட்டாள். சதிகாரர்களான ரவிதாஸனும் சோமன் சாம்பவனும் பழுவூர் அரண்மனையில் புகுவதைப் பார்த்து மந்தாகினி அவர்களைப் பின்தொடர்ந்தாள். பொக்கிஷ நிலவறை வழியாகச் சுந்தர சோழர் அரண்மனையை அடைந்தாள். அவர் தூங்குகிறார் என்று எண்ணி அருகில் நெருங்கினாள். சுந்தர சோழர் அவளை மந்தாகினியின் ஆவி உருவம் என்று எண்ணி விளக்கை எடுத்து அவள் மீது எறிந்தார். குந்தவையும் மற்றவர்களும் ஓடி வந்து அவருக்கு உண்மையைத் தெரிவித்தார்கள். சுந்தர சோழர் அவள் மீண்டும் தம் வாழ்க்கையில் வந்ததை விரும்பவில்லை. அதை அறிந்தோ அறியாமலோ மீண்டும் மந்தாகினி மறைந்தாள்.

கடம்பூர் சம்புவரையர் அரண்மனைக்குப் பெரிய பழுவேட்டரையரும் இளையராணி நந்தினியும் விஜயம் செய்தார்கள். அவளுடைய ஓலையைப் பார்த்து விட்டு ஆதித்த கரிகாலர் அங்கு வந்தார். வந்தியத்தேவன் வழியிலே அவரைச் சந்தித்துக் கடம்பூர் போகாமல் தடுப்பதற்கு முயன்றான். அவருக்கு எதிராக நடக்கும் சதிகளைப் பற்றிக் கூறினான். நந்தினிக்கும் அவருக்கும் சகோதர உறவு உண்டு என்பதையும் தெரியப்படுத்தினான். கரிகாலர் அவன் தடுத்ததைக் கேளாமல் கடம்பூர் சென்றார்.

கூடுமானால் உள் நாட்டுக் குழப்பம் ஏற்படாமல் தடுக்கச் சிற்றரசர்கள் விரும்பினார்கள். ஆகையால் கரிகாலனிடம் சமரசம் பேசினார்கள். பெண்ணையாற்றுக்கு வடக்கேயுள்ள சாம்ராஜ்யப் பகுதியை அவனுக்கு அளிப்பதாகவும் மதுராந்தகனுக்குத் தென் பகுதியை அளிப்பதாகவும் கூறினார்கள். கரிகாலன் அதற்கு ஒருவாறு இணங்குவது போலப் பேசினான். மதுராந்தகனை அழைத்து வந்தால் ஒரு முடிவுக்கு வரலாம் என்று கூறினான். மதுராந்தகனை அழைத்து வரப் பெரிய பழுவேட்டரையர் தஞ்சைக்குப் புறப்பட்டார்.

கரிகாலனும் வந்தியத்தேவனும் வீர நாராயண ஏரிக் கரையின் மேற்குக் கரையிலிருந்த பெருங் காட்டில் வேட்டையாடச் சென்றார்கள். ஏரிக் கரைத் தீவு ஒன்றில் நீர் விளையாடி விட்டு வன போஜனம் செய்வதற்காக நந்தினியும் சம்புவரையர் மகள் மணிமேகலையும் சென்றார்கள். ஏரிக்கரையில் இந்த நால்வரும் சந்தித்தார்கள்.

மணிமேகலை முன்னமே வந்தியத்தேவனிடம் காதல் கொண்டிருந்தாள். அவனை ஒரு சமயம் பெரும் அபாயத்திலிருந்து அவள் தப்புவித்திருந்தாள்.

கரிகாலன் நந்தினியைச் சிறிது நேரம் தனியாகச் சந்திக்க நேர்ந்த போது, "நீ என் சகோதரி" என்று தெரிவித்தான். அதுவும் ஒரு சதி என்று கூறி மறுத்தாள்.

மணிமேகலை யாழிசையுடன் தனது இனிய குரலிசையைச் சேர்த்துப் பாடினாள். கான இன்பத்தில் அவர்கள் மெய்மறந்திருந்த போது புயற் காற்று வீசத் தொடங்கியது. அவர்கள் ஏறி வந்த படகு மிதந்து போய் விட்டது. மாலையில் சம்புவரையர் பெரிய படகுகளுடன் அங்கு வந்து அவர்களை அழைத்துச் சென்றார்.

நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரம் திடீரென்று ஏற்பட்ட புயல், வெள்ளத்தில் மூழ்கியது. அங்கிருந்த இளவரசர் அருள்மொழிவர்மர் வெள்ளத்திலிருந்து தப்பித்து ஆனைமங்கலம் அரண்மனைக்கு வந்து சேர்ந்தார். அங்கிருந்து ஒரு வியாபாரியைப் போல் வேடமணிந்து கொண்டு தஞ்சை அரண்மனைக்குப் புறப்பட்ட இளவரசரைப் பொது மக்கள் அடையாளம் கண்டு கொண்டு விட, பதினாயிரக் கணக்கான ஜனங்களும் அவருடனேயே தஞ்சைக்குப் புறப்பட்டுச் சென்றார்கள்.

இதே சமயத்தில், நந்தினியின் விருப்பத்தின் பேரில் தஞ்சையிலுள்ள மதுராந்தகரைக் கடம்பூருக்கு

அழைத்து வருவதற்காகப் பெரிய பழுவேட்டரையரும் தஞ்சைக்குப் புறப்பட்டார். அவர் கொள்ளிடத்தைக் கடக்கும் போது வெள்ளம் காரணமாகப் படகு நீரில் மூழ்கியது. பெரிய பழுவேட்டரையர் தமது முழு பலத்தையும் பிரயோகித்து வெள்ளத்திலிருந்து தப்பித்து ஓர் அம்மன் கோவில் மண்டபத்தில் களைப்பாறினார்.

அந்த இருட்டு வேளையில் பாண்டிய நாட்டுச் சதிகாரர்களான ரவிதாஸனும் பரமேச்வரனும் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டார் பெரிய பழுவேட்டரையர். தஞ்சை அரண்மனையிலுள்ள சுந்தரசோழர், கடம்பூரிலுள்ள கரிகாலன், தஞ்சைக்கு வந்து கொண்டிருந்த அருள்மொழிவர்மன் ஆகிய மூவரையும் ஒரே சமயத்தில் கொல்லச் செய்திருந்த சதியை அவர்கள் பேச்சிலிருந்து தெரிந்து கொண்ட பெரிய பழுவேட்டரையர், அந்தச் சதியில் நந்தினியும் தொடர்பு கொண்டிருப்பதையறிந்து வேதனையும் கோபமும் கொண்டார். அந்தச் சதியிலிருந்து அம் மூவரையும் எப்படியாவது காப்பாற்றியே ஆக வேண்டும் என்று தீர்மானித்துக் காற்றென விரைந்தார்.

கரிகாலனைத் தாமே சென்று காப்பாற்ற வேண்டும்; அதனால் மற்ற இருவரையும் காப்பாற்ற நம்பிக்கையானவர்களைத் தூதனுப்ப வேண்டும் என்பதற்காகக் குடந்தை ஜோதிடர் வீட்டுக்கு வந்தார் பெரிய பழுவேட்டரையர். அங்கு தற்செயலாகக் குந்தவையையும் வானதியையும் சந்தித்தார். குந்தவையிடம் நடக்கவிருக்கும் ஆபத்தைக் கூறித் தக்க ஏற்பாடு செய்யச் சொல்லி விட்டு அவர் கடம்பூருக்குப் புறப்பட்டார்.

அவர் சென்றவுடன், ஆழ்வார்க்கடியானும் பூங்குழலியும் ஜோதிடர் வீட்டுக்கு வந்து சேர்ந்தனர். அப்போது காவிரியில் வெள்ளப் பெருக்கெடுத்து அது ஜோதிடர் வீட்டை நோக்கி வர ஆரம்பிக்கவே, அனைவரும் அருகிலிருந்த அம்மன் கோவில் மண்டபத்தில் ஏறித் தப்பிக்க, வானதி மட்டும் வெள்ளத்தில் விழுந்து விட்டாள். அதிர்ஷ்டவசமாக அவள் ஜோதிடர் வீட்டுக் கூரையைப் பிடித்துக் கொள்ள, கூரை, இடிந்து விட்ட சுவரிலிருந்து தனியே பிரிந்து மிதக்கலாயிற்று. அதனுடன் சேர்ந்து வானதியும் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டாள்!

## அத்தியாயம் 16

## பூங்குழலி பாய்ந்தாள்!




சோழ நாட்டில் பிரயாணம் செய்துள்ளவர்கள் அந்நாட்டின் இயற்கை அமைப்பில் ஒரு விசித்திரத்தைக் கவனித்திருப்பார்கள். சோழ நாட்டைச் சோறுடைய வளநாடாகச் செய்யும் நதிகளில் வெள்ளம் வரும் போது, வெள்ளத்தின் மேல் மட்டம் நதிக்கு இருபுறங்களிலுள்ள பூமி மட்டத்துக்கு மிக்க உயரமாயிருக்கும். இவ்விதம் இருப்பதினாலேதான் நதிகளில் வரும் வெள்ளம் வாய்க்கால்களின் வழியாக வயல்களுக்குப் பாய்வது சாத்தியமாகின்றது.

இந்த நிலையில் வெள்ளத்தை நதிப்படுகையோடு போகச் செய்வதென்பது மிகவும் சிரமமான காரியம் அல்லவா? நதிகளுக்கு இரு பக்கங்களிலும் உயரமான கரைகள் உறுதியாக அமைந்திருக்க வேண்டும். இல்லாவிடில், வெள்ளம் நதியோடு போவதற்குப் பதிலாக, மழை நீர் நாலாபுறமும் பாய்ந்து ஓடுவது போல் ஓடிச் சோழ நாட்டைத் தண்ணீர் தேங்கிய சதுப்பு நிலமாக்கி ஒன்றுக்கும் பயனற்றதாகச் செய்து விடும்.

இதை முன்னிட்டு ஆதி காலத்திலிருந்து சோழ மன்னர்கள் காவேரிக்கும் காவேரியின் கிளை நதிகளுக்கும் கரைகள் அமைப்பதில் மிக்க கவனம் செலுத்தினார்கள். கரிகால் வளவன் ஈழ நாட்டிலிருந்து யுத்தத்தில் தோற்றவர்களைச் சிறைப்படுத்தி வந்து காவேரிக்குக் கரையெடுக்கும் வேலையில் அவர்களை ஈடுபடுத்தினான் என்னும்

வரலாற்றை நேயர்கள் அறிந்திருப்பார்கள்.

காவேரியின் கிளை நதிகளில் தண்ணீர் நல்ல மேல் மட்டத்தில் வருவதற்கு உதவியாகவே ஸ்ரீரங்கத்துக்கு ஒரு காத தூரம் கிழக்கே சோழ மன்னர்கள் கல்லணை கட்டினார்கள். அந்த அணையின் மூலம் தண்ணீர் மட்டம் மேலும் உயர்ந்து கிளை நதிகளில் நிறையத் தண்ணீர் பாய்வது சாத்தியமாயிற்று.

இவ்விதம் இயற்கை அமைப்போடு இடைவிடாத செயற்கை முயற்சிகளும் சேர்ந்தே சோழ நாட்டைப் பண்டை நாளிலேயே நீர் வளத்தில் இணையில்லாத நாடாகச் செய்திருந்தன.

சோழ வள நாட்டுக்கு இவ்விதம் இயற்கை விசேஷ உதவிகள் செய்தது போலவே சில சமயம் விபரீதமான அபாயங்களையும் உண்டாக்கி வந்தது.

சோழ மண்டலத்துக் கடற்கரைக்குக் கிழக்கே கடலில் அடிக்கடி சுழிக் காற்றுகளும் புயற் காற்றுகளும் தோன்றுவதுண்டு. இக் காற்று சில சமயம் கடற்கரையோரமாக வடக்கு நோக்கிச் சென்று கிருஷ்ணை — கோதாவரி முகத்துவாரங்களிலோ அல்லது கலிங்க நாட்டிலோ உள்ளே பிரவேசித்துப் பெரு மழை கொட்டச் செய்து கடுமையான சேதங்களை விளைவிக்கும். வேறு சில சமயங்களில் சோழ நாட்டுக்குள்ளேயே நேரடியாகப் பிரவேசித்து மேற்கு நோக்கி விரைந்து செல்லும். கோடிக்கரைக்கும் கொள்ளிடக் கரையின் முகத்துவாரத்துக்கும் மத்தியில் இவ்விதம் சுழிக் காற்று உள்நாட்டில் பிரவேசிப்பது சரித்திரத்தில் பலமுறை நடந்திருக்கும் சம்பவம். சில சமயம் அச் சுழிக்காற்றுகள் கோர பயங்கர ரூபங் கொண்டு கடலையே பொங்கி எழச் செய்து கடற்கரையோரமுள்ள ஊர்களையே அழித்து விடும்!

பூம்புகார் என்று வழங்கிய காவேரிப் பட்டினத்தைக் கடல் கொண்டது வெறுங் கதையன்று; சரித்திர ஆதாரங்களினால் நிரூபிக்கக்கூடிய உண்மை நிகழ்ச்சியேயாகும்.

நதிகளில் வெள்ளம் அதிகமாக வரும் போது சில சமயம் கரைகள் உடைந்து விடுவதும் உண்டு. நதிகளின் நீர்மட்டத்தைக் காட்டிலும் பூமி மட்டம் தாழ்வாயிருக்கும் காரணத்தினால் உடைப்பு எடுத்ததும் சுற்றுப்புறமெல்லாம் ஒரே தண்ணீர் மயமாகி விடும். நதிகளுக்கு அருகிலுள்ள ஊர்கள் முழுகிப் போய் விடும். அப்போதெல்லாம் ஜனங்கள் உயிர் தப்புவதற்கு அக்கம்பக்கத்திலுள்ள கோயில்கள் உதவியாயிருக்கும்.

விஜயாலய சோழனின் மகன் ஆதித்த சோழன் காவேரி உற்பத்தியாகும் ஸஹ்ய மலையிலிருந்து அந்த மாநதி கடலில் சங்கமமாகும் இடம் வரையில் நூற்றெட்டு ஆலயங்களை எடுப்பித்தான் என்று சரித்திரம் கூறுகிறது. சாதாரண காலங்களில் கோயில்கள் கடவுளை ஆராதிப்பதற்குப் பயன்படுவது போலவே, பெருவெள்ளம் வந்து உடைப்பெடுக்கும் காலத்தில் மக்கள் கோயில் மண்டபங்களின் மீது ஏறி உயிர் தப்புவதற்கும் உபயோகமாயிருக்கட்டும் என்பது ஆதித்த சோழனின் நோக்கமாக இருக்கலாம் அல்லவா?

நதிக் கரைகளில் உடைப்பு உண்டாவதன் காரணமாகச் சில சமயம் நதிகளின் போக்கே மாறி விடுவதும் உண்டு. அரிசிலாறு, குடமுருட்டி முதலிய நதிகள் இப்படிப் பலமுறை இடம் மாறி, திசை மாறியிருக்கின்றன என்பதைப் பழைய வரலாறுகளிலிருந்து அறியலாம்.



னி நம்முடைய வரலாறு நடந்த காலத்துக்கு வருவோம். இலங்கைத் தீவிலிருந்து சோழ நாட்டுக்குப் பார்த்திபேந்திரனுடைய கப்பல் வந்து கொண்டிருந்த போது உண்டான சுழிக்காற்று, வந்தியத்தேவனை முன்னிட்டு இளவரசர் அருள்மொழிவர்மரைக் கடலில் குதிக்கச் செய்த பிறகு, கடலோரமாகவே சென்று கலிங்க நாட்டை அடைந்து மறைந்தது.

ஆனால் அருள்மொழிவர்மர் நாகைப் பட்டினம் சூடாமணி விஹாரத்தில் தங்கியிருந்த போது உண்டான சுழிக்காற்று சோழ நாட்டுக்குள்ளேயே புகுந்து பற்பல அட்டகாசங்களைச் செய்து கொண்டு மேற்கு நோக்கிச் சென்றது. ஒரே இரவில் அது காவேரியின் இருபுறங்களிலும் தன் லீலைகளை நடத்திக் கொண்டு போய் மறுநாள் கொங்கு நாட்டை அடைந்து தேய்ந்து மறைந்தது. அது பிரயாணம் செய்த இடங்களிலெல்லாம் பற்பல சேதங்களை விளைத்தது மட்டுமன்று; அதைத் தொடர்ந்து பெரு மழை கொட்டும்படியாகவும் செய்து கொண்டு போயிற்று. மேற்கே போகப் போக மழை அதிகமாகப் பெய்தது. ஆகவே காவேரியிலும் கொள்ளிடத்திலும் அவற்றிலிருந்து பிரிந்த கிளை நதிகளிலும் மறுநாள் முதல் வெள்ளம் அபரிமிதமாக வந்தது. பல நதிகள் கரைகளை உடைத்துக் கொண்டன. மழையினாலும் நதிகளின் உடைப்பினாலும் சோழ நாடெங்கும் வெள்ளக் காடாகி விட்டது.

ஆனால் இவ்வளவு இயற்கை விபரீதங்களும் சோழ நாட்டு மக்களைப் பீதி கொண்டு செயலிழந்து விடும்படி செய்து

விடவில்லை. இவை அடிக்கடி நடைபெறும் நிகழ்ச்சிகளாதலால், அம்மாதிரி நிலைமைகளில் என்ன செய்ய வேண்டும் என்பதை மக்கள் அறிந்திருந்தார்கள். அப்போதைக்குக் கோயில் மண்டபங்களிலோ வேறு உயரமான இடங்களிலோ ஏறிக் கொண்டு உயிர் தப்புவார்கள். வெள்ளம் எவ்வளவு அவசரமாக வந்ததோ, அவ்வளவு துரிதமாக வடிந்தும் போய் விடும். பிறகு வழக்கம் போல் அவரவரின் வேலையில் ஈடுபடுவார்கள். வீடுகளை இழந்தவர்கள் அக்கம் பக்கத்தில் உள்ளவர்களின் உதவியைக் கொண்டு உடனே வீடு கட்டிக் கொள்வார்கள். "ஐயோ! போய் விட்டதே!" என்று தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட மாட்டார்கள்.

சோர்வு, சோம்பல் என்பதையே அறியாத தன்னம்பிக்கை கொண்ட மக்கள் அக்காலத்தில் சோழ நாட்டில் வாழ்ந்திருந்தார்கள். இல்லாவிடில் இன்றைக்கும் உலகம் கண்டு வியக்கும்படியான அற்புதங்களை அவர்கள் சாதித்திருக்க முடியாது அல்லவா?

வானதி கோயில் மண்டபத்தின் மீது ஏறாமல் தவறித் தண்ணீரில் விழுந்ததும் முதலில் மண்டபத்தின் மேல் ஏறியிருந்தவர்கள் கவலை அடைந்தார்கள். ஆனால் உடனடியாக அந்தக் கவலை மாறியது. வானதி ஜோதிடர் வீட்டுக் கூரை மீது தொத்திக் கொண்டதைப் பார்த்து அவர்களுக்குத் தைரியம் உண்டாயிற்று. இளையபிராட்டி ஓரளவு குதூகலமே அடைந்தாள். வானதியை அபாயகரமான நிலைமைகளில் சிக்க வைப்பதிலும் அவள் எப்படிச் சமாளிக்கிறாள் என்று பார்ப்பதிலும் குந்தவை தேவிக்கு எப்போதும் உற்சாகம் இருந்தது. வீராதி வீரனான தன் தம்பியை மணந்து கொள்ளப் போகிறவள் நெஞ்சுத் துணிவுள்ள தீர மங்கையாக வேண்டுமென்பதில் இளையபிராட்டிக்குச் சிரத்தை இருந்தது. அத்தகைய தீரத்தை வானதியின் உள்ளத்தில் வளர்க்கும் பொருட்டுக் குந்தவை பல உபாயங்களையும் தந்திரங்களையும் கையாண்டு வந்தாள். அந்த உபாயங்கள் நல்ல பலன் அளித்திருக்கின்றன என்ற நம்பிக்கையும் அவளுக்கு ஏற்பட்டிருந்தது.

சில காலமாக வானதி மூர்ச்சையடைந்து விழும் வழக்கத்தை விட்டு விட்டிருந்தாள் அல்லவா?

இப்போது குந்தவையின் தந்திரம் ஒன்றுமின்றித் தெய்வாதீனமாகவே வானதியின் தீரத்தைச் சோதிக்கும் வாய்ப்பு ஏற்பட்டு விட்டது. சுற்றிலும் வெள்ளம் சூழ்ந்திருக்க, ஓர் ஓட்டுக் கூரையின் மேல் வானதி தொத்திக் கொண்டிருந்தாள். அவள் பயப்படாதிருப்பாளா? ஜோதிடரின் சீடன் படகு கொண்டு வந்து அவளைத் தப்புவிக்கும் வரையில் தைரியத்தைக் கைவிடாது இருப்பாளா?— ஆம்; இருப்பாள்! சந்தேகமில்லை! இத்தனை காலமும் அளித்து வந்த பயிற்சி இச் சமயம் பயன்படாமலா போய் விடும்?

இவ்விதம் குந்தவை எண்ணமிட்டுக் கொண்டிருந்த போது, ஆழ்வார்க்கடியான், "தாயே! இது என்ன? கூரை நகர்வதாகத் தோன்றுகிறதே?" என்றான்.

"உன் கண்ணிலே ஏதோ கோளாறு! வெள்ளம் நகர்ந்து செல்கிறது; கூரை நகர்வதாகத் தோன்றுகிறது!" என்றாள் குந்தவை. இப்படிச் சொல்லும்போதே அவளுடைய உள்ளத்திலும் சந்தேகம் உதித்து விட்டது. அதன் அறிகுறி முகத்திலும் காணப்பட்டது.

"அம்மா! நன்றாய்ப் பாருங்கள்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"ஐயோ! இது என்ன விபரீதம்?" என்றாள் இளையபிராட்டி.

"ஜோதிடரே! உம்முடைய சீடன் சீக்கிரம் படகுடன் வருவானா?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"போதும்! போதும்! ஜோதிடரையும் அவருடைய சீடனையும் நம்பியது போதும்! திருமலை! உன்னால் வானதியைக் காப்பாற்ற முடியுமா என்று பார்! இல்லாவிட்டால், நானே வெள்ளத்தில் குதிக்க வேண்டியதுதான்! வானதிக்கு ஏதேனும் நேர்ந்து விட்டால், அப்புறம் நான் ஒரு கணமும் உயிர் வைத்திருக்க மாட்டேன்!" என்றாள்.

"தாயே! அபாயம் நேரும் காலத்திலேதான் நிதானத்தை இழக்கக் கூடாது. இது தங்களுக்குத் தெரியாதது அல்ல. கொடும்பாளூர் இளவரசிக்கு உதவி செய்வதற்காக என் உயிரைக் கொடுக்கவும் சித்தமாயிருக்கிறேன். அதனால் பயன் ஏற்பட வேண்டுமே? படகு இல்லாமல் நான் மட்டும் நீந்திச் சென்றால் அந்தக் கூரையில் போய் நானும் தொத்தி ஏறிக் கொள்ளலாம். கொடும்பாளூர் இளவரசியைத் தாங்கும் கூரை என்னையும் சேர்த்துத் தாங்குமா? அல்லது இரண்டு பேரையும் வெள்ளத்தில் அமுக்கி விட்டுக் கூரையும் கீழே போய் விடுமா? இதைப் பற்றிச் சிறிது யோசிக்க வேண்டும்......"

பூங்குழலியின் சிரிப்புச் சத்தத்தைக் கேட்டு அவளை இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

"இந்த வீர வைஷ்ணவர் யோசித்து முடிப்பதற்குள் கொடும்பாளூர் இளவரசி வாழ்க்கை முடிந்து விடும்!" என்றாள் பூங்குழலி.

"அப்படி நேர்ந்தால் இந்த ஓடக்காரப் பெண் சந்தோஷப்படுவாள்!" என்று ஆழ்வார்க்கடியான் கூறியதும் பூங்குழலியின் முகத்தில் ஆத்திரம் கொதித்தது.

திருமலை மேலும் தொடர்ந்து கூறினான்: "ஆனால், தேவி! அவ்விதம் ஒன்றும்



நேரப் போவதில்லை. ஆலிலை மேல் பள்ளி கொண்டு அகிலமெல்லாம் காப்பாற்றும் திருமால் வானதியையும் காப்பாற்றுவார். மச்ச கூர்ம வராக அவதாரங்கள் எடுத்து இந்தப் பூவுலகைக் காப்பாற்றிய ஸ்ரீமந் நாராயணன் கொடும்பாளூர் இளவரசியையும் காப்பாற்றுவார்!.... அதோ பாருங்கள்! ஜோதிடர் சீடன் படகுடன் வருகிறான்!''

ஆழ்வார்க்கடியான் சுட்டிக் காட்டிய திசையில் உண்மையாக ஒரு படகு வந்து கொண்டிருந்தது. அப் படகு வெள்ளத்தின் வேகத்தை எதிர்த்து இவர்கள் இருந்த கோயில் மண்டபத்தை நோக்கி மெதுவாக வந்து

கொண்டிருந்தது.

வானதி ஏறியிருந்த கூரையோ வெள்ளத்தோடு போய்க்கொண்டிருந்தது.

படகு இங்கே வந்து இவர்களை ஏற்றிக் கொண்டு போவதற்கு வெகு நேரம் ஆகிவிடும். அதற்குள் வானதி அதிக தூரம் போய் விடுவாள். கண்ணுக்கு மறைந்தாலும் மறைந்து விடுவாள்.

இவையெல்லாம் எண்ணி மண்டபத்தின் மேல் நின்றவர்கள் படகில் வந்த ஜோதிடர் சீடனைப் பார்த்து உரத்துக் கத்தினார்கள்; சமிக்ஞைகளும் செய்து பார்த்தார்கள். தன்னைச் சீக்கிரம் வரச் சொல்கிறார்கள் என்று எண்ணிக் கொண்டு அவன் படகை விரைவாகச் செலுத்தி வர முயன்றான்.

பூங்குழலி அப்போது குந்தவையைப் பார்த்து, "தேவி! எனக்கு அனுமதி கொடுங்கள்! நான் நீந்திப் போய்ப் படகை வழி மறித்து அழைத்துச் சென்று கொடும்பாளூர் இளவரசியை ஏற்றி வருகிறேன்!" என்றாள்.

குந்தவை சிறிது தயங்கினாள். பூங்குழலி கையைக் கொடுக்கப் போய்த்தான் வானதி வெள்ளத்தில் விழுந்தாள் என்பது அவளுக்கு நினைவு இருந்தது.

"தேவி! என்னை நம்புங்கள். என்னுடைய அஜாக்கிரதையினால்தான் இளவரசி வெள்ளத்தில் விழுந்தாள். ஆகையால் அவரை மீட்பது என்னுடைய கடமை!" என்று பூங்குழலி கூறினாள்.

"பெண்ணே! உன்னை நான் நம்புகிறேன். ஆனால் வானதியைத்தான் நம்பவில்லை!" என்றாள் குந்தவை.

"ஆகா! நான் இருக்கும் படகில் ஒரு வேளை ஏற மறுத்து விடுவார் என்கிறீர்களா? அப்படியானால் அவரை ஏற்றி விட்டு நான் இறங்கிக் கொள்வேன்!" என்று சொல்லிக் கொண்டே பூங்குழலி வெள்ளத்தில் பாய்ந்தாள். படகை நோக்கி விரைந்து சென்றாள்.

குந்தவை ஜோதிடரைப் பார்த்து, "ஐயா! ஜோதிடரே! உம்முடைய சாஸ்திரத்தில் ரொம்ப நம்பிக்கை வைத்திருந்தேன். இன்றைக்கு அந்த நம்பிக்கையை இழந்து விட்டேன்!" என்றாள்.

"ஆனால் எனக்கு இன்றைக்குத்தான் பூரண நம்பிக்கை ஏற்பட்டது, தேவி! கொடும்பாளூர் இளவரசியின் ஜாதகப் பிரகாரம் அவருக்கு இன்று பெரிய கண்டம் வர வேண்டும். பழுவேட்டரையர் மூலம் அது வருமோ என்று நினைத்தேன். அப்படி வராமற் போகவே ஆச்சரியமடைந்தேன். வேறு விதமாகக் கண்டம் வந்தது. இளவரசி இந்தக் கண்டத்துக்குத் தப்பிப் பிழைப்பார்! ஆகா! அவருடைய அபூர்வமான கை ரேகைகள்! அவர் விஷயமாக நான் சொல்லியிருப்பதெல்லாம் நிறைவேறும்! அதைப் பற்றிச் சந்தேகமில்லை!" என்றார்.

"அழகாய்த்தானிருக்கிறது. அது எப்படி நிறைவேறும்? வானதி இந்தக் கண்டத்துக்குத் தப்பிப் பிழைத்தாலும் உம் ஜோசியம் நிறைவேறப் போவதில்லை. சற்றுமுன் உம்முடைய வீட்டில் அந்தப் பெண் செய்த சபதத்தை நீர் கேட்கவில்லையா?" என்றாள் குந்தவை.

"யார் என்ன சபதம் செய்தாலும், என் ஜோசியம் நிறைவேறியே தீரும். அப்படி நிறைவேறாவிட்டால், என்னிடமுள்ள ஜோதிட ஏடுகளையெல்லாம் காவேரி நதியில் எறிந்து விடுகிறேன்! இது என் சபதம்!" என்றார் ஜோதிடர்.

அப்போது ஆழ்வார்க்கடியான், "ஜோதிடரே! உமது ஏடுகளை நீரே எறியும் வரையில் காவேரி மாதா காத்திருக்கவில்லை. அவளே கொண்டு போய் விட்டாள்!" என்றான்.

ஜோதிடர் அவன் கூறியதன் உண்

மையை உணர்ந்து திகைத்து நின்றார். "ஆயினும், என் ஜோதிடம் பலிக்காமற் போகாது!" என்று தம் வாய்க்குள்ளே முணுமுணுத்துக் கொண்டார்.

## அத்தியாயம் 17

## யானை எறிந்தது!

சென்ற அத்தியாயங்களில் கூறிய சம்பவங்கள் நடந்த அன்றைக்கு முதல் நாள், நாகைப் பட்டின நகர மாந்தரின் விருந்தினராக இளவரசர் அருள்மொழிவர்மரை நாம் விட்டு விட்டு வந்தோம். விருந்தெல்லாம் முடிந்த பிறகு அலங்கரித்த யானை மீது இளவரசர் புறப்பட்டார். எண்ணற்ற மக்கள் அவரைத் தொடர்ந்து தஞ்சைக்கு வருவோம் என்று கிளம்பினார்கள். அன்றிரவு இளவரசரும் அவருடன் வந்த ஜனங்களும் திரு ஆரூர் வந்து சேர்ந்தார்கள்.

திரு ஆரூர் மக்கள் இளவரசர் வருகையை முன்னதாக அறிந்திருந்தபடியால், அவருக்கு இராஜரீக வரவேற்பு அளித்து இராஜோபசாரங்கள் செய்தார்கள். பழம் பெரும் பதியான திரு ஆரூரில் குணவாசலிலிருந்து குடவாசல் வரையில் மக்கள் திரண்டு நின்றார்கள். நாலு இராஜ வீதிகளிலும் எள்ளுப் போட்டால் எள்ளு விழாதபடி ஜனக் கூட்டம் நிறைந்திருந்தது. வீடுகளின் முகப்புகள் எல்லாம் தோரணங்களினால் அலங்கரிக்கப்பட்டிருந்தன. திரு ஆரூர்ச் சோழ மாளிகையையும் அதிகாரிகள் அலங்கரித்திருந்தார்கள். இளவரசருக்கு மட்டுமின்றி அவருடன் வரும் திரளான மக்களுக்கும் விருந்தளிக்க ஏற்பாடு செய்திருந்தார்கள்.

முதல் நாளிரவு திரு ஆரூர் வழியாகவும் கொடும் புயல் சென்றிருந்தது. ஆனால் இளவரசர் வருகையில் உண்டான குதூகல கோலாகலப் புயல் முதல் நாள் அடித்த புயலை அடியோடு மறக்கச் செய்து விட்டது. வீதிகளிலெல்லாம் வாத்திய முழக்கங்களும் ஆடல் பாடல்களும் குரவைக் கூத்துக்களும் பொம்மையாட்டங்களும் வீர, முழக்கங்களுடன் கூடிய கத்தி விளையாட்டு — கழி விளையாட்டுக்களும் நடந்து கொண்டிருந்தன.

தஞ்சாவூர்ச் சோழ குலத்தினர் தில்லையம்பலத்தில் ஆடும் நடராஜப் பெருமானின் கோயிலுக்கு அடுத்தபடியாகத் திரு ஆரூரில் உள்ள தியாகராஜப் பெருமானின் ஆலயத்திடம் விசேஷ பக்தி கொண்டு, ஏராளமான மானியங்கள் அளித்திருந்தார்கள். ஆனால் இளவரசர் அருள்மொழி வர்மர் மட்டும் அதுவரையில் திரு ஆரூர் வந்ததில்லை. ஆகையால் கோயிலுக்கு இளவரசர் அவசியம் வர வேண்டுமென்று ஆலயத்தார் வற்புறுத்தினார்கள். இளவரசரும் கோயிலுக்குப் போனார். பல காரணங்களினால் அவருடைய உள்ளம் கொந்தளித்துக் கொண்டிருந்தபடியால் இறைவனுடைய திருக்கோலங்களில் அவருடைய மனம் பூரணமாக ஈடுபட முடியவில்லை. அர்ச்சனை ஆராதனைகள் முடிந்து இறைவனுடைய பிரசாதங்களும் பெற்றுத் திரும்பும் சமயத்தில், ஆலயத்தார்களைப் பார்த்து இளவரசர் "இந்தக் கோயிலின் இறைவருக்குத் தியாகராஜர் என்று ஏன் பெயர் வந்தது?" என்று கேட்டார்.

தேவர்களுக்குள் மகா தேவரும் மூவர்களில் முதல்வருமான சிவபெருமான் மூன்று உலகங்களிலும் வாழும் உயிர்கள் உய்யும் பொருட்டுச் செய்த தியாகங்களை ஆலயத்தார் எடுத்துச் சொன்னார்கள். மூன்று உலகங்களையும் ஆக்கவும் அழிக்கவும் வல்ல பெருமான் தம்முடைய பக்தர்களுக்கு அருள்புரியுமாறு மேற்கொண்ட கஷ்டங்களைப் பற்றிக் கூறினார்கள். உயிர்கள் உய்யும் பொருட்டுத் தவக்கோலம் பூண்டு மயானத்தில் தவம் புரிந்ததைப் பற்றிச் சொன்னார்கள். அந்தத் தவத்தையும் கைவிட்டுத் தேவர்களின் நன்மைக்காக உமையை மணந்தது பற்றிக் கூறினார்கள். எல்லா உலகங்களுக்கும் இறைவர் பிக்ஷாடன மூர்த்தியாகத் தோன்றிப் பிச்சை எடுத்த வரலாற்றைக் கூறினார்கள். தில்லை அம்பலத்தில் வந்து ஆடியது பற்றிச் சொன்னார்கள். பிட்டுக்கு மண் சுமந்து பாண்டிய மன்னனிடம் பிரம்பினால் அடிபட்டது பற்றியும் கூறினார்கள்.

அத்தகைய தியாகராஜப் பெருமான் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள திரு ஆரூரில் பழைய காலத்தில் அருள்மொழி வர்மரின் முன்னோர்கள் வசித்து வந்ததையும், மனுநீதிச் சோழன் பசுவுக்கு நீதி வழங்கும் பொருட்டுத் தன் அருமை மகனையே தியாகம் செய்த அற்புதத்தையும் நினைவூட்டினார்கள்.

இவையெல்லாம் அருள்மொழிவர்மரின் உள்ளத்தில் நன்கு பதிந்தன. இதுகாறும் புத்த பகவானுடைய தியாகத்தை நினைந்து நினைந்து வியந்து கொண்டிருந்த இளவரசர், தேவ தேவரான சிவபெருமானைத் தியாக

மூர்த்தியாகச் சித்திரிக்கும் வரலாறுகளைப் பற்றி எண்ணி எண்ணி வியக்கத் தொடங்கினார். மேலைத் தேசங்களிலே கடவுளின் திருப்புதல்வராகப் போற்றப்படும் அவதார புருஷர் மக்களின் நலத்துக்காகச் சிலுவையில் அறையப் பட்டு மாண்டார் என்ற வரலாறும் அவர் காதுக்கு எட்டியிருந்தது. இவற்றையெல்லாம் பற்றிச் சிந்திக்கச் சிந்திக்க, மனிதனுக்குத் தெய்வத்தன்மை அளிக்கக் கூடியது தியாகந்தான் என்னும் எண்ணம் அவர் மனத்தில் வேர் ஊன்றியது. ஆதலின் அவரைச் சூழ்ந்துள்ள மக்கள் அனைவரும் தம் மீதுள்ள அன்பின் மிகுதியினால் தம்மைத் தஞ்சைச் சிங்காதனத்தில் அமர்த்திப் பட்டம் சூட்ட விரும்புவது பற்றி அவர் மனம் அளவில்லாத வேதனை அடைந்தது. இவர்களுடைய அன்புச் சிறையிலிருந்து தப்புவது எப்படி என்பது பற்றியும் தீவிரமாக யோசிக்கலானார்.

ஆலய வழிபாட்டுக்குப் பிறகு திரு ஆரூர் மக்கள் இளவரசருக்குப் பெருவிருந்து அளித்தார்கள். அவரை உபசரிக்கும் பொருட்டுப் பற்பல கேளிக்கைகளை நடத்தினார்கள். அவற்றிலெல்லாம் இளவரசரின் உள்ளம் ஈடுபடா விட்டாலும் வெளிப்படையாக உற்சாகம் காட்டி ஏற்றுக் கொண்டார்.

பின்னர், ஏறக்குறைய நடுநிசியில் இளவரசர் சோழ மாளிகைக்கு வந்து சேர்ந்தார். அங்கே சில விபரீதமான செய்திகள் காத்திருந்தன. தஞ்சைக்கு மேற்கே பலமான மழை பெய்தபடியால் காவேரியிலும் கொள்ளிடத்திலும் அவற்றின் கிளை நதிகளிலும் பெரு வெள்ளம் வந்து பல இடங்களில் கரை உடைத்துக் கொண்டதாகவும், ஒரே வெள்ளக் காடாக இருப்பதால் மேற்கொண்டு பிரயாணத்தைத் தொடர்ந்து நடத்துவது கஷ்டமாயிருக்குமென்றும் சொன்னார்கள். இரண்டு நாள் திரு ஆரூரில் தங்கி வெள்ளம் வடிந்த பிறகு புறப்படுவது உசிதம் என்றும் தெரிவித்தார்கள். இதற்கு இளவரசர் இஷ்டப்படவில்லை. தஞ்சையை உடனே அடைய வேண்டுமென்ற பரபரப்பு அவர் உள்ளத்தில் குடி கொண்டிருந்தது. நதி உடைப்புக்களும் வெள்ளமும் அவருடைய அந்த ஆர்வத்தைத் தடை செய்துவிடக் கூடுமா, என்ன? ஆம்; இத்தனை ஜனங்களும் உடன் வந்தால் பிரயாணம் தடைப்படத்தான் செய்யும். தாம் மட்டும் தனியே யானை மீது ஏறிச் சென்றால் பிரயாணம் தடைப்பட வேண்டிய அவசியமில்லை. யானைக்கு அண்டாத ஆழம் உடைய நதி எதுவும் தஞ்சைக்குப் போகும் வழியில் இல்லை. அப்படியிருந்தாலும் இளவரசருக்கு அதைப் பற்றிக் கவலை கிடையாது. தண்ணீரிடத்தில் அவருக்கு எப்போதும் அச்சம் ஏற்பட்டதில்லை. பொன்னி நதி அவருடைய அன்னைக்கு மேலான அன்புடையவள் ஆயிற்றே? சின்னஞ்சிறு குழந்தைப் பிராயத்தில் தான் முழுகிப் போகாமல் காப்பாற்றிய காவேரித்தாய் இப்போது தன்னைக் காப்பாற்ற மாட்டாளா?

இந்தப் பெருந் திரளான மக்களிடமிருந்து எப்படித் தப்பித்துச் செல்வது என்பதுதான் கேள்வி. அயோத்தியின் மக்களிடமிருந்து இராமர் இரவுக்கிரவே தப்பிச் சென்றது பொன்னியின் செல்வருக்கு நினைவு வந்தது. அவ்விதமே அவரும் இரவில் ஜனங்கள் தூங்கும் சமயத்தில் போய் விட்டால் என்ன? எல்லாவற்றுக்கும் யானைப் பாகனிடம் எந்த நேரத்திலும் புறப்பட ஆயத்தமாயிருக்கும்படி சொல்லி வைப்பது நல்லது.


ந்த எண்ணம் தோன்றியதும் யானைப் பாகனை அழைத்து வரும்படி அரண்மனைச் சேவகனுக்கு இளவரசர் கட்டளையிட்டார். சேவகன் வீதிக்குச் சென்று பார்த்து விட்டு உடனே திரும்பி வந்தான். யானை மட்டும் வாசலில் கட்டியிருக்கிறதென்றும் யானைப் பாகனைக் காணோம் என்றும் தெரிவித்தான்.

"ஒருவேளை வீதிகளில் நடைபெறும் ஆடல் பாடல் களியாட்டங்களைப் பார்க்கப் போயிருப்பான். அவன் திரும்பி வந்ததும் அழைத்து வா! அல்லது யாரையாவது சிலரை அனுப்பித் தேடிப் பார்க்கச் சொல்!" என்று இளவரசர் கட்டளையிட்டார்.

"ஆகட்டும், அரசே! படகோட்டி முருகய்யன் என்பவன் ஒருவன் மாளிகை வாசலில் வந்து காத்திருக்கிறான். தங்களை அவசரமாகப் பார்க்க வேண்டும் என்று அவன் பிடிவாதம் பிடிக்கிறான்!" என்றான் சேவகன்.

படகோட்டி முருகய்யனை இத்தனை நேரம் மறந்திருந்தது பற்றி இளவரசர் பச்சாத்தாபங் கொண்டார். தாம் இரகசியமாகத் தப்பிச் செல்வதற்கு அவன் ஒரு வேளை உதவியாயிருந்தாலும் இருப்பான். அவனை உடனே தம்மிடம் அனுப்பும்படி அரண்மனைச் சேவகனுக்குக் கட்டளையிட்டார்.


ருகய்யன் இளவரசரிடம் வந்ததும் அவருடைய காலில் விழுந்து தேம்பி அழத் தொடங்கினான். இந்த மூட பக்தனைச் சமாதானப்படுத்துவதும் அவனிடம் விஷயங்களைக் கிரகிப்பதும் சிரமமான காரியந்தான். ஆயினும் செய்ய வேண்டும்.



முருகய்யன் தனது துயரத்தின் காரணத்தைக் கூறினான். அதன் விவரமாவது:—

முருகய்யன் நாகைப்பட்டினத்திலேயே தன் மனைவியிடமிருந்து பிரிந்து விட்டான். இரு ஆரூர் வந்து சேர்ந்த பிறகு அவளும் அங்கு வந்திருக்கிறாளா என்று பார்ப்பதற்காக ஜனக்கூட்டத்தினிடையில் அலைந்து சுற்றினான். ஒரு ஜாம நேரம் தேடிய பிறகு இராஜ வீதியிலிருந்து பிரிந்து சென்ற ஒரு சந்தின் முனையில் அவன் மனைவியும் இளவரசர் ஏறி வந்த யானையைச் செலுத்திய யானைப் பாகனும் போவதைக் கண்டான். அவர்கள் சந்தில் புகுந்ததும் மிக வேகமாக நடந்து சென்றார்கள். முருகய்யனும் தொடர்ந்து போனான். கடைசியாக ஒரு வீட்டின் வாசலில் நின்றார்கள். அங்கே இன்னொரு மனிதன் அவர்களுக்காகக் காத்துக் கொண்டிருந்ததாகத் தோன்றியது. அவனும் இவர்களுடன் சேர்ந்து கொண்டான். பிறகு மூன்று பேரும் சேர்ந்து போனார்கள். முருகய்யனுக்கு ஏதேதோ சந்தேகங்கள் உதித்தன. தன் மனைவியின் ஒழுக்கத்தைப் பற்றியே ஐயம் கொண்டான். உண்மையைக் கண்டுபிடிக்க ஆத்திரம் அடைந்தான். ஆகையால் அவர்களைப் போய்ப் பிடித்து விடாமல் பின்னாலேயே போனான். அவர்கள் ஊரைத் தாண்டி வாய்க்கால் — வயல் வரப்புகள் வழியாகச் சென்று கடைசியில் ஒரு மயானத்தை அடைந்தார்கள். முருகய்யனுடைய உள்ளம் பயங்கரத்தை அடைந்தது. ஆயினும் அவன் விடாமல் சென்று மயானத்தில் இருந்த ஒரு மரத்தின் பின்னால் ஒளிந்து கொண்டான். ராக்கம்மாளுடனும் யானைப்பாகனுடனும் வழியில் சேர்ந்து கொண்ட மனிதன், மயானத்தில் சாம்பலைப் பூசிக் கொண்டு ஏதேதோ பயங்கரமான மந்திரங்களை உச்சரித்தான். பிறகு யானைப்பாகனைப் பார்த்து, "நாளைக் காலையில் உன் உயிருக்கு ஆபத்து வரப் போகிறது! ஜாக்கிரதையாயிருந்து பிழை!" என்றான். யானைப் பாகன் கதி கலக்கத்துடன், "என்ன ஆபத்து? எவ்விதம் வரும்? தெரிந்தால் அல்லவோ பிழைக்கலாம்?" என்றான். மந்திரவாதி "யானைக்குத் திடீர் என்று மதம் பிடிக்கும்! நீ அருகில் நெருங்கியதும் உன்னைக் கீழே தள்ளி விட்டு ஓடும்! உன்னால்தான் யானைக்கு மதம் பிடித்தது என்று ஜனங்கள் எண்ணுவார்கள். உன் கையிலுள்ள அங்குசத்தைப் பிடுங்கி உன்னைக் கொன்று விடுவார்கள்!" என்றான் மந்திரவாதி. "ஐயையோ! தப்புவதற்கு வழி என்ன?" என்று யானைப்பாகன் கேட்டான். "நாளைக் காலையில் யானையிடம் நெருங்காமலிருந்து விடு!" என்றான் மந்திரவாதி. "அது எப்படி முடியும்? பின்னால் இராஜ தண்டனைக்கு உள்ளாக நேரிடுமே?" என்று யானைப்பாகன் அலறினான். "அப்படியானால், என் வீட்டுக்கு வா! மந்திரித்த கவசம் தருகிறேன். அதை அணிந்து கொண்டு போ! கையில் அங்குசத்தைக் கொண்டு போகாதே!" என்றான் மந்திரவாதி. "அப்படியே ஆகட்டும், ஐயா! இளவரசருக்கு ஏதேனும் ஆபத்து நேருமா?" என்று யானைப்பாகன் கேட்டான். "அது எப்படிச் சொல்ல முடியும்? இளவரசர் வந்து கேட்டால் அல்லவோ சொல்லலாம்?" என்றான் மந்திரவாதி.

முருகய்யன் அதற்கு மேல் அங்கே நிற்க மனமில்லாமல் ஓடி வந்து விட்டான். நாளைக் காலையில் யானைக்கு மதம் பிடிக்கப் போகும் செய்தியை இளவரசரிடம் சொல்லி எச்சரிப்பதற்காகவே முக்கியமாக ஓடி வந்தான்....



தையெல்லாம் கூறிவிட்டு முருகய்யன் மீண்டும் தேம்பி அழுதான்.

"அப்பனே! ஏன் அழுகிறாய்? நீதான் சமயத்தில் வந்து எச்சரிக்கை செய்துவிட்டாயே? இனி, நான் பார்த்துக் கொள்கிறேன்!" என்றார் பொன்னியின் செல்வர்.

"ஐயா! இதிலெல்லாம் என் மனைவி சம்பந்தப்படுவது பற்றித்தான் வருந்துகிறேன். ராக்கம்மாளைப் பற்றி என்ன நினைப்பது என்றே எனக்குத் தெரியவில்லை. அவளைப் பற்றிய பழைய சந்தேகங்கள் திரும்பி வருகின்றன!" என்றான் முருகய்யன்.

"அவளை நான் திருத்தி விடுகிறேன். நீ கவலைப்படாதே! உடனே, திரும்பிப் போ! யானைப் பாகனை எப்படியாவது தேடிப் பிடித்து அழைத்துக் கொண்டு வா!" என்றார் இளவரசர்.

படகோட்டி முருகய்யன் போன பிறகு பொன்னியின் செல்வர் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். முருகய்யன் கண்டது, கேட்டது இவற்றின் பொருள் என்னவாயிருக்கும் என்று ஊகத்தினால் உணர முயன்றார். பழுவேட்டரையர்களின் உத்தேசம், பாண்டிய நாட்டுச் சதிகாரர்களின் முயற்சி, — இவற்றைக் குறித்து இளையபிராட்டி கூறியதையெல்லாம் நினைவுபடுத்திக் கொண்டார். அந்தச் சதிகாரர்களின் முயற்சியில் இது ஒன்றாயிருக்கலாம். அல்லது வெறும் மூடத்தனமாகவும் இருக்கலாம். எப்படியிருந்தாலும், காலையில் தாம் என்ன செய்ய வேண்டும் என்பது பற்றி ஒரு முடிவுக்கு வந்தார். பிறகு, நிம்மதியாக நித்திரையில் ஆழ்ந்தார்.



றுநாள் அதிகாலையிலேயே எழுந்து பிரயாணத்துக்கு ஆயத்தமானார். மாளிகை வாசலுக்கு வந்தார். அங்கே கட்டியிருந்த யானை இளவரசரைப் பார்த்ததும் ஆதரவோடு துதிக்கையை நீட்டி அவரைத் தடவிக் கொடுத்துக் கொஞ்சியது. ''யானைக்கு மதம் பிடிக்கும்'' என்று மந்திரவாதி கூறியதாக முருகய்யன் சொன்னது இளவரசருக்கு நினைவு வந்தது. மதம் பிடிக்கும் என்பதற்கு அறிகுறி எதுவும் இல்லை.

''யானைப் பாகன் எங்கே?'' என்று இளவரசர் உரத்த குரலில் கேட்டார். உடனே பல குரல்கள் ''யானைப்பாகன் எங்கே?'' என்று எதிரொலி செய்தன.

இளவரசரைப் போலவே அதிகாலையில் பிரயாணம் தொடங்க ஆயத்தமாக ஜனங்கள் திரண்டு வந்திருந்தார்கள். அவர்களிடையே அகப்பட்டுக் கொண்டு முன்னால் வர முடியாமல் திணறிக் கொண்டிருந்த முருகய்யனைப் பார்த்தார். அவனை நோக்கிச் சமிக்ஞை செய்யவே ஜனங்கள் அவனுக்கு வழி விட்டார்கள். முருகய்யன் அருகில் வந்து இரவில் வெகுநேரம் தேடிய பிறகு தன் மனைவியை மாத்திரம் கண்டு பிடித்ததாகவும், அவள் தான் மயானத்துக்குப் போனதையெல்லாம் அடியோடு மறுத்து, முருகய்யனுக்குப் பித்துப் பிடித்து விட்டது என்று கூறியதாகவும், யானைப் பாகன் அகப்படவே இல்லை என்றும் சொன்னான்.

''அதைப் பற்றிக் கவலை இல்லை, முருகய்யா! யானையின் காலைக் கட்டியுள்ள சங்கிலியை அவிழ்த்து விடு!'' என்றார் இளவரசர்.

முருகய்யன் அவ்வாறு அவிழ்த்து விட்டுக் கொண்டிருக்கும்போதே, ''இதோ யானைப் பாகன் வந்து விட்டான்!'' என்று ஒரு குரல் கேட்டது. ''வந்து விட்டான்! வந்து விட்டான்!'' என்று பல குரல்கள் ஒலித்தன.

கையில் அங்குசத்துடன் யானைப் பாகன் ஓடி வந்து கொண்டிருந்தான். கூட்டத்திலிருந்தவர்கள் அவசர அவசரமாக விலகிக் கொண்டு அவனுக்கு வழி விட்டார்கள்.

பொன்னியின் செல்வரும் ''நல்ல வேளை!'' என்று பெருமூச்சு விட்டு, யானைப்பாகன் ஓடி வந்து கொண்டிருந்த திசையை நோக்கினார்.

பாவம்! ஒருநாள் இரவு அனுபவத்தில் அவன் எவ்வளவு மாறிப் போயிருக்கிறான்? பயப்பிராந்தி கொண்டவனாக அல்லவா தோன்றுகிறான்?

ஒரு கையில் அங்குசம் வைத்துக் கொண்டிருந்த யானைப்பாகன் யானையின் அருகில் வந்து அதன் துதிக்கையை இன்னொரு கையினால் தொட்டான்.

யானை உடனே அவனைத் துதிக்கையால் சுழற்றிப் பிடித்தது. தலைக்கு மேலே தூக்கியது. கேட்டவர்கள் பீதி கொள்ளும் படியாகப் பிளிறி விட்டு, யானைப்பாகனை வீசி எறிந்தது!

யானைப்பாகன் வெகு தூரத்திலே போய் விழுந்தான். அவன் கையில் வைத்திருந்த அங்குசம் இன்னும் அப்பாலே போய் விழுந்தது.

''யானைக்கு மதம் பிடித்து விட்டது!'' என்று பயங்கரம் நிறைந்த குரல் அந்த ஜனக் கூட்டத்திலே எழுந்தது.

சுற்றிலும் நின்ற ஜனங்கள் நாலா பக்கமும் சிதறி ஓடத் தொடங்கினார்கள்!

(தொடரும்)

முதல் இருடன்: ''அந்த ஆளுக்குக் காது கேட்காதுங்கிறது தெரிஞ்சிருந்தா அவன் வீட்டுக்குத் திருடவே போயிருக்க மாட்டேன்.

அடுத்தவன்: ''ஏண்ணே! என்னாச்சு?!''

முதல் திருடன்: ''பீரோ சாவியை எடுடான்னு சொல்லி அவனுக்குப் புரிய வைக்கிறதுக்குள்ள, அக்கம்பக்கத்துல இருந்தவங்க என்னைப் பிடிச்சுட்டாங்களே!''

— சீர்காழி ஸ்ரீராம்.






பாமெல்லாவின் சாகசங்கள் பற்றிய செய்திகள் சமீபத்தில் பத்திரிகைகளில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியதல்லவா? அவர் வாழ்க்கை திரைப் படமாகப் போகிறது. ஹிந்தி திரையின் பிரபலங்களான ரேகா, மீனாக்ஷி சேஷாத்திரி, மாதுரி தீக்ஷித் போன்றோரைப் பின்னுக்குத் தள்ளி விட்டு, அமெரிக்கா—வாழ் இந்தியப் பெண் நிகிடா இப் படத்தில் கதாநாயகி பாத்திரத்தை ஏற்கப் போகிறார்!

— சன்டே



குடிநீருக்குப் படும்பாடு...

"வடக்கே காவிரியும், தெற்கே அமராவதியும் ஓட, இடையில் இருக்கும் கரூர் இப்போது சிக்கித் தவிப்பது குடி தண்ணீருக்குத்தான். ஒரு நாள் விட்டு ஒரு நாள் லாரியில் தண்ணீர் விநியோகிக்கிறார்கள். குழாயில் வாரம் ஒரு தடவைதான் வரும்! அமராவதி ஆற்றில் தண்ணீர் வந்து விட்டால் கேணியில் ஊற்று வந்து விடும். சமாளித்து விடலாம். காவிரியாற்றுத் தண்ணீரைக் கொண்டு வரத் திட்டம் போட்டிருக்கிறார்கள். அது முடிந்து விட்டால் பிரச்னை நிரந்தரமாகத் தீர்ந்து போகும். இதற்கு எப்படியும் இரண்டு வருடமாவது ஆகும்'' என்றார் கரூரைச் சேர்ந்த ஆர். சி. சண்முகம். இதற்குப் பழைய அ.இ.அ.தி.மு.க. எம்.எல்.ஏ. வடிவேலு நிறைய முயற்சி எடுத்துக் கொண்டாராம். ('கரூர் நெப்போலியன்னு பேருங்க அவருக்கு!')

பிரதட்சிணை ரோடு தாண்டி வரும்



* வேதாந்தாச்சாரி

போது, குழாயடியில் கும்பலாகக் குடங்களும், பக்கெட்டுகளும் அணிவகுக்க, பெண்கள் பம்ப் அடித்துக் கொண்டிருந்தார்கள். ''உப்புத் தண்ணீங்க... அடிச்சா வரும்.. தினம் அடிச்சாலும் வரும்'' என்றார் ஒரு பெண்மணி.

''நல்ல தண்ணி?''



* கோவில் 'மணியம்' பத்மநாபன்.

# தண்ணீர்ப் பிரச்னையில் தவிக்கும் நகரம்

''அது வந்து எட்டு நாளாகுதுங்க!''

பிரச்னையின் தீவிரம் அன்று மாலை தான் தெரிந்தது. ஆம்; தண்ணீர்ப் பிரச்னையின் தீவிரத்தை அதிகாரிகளுக்கு எடுத்துக் காட்ட, முக்கியமான பை—பாஸ் சாலையில் நாங்கள் சென்றிருந்த அன்று மாலை நேரத்தில் எல்லாப் பேருந்துகளையும் நிறுத்திய பொது மக்கள், சுமார் ஒரு மணி நேரப் போராட்டத்துக்குப் பிறகுதான், போக அனுமதித்தார்கள்.

* நாட்ராயன்

எம்.எல்.ஏ., கே.வி. ராமசாமியைச் சந்தித்துப் பேசினால், குடிநீர்ப் பிரச்னை பற்றி ஏதாவது சொல்கிறாரா என்று தெரிந்து கொள்ளும் ஆவலில், கரூர் முனிசிபல் அலுவலகத்துக்குப் போனோம். ராமசாமி நகர சபைத் தலைவரும் கூட. கேட்டோம்:

''நீங்கள் தேர்தலில் நின்ற போது மக்களுக்கு என்ன வாக்குறுதி கொடுத்தீர்கள்?''

''நான் ஜெயித்து வந்தால் கரூருக்குக் காவேரித் தண்ணீர் கொண்டு வர முயலுவேன். தண்ணீர்க் கஷ்டத்தைத் தீர்த்து வைக்கப் பாடுபடுவேன் என்றேன். அதை மறக்கவில்லை. காவிரித் திட்டம் டெக்னிகல் கமிட்டியில் சாங்ஷன் ஆகி விட்டது. வாரியம், அரசு நிதித் துறை அனுமதியும் கிடைத்து விட்டால் திட்டத்துக்கு அடிக்கல் நாட்டி விடுவோம். இப்போது ஏழு ஓவர் ஹைட் டாங்க்களும் மூன்று பம்பிங் கிணறுகளும் இருக்கின்றன. இன்னும் நாலு ஓவர் ஹெட் டாங்க் கட்டுகிறோம். ஏழு மைல் தூரத்திலிருக்கும் நெரூரிலிருந்து காவிரித் தண்ணீர் கொண்டு வரும் ஏற்பாடுகளும் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. மேட்டூரிலும், இங்கே தமிழ்நாடு பேப்பர் மில்லிலும் அமைச்சரைச் சந்தித்து, குடிநீர்ப் பிரச்னை பற்றி எடுத்துச் சொல்லியிருக்கிறேன். 'நியாயமான திட்டம்; சீக்கிரம் ஏற்பாடு செய்கிறேன்' என்றார். வரிகளைக் கூட, மக்கள் அப்பீல் போடாத அளவுக்குக் குறைவாகவே வைத்திருக்கிறேன். எட்டுத் தியேட்டர்களிலிருந்து வரி கிடைக்கிறது. நகர சபைக்கு 64 ஏக்கர் நிலம் இருக்கிறது; நிதி நிலைமை சரளமாகவே இருக்கிறது.''



* கே. வி. ராமசாமி

''புதிய தொழிற்சாலைகள் அல்லது கூடுதலான வேலை வாய்ப்புகளுக்கு ஏதாவது திட்டம் வைத்திருக்கிறீர்களா?''

''இங்கே பக்கத்திலுள்ள தமிழ்நாடு காகிதத் தொழிற் சாலையில் மூவாயிரம் ஏக்கர் கரும்பு விளைகிறது. சுத்திகரிக்கப் பட்ட காகித ஆலைக் கழிவு நீரை இந்தப் பாசனத்துக்கு விடுவதற்குப் பதில், ஐம்பது சதவிகிதக் கழிவு நீரும், ஐம்பது சதவிகிதம் நல்ல நீரும் விட்டால், கரும்புச் சாகுபடியும் அதிகமாகும். அதனால் சர்க்கரை ஆலைக்கும், ஸ்பிரிட் தயாரிப்புக்கும், காகித உற்பத்திக்கும் கூடுதல் வழிவகுக்கும். ஐயாயிரம் பேர் வரை கூடுதலாக வேலை வாய்ப்புப் பெற முடியும் என்று யோசனை சொல்லியிருக்கிறேன்'' என்றார் ராமசாமி.



* நெசவுக்காக நூல் சுற்றும் பெண்கள்....

**ந**கரம் சுகாதார விஷயத்தில் மட்டுமல்ல, பொருளாதார விஷயத்திலும்



* திருமதி தனா செவக்கண்ணன்

சற்றுப் பளிச்சென்றே இருக்கிறது. காரணம் கடலை, மிளகாய், எள்ளு, வெல்லம், தேங்காய் இவை எல்லாவற்றுக்கும் வியாபாரக் கேந்திரமான கரூரில், ஏராளமான லாரி உரிமையாளர்களும் இருக்கிறார்கள். நூறு லாரிகள் வைத்திருப்பவர்கள் கூட இருப்பதாகச் சொன்னார் 'ஏ.கே. பிரதர்ஸ்' ஆறுமுகம். இவருக்கு இரண்டு லாரிகள் இருக்கின்றன. தமது லாரிகளில் வழக்கமாக, போபாலுக்குத் தேங்காய் அனுப்புகிறார். ''இங்கே தேங்காய் நல்ல விளைச்சலுங்க. பம்பாய் சேட் ஒருத்தர் இங்கே தேங்காய் வாங்கவென்றே ஒரு கடை வச்சிருக்கார். இங்கிருந்து தினம் தேங்காய் அனுப்புறார்!'' என்றார்.

முக்கிய வியாபார வீதியான ஜவாஹர் பஜாரில், தமிழ்நாடு வர்த்தகர்கள் சங்கத் துணைத் தலைவர் நாட்ராயனைச் சந்தித்தோம். இவர் சேம்பர் அஃப் காமர்ஸின் செயலாளரும் கூட. ''மாதம் 25 லட்ச ரூபாய்க்கு விற்பனை வரி செலுத்துகிற ஊர் கரூர். வருடத்துக்கு ஒரு கோடி ரூபாய் இன்கம்டாக்ஸ் இங்கே வசூலாகிறது'' என்கிறார் நாட்ராயன். ''விற்பனை வரிப் பிரச்னை ஆனாலும், கூலிகள் பிரச்னையானாலும் தகுந்த நடவடிக்கை எடுத்துச் சமாளித்து வருகிறேன். வியாபாரிகளை எந்தப் பிரச்னையிலும் சிக்க விடாமல் பார்த்துக் கொள்ளுகிறேன். கலெக்டர் அல்லது அமைச்சர்களைத் தேவைப்பட்டால் சந்திப்பது உண்டு. மாதத்துக்கு ஒரு நாள் விற்பனை வரி துணை கமிஷனர் அளவில் வியாபாரிகள் – அதிகாரிகள் கூட்டம் ஏற்பாடு செய்து, நேரிடையாகக் குறைகளைச் சொல்லி நிவாரணம் தேடி வருகிறோம்!'' என்று தொடர்ந்த நாட்ராயன், காங்கிரஸ் சேவா தளத் தலைவர். மறைமலை நகர் மாநாட்டுக்கு அதிகபட்ச சேவா தளத் தொண்டர்களை அனுப்பி வைத்த பெருமை இவருக்கு உண்டு!

**வி**யாபார முக்கியத்துவம் இருப்பதால்தானோ என்னவோ, உள்ளூர்க் கோயிலும் பொது மக்களே பூஜை விஷயங்களில் அக்கறை காட்டி வருகிறார்கள். கொங்கு நாட்டு ஏழு சிவ ஸ்தலங்களில் கரூர் முதன்மையான, பழம்பெரும் தலம். ''மூன்றாவது கிரேடு கோயில்'' என்றார் கல்யாண பசுபதீசுவரர் ஆலய 'மணியம்' பத்மநாபன். கிரேடு மூன்றாவது என்றாலும், பூஜை ஏழு காலமும் நடைபெறுகிறது. எல்லாமே ஒவ்வொருவர் உபயம்தான்.

சம்பந்தர் தேவாரம் பாடிய கோயில்; அருணகிரி நாதர் திருப்புகழில் கரூர் பற்றிப் பத்துப் பதிகங்கள் பாடியிருக்கிறார். திருவிசைப்பா இயற்றிய கருவூர்த் தேவர் இங்கேதான் தெய்வத்துடன் ஐக்கியமாகிப் போனாராம்... பங்குனி பிரம்மோத்சவம் தான் பெரிய திருவிழா; அப்புறம் ஆருத்ரா தரிசனம், பத்து நாள் திருவெம்பாவை உற்சவம் எல்லாம் கலகலப்பானவை. வருடத்தில் சுமார் லட்சத்து ஐம்பதாயிரம் ரூபாய் மொத்த வருமானம். பாதி, மக்கள் பூஜைக்குத் தருவதுதான். ஆரம்பத்தில் கோயிலுக்கு 2900 ஏக்கர் நிலம் இருந்தது. இப்போது இருப்பது இரண்டே முக்கால் ஏக்கர்! அதன் மூலம் குத்தகை வரும்படி 1600 ரூபாய்! தமிழ் நாடு சிறிய இனாம் ஒழிப்புச் சட்டம் 30/63 படி எல்லாம் பராதீனமாகப் போய் விட்டதாம்.

இருபூட்டு முறைதான். இ. ஓ. வும் செகண்ட் லாக் ஆபீசரும் இருப்பதால் நகைகள் பத்திரமாகப் பாதுகாக்கப்படுகின்றன. அர்ச்சகர் நான்கு பேர் உட்பட, மொத்தம் இருபத்திரண்டு பணியாளர்கள்.

''உங்களுக்கு வரும்படி எல்லாம் எப்படி?'' என்று ராஜகணபதி குருக்களை விசாரித்தோம். ''சம்பளம் கிடையாது.

• வையாபுரி



• சிவராமன்



• பஸ்களை நிறுத்திப் போராட்டம்...



# "எனக்கொரு சந்தேகம் மீனா!"



























# பாலின் சத்து
# ட்ரூவின் அன்பு




சிறந்த பொருட்களைக் கொண்டு அன்புடனும்,
அக்கறையுடனும் தயாரிக்கப்படுவது



• லாரி உரிமையாளர் ஆறுமுகம்

தட்டு கலெக்ஷன் தவிர, அர்ச்சனை டிக்கெட்டில் ஒரு ரூபாய்க்கு முப்பது காசு. எட்டெட்டு நாளைக்கு ஒரு தடவை எங்கள் முறை வரும். செவ்வாய், வெள்ளி, சனிக்கிழமைகளில் அர்ச்சனை கணிசமாக இருக்கும்.''

பரம்பரை ஓதுவார் காலமாகி, ஐந்து வருடங்களாக யாருமே நியமிக்கப்படாமல் இருந்து, இப்போது மூன்று வருடங்களாகத் தாம் ஓதுவராக இருப்பதாகச் சொன்னார் ஜெகன்னாதன்.

நாங்கள் போன அன்று, உள்ளூர் கான்வெண்ட் குழந்தைகள் சந்நிதியில் சீருடையோடு உட்கார்ந்து கொண்டு, ஆசிரியை சொல்லிக் கொடுக்க, தமிழில் பாடல்களைப் பாடியது சற்று வியப்பாக இருந்தது. இந்த கான்வென்ட் குழந்தைகளுக்கு, குருக்கள் சிவபுராணம் கூடச் சொல்லிக் கொடுப்பதாகச் சொன்ன போது இன்னும் வியப்பு ஏற்பட்டது!

**பெ**யர் சொல்ல விரும்பாத ஒரு புள்ளி, கரூரில் சாலை ஆக்கிரமிப்பு பற்றி ஒரு குரல் அழுது விட்டார். ''ஜவாகர் பஜாரின் இருபுறமும் ஆக்கிரமிப்பைப் பார்த்தால் தெரியும். அறுபது அடி இருக்க வேண்டிய போக்குவரத்துச் சாலை கிட்டத் தட்ட இருபது அடிதான் இருக்கும்!'' இவரது வேண்டுகோள்: புகளூர் ரோடில் எக்கச் சக்கமாகப் போக்குவரத்து கூடி விட்டது. அங்கே உள்ள லெவல் கிராசிங்கில் ஓவர் பிரிட்ஜ் அவசியம் தேவை.

**வ**ருடத்துக்குக் கிட்டத்தட்ட எண்பது கோடி ரூபாய்க்குக் கரூரிலிருந்து மட்டும் கைத்தறித் துணி வகைகள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி ஆகின்றன. அமெரிக்கா, ஆஸ்திரேலியா, நியூஸிலாந்து, ஐரோப்பிய நாடுகள் எல்லாவற்றுக்கும் ஏற்றுமதி ஆகும் கைத்தறித் துணி வகைகள் எல்லாமே, குடிசைத் தொழில் முறையில், ஆயிரக்கணக்கான வீடுகளில் தயாராகிறவை. இவற்றைப் பெரும்பாலும் பெண்கள்தான் தைக்கிறார்கள். இதில் இப்போது ஒரு சிக்கல் ஏற்பட்டிருக்கிறது. இயந்திரத்தில், துணி வகைகளின் சில பகுதிகள்தான் தைக்கப்படுகின்றன. என்றாலும் கூட, அமெரிக்காவில் இதை முழுக் கைத்தறி ஆடை அல்லது கைத்தறி ரகம் என்று எடுத்துக் கொள்ள மறுக்கிறார்கள். முழுக்க முழுக்கக் கையினால் தைத்து அனுப்புவது சாத்தியமில்லை. இப்போதைக்கு இவற்றை இறக்குமதி செய்ய அமெரிக்கா நிபந்தனையின் பேரில் சம்மதித்திருக்கிறது. மில் தயாரிப்புத் துணி கோட்டாவில் அனுமதித்து விட்டு, பிறகு அதில் இந்தக் கைத்தறித் துணி இறக்குமதியாவதைக் குறைத்துக் கொண்டு விடுவோம் என்கிறார்கள்! நாங்கள், அமெரிக்காவிலுள்ள இறக்குமதியாளர்களிடம் கேட்டுக் கொண்டிருக்கிறோம் — அங்கே உள்ள அரசாங்கத்திடம் பேசி, தடைகள் ஏதும் அற்ற 'எக்ஸெம்ப்ட்விசா' அடிப்படையில், முன்பு இருந்தது போலவே இறக்குமதி செய்து கொள்ளக் கேட்டுக் கொண்டிருக்கிறோம்!'' என்றார் முக்கிய ஏற்றுமதியாளரான திருமதி. தனா சிவக்கண்ணன்.

கைத்தறித் துணி ஏற்றுமதியாளர் சங்கத் தலைவர் வையாபுரி சொன்னார்: ''ஏற்றுமதி வசதி இருப்பதால் கரூரில் எல்லாப் பெண்களுக்குமே வேலை இருக்கிறது. அமெரிக்க அரசின் நடவடிக்கையால் ஆடைகள் இப்போது தேங்கிப் போய் விடவில்லை. 'விஸா—வெய்வர்' என்ற சலுகையில் — அதாவது மில் தயாரிப்புக் கோட்டாவுக்கு அனுமதித்திருக்கிற அளவுக்குள்ளேயே இதையும் இறக்குமதி செய்து கொண்டிருக்கிறார்கள். இருந்தாலும் சிக்கல் பயமுறுத்திக் கொண்டேயிருக்கிறது. பல்லாயிரக்கணக்கான மக்களைப் பாதிக்கும் என்பதால் தொடர்ந்து முயன்று வருகிறோம்.'' வெங்கமேடு பகுதியில் நெசவாளர்கள் அதிகம்.

**பொ**ழுதுபோக்கு என்று பார்த்தால், கரூரில் நாரத கானசபா நாற்பத்தைந்து வருடங்களாக இயங்கி வருகிறது. ''கச்சேரி, நடனம், நாடகம் இவற்றுக்கு முன் போல் அவ்வளவு கூட்டம் வருவதில்லை'' என்றார் செயலர் வேதாந்தாச்சாரி. ஆனாலும் நாரத கானசபாவுக்குச் சொந்தக் கட்டடம் உண்டு. கல்யாண மண்டபமாகவும், கடைகள் வாடகை வசூலாகவும் மாதா மாதம் ஒரு கணிசமான ெ த ா ை க வந்து விடுவதால் நிதி நிலைமை 'ஸ்ட்ராங்.' எல்லா ஊர்களிலும் வேதாந்தாச்சாரி மாதிரி ஒருவர் இருந்து விட்டால், நிதி வசதி போதாமல் சபாக்கள் அவதிப்படும் நிலை வராது!

லயன்ஸ், ரோட்டரி கிளப்புகள், ஜேஸீஸ், பொழுதுபோக்குச் சங்கம் எல்லாம் சுறுசுறுப்பாக இயங்குகின்றன. ஆனாலும் கரூருக்குப் பெருமை சேர்ப்பது, நூற்றாண்டு கொண்டாடி விட்ட ஜூபிலி கிளப்தான். ''முந்நூறுக்கு மேற்பட்ட அங்கத்தினர்கள். பாலிடிக்ஸ் — வம்பு தும்பு கிடையாது. சமூக சேவைக்கு நிதி உதவி செய்கிறோம். நகரில் முதல் இரண்டு இடங்களைப் பிடிக்கும் ப்ளஸ்—டூ மாணவ, மாணவியருக்கு ஆண்டுதோறும் பரிசுகள் வழங்குகிறோம்,'' என்றார் மூத்த உறுப்பினர் சிவராமன். பழம்பெரும் நாவல்கள் (சாண்டில்யன் சுஜாதா உட்பட) எந்த நூலகத்துக்காவது தேவைப்பட்டால் இவர்களுடன் தொடர்பு கொள்ளலாம். கொடுத்து விடத் தயார் என்கிறார்!

— சாருகேசி

புகைப்படங்கள்: யோகா

# இரண்டாவது சூரியன்

## 1

அந்த மாருதி வேனின் வலப்பக்கம் பானுமதி உட்கார்ந்திருந்தாள். குளிர் காற்றைக் கிழித்துக் கொண்டு வேன் வடக்கு நோக்கிப் போய்க் கொண்டிருந்தது.

தொலைவிலிருந்து கடல் ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருப்பதைக் காண முடிந்தது. அலைகள் கரையில் அடித்து, எகிறி, நுரை கக்கி 'ஹோ' என்று கூச்சலிட்டு, யார் கவனித்தாலும் கவனிக்காது போனாலும் அட்டகாசம் செய்து கொண்டிருந்தது. கடல் ஆண். அகம்பாவம் பிடித்த ஆண். பூமி என்கிற பெண் மீது எப்போதுமே ஆதிக்கம் செலுத்துகிற ஆண். பூமியை விடப் பரப்பிலும் வலுவிலும் திண்மை கொண்டிருந்தாலும் போகட்டும் போகட்டும் என்று பூமி விட்டுக் கொடுத்தாலும் இன்னும் போதாது என்று ஆட்டம் போடுகிற ஆண்.

இத்தனை அட்டகாசத்தையும் பார்த்துப் பொறுமையாய் இருக்கிறதே தவிர, பதிலுக்கு அடிக்க தோன்றவில்லை. எட்டி உதைத்துத் தன் இடத்தை விஸ்தரித்துக் கொள்ளத் தெரியவில்லை. விட்ட இடத்தை மீட்கத் தெரியவில்லை. வெறுமே காலங்காலமாய் இந்த ஆண் ஆட்டத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறது. சொடேர் சொடேர் என்று விழுகிற அடியை வாங்கிக் கொண்டிருக்கிறது.

அடி வாங்கிக் கொண்டிருப்பதால்தான் பூமியைப் பெண்ணென்று சொல்லி விட்டார்களா? ஆட்டம் போடுவதால் கடல், அரசன் என்று பெயராயிற்றா?

நிலமென்னும் நல்லாள். நல்லவள். பொறுமைசாலி. குணவதி. அப்படியிருந்தால் நானும் நல்லாள். இல்லையெனில் நானும் தறுதலை. கெட்டுப் போனது. அடங்காதது. திமிர் பிடித்தது. இறங்கி ஓடிப் போய்க் கடலை எட்டி உதைத்துத் துவம்சம் செய்ய வேண்டும் போல் இருந்தது பானுமதிக்கு. பல்லைக் கடித்துக் கொண்டு ஒரு ரௌத்திரம் தோன்றிற்று.

வண்டி நீச்சல்குளம் தாண்டிப் பாலம் தாண்டிப் போகும் போது கூவம் நதி கடலில் கலப்பது தெரிந்தது. பெண் நதி. எதனால்? வற்றாது வழங்குவதால், நெளிந்து ஓடுவதால், தாகத்துக்கு நீர் வார்ப்பதால். உணவுக்கு அவசியம் என்பதால். வாஸ்தவம், "இந்தப் பாவிகள் நதியையும் மதிக்கவில்லை. பெண்ணையும் மதிக்க வில்லை. அதனால் தான் வற்றிப் போய் விட்டதோ? உன் உறவே வேண்டாம் என்று சுருங்கிப் போய் விட்டதோ! நதி வற்றியது; ஏரி வற்றியது; குளம் வற்றியது. பூமி நீரும் குறைகிறது. திண்டாடு மனிதா. கை ஜலத்துக்கு நாயாய் அலை? மனசு சபித்தது.

வண்டி இடது பக்கம் திரும்பி ஹைகோர்ட்டுக்குள் நுழைய, லேசாய் ஒரு கலக்கம் எழுந்தது. பத்தாவது படிக்கும் போது ஒரு முறை ஹார்பர் சுற்றுலா வந்து விட்டு, இங்குள்ள புல்வெளியில் உட்கார்ந்து சாப்பிட்டார்கள். 'இதான் ஹைகோர்ட்டு,' டீச்சர் ஏதோ நிறையச் சொன்னாள். மேலே லைட்ஹவுஸ் இருக்கிறது என்றாள். இப்போதுதான் நுழைகிறாள். தன் வாழ்க்கையில் ஓர் அத்தியாயத்தை இங்கே முடிக்கப் போகிறாள்.

"எல்லாரும் இறங்கி விடுங்க; வண்டி பார்க்கிங்ல போடணும்." — அப்பா முன் சீட்டிலிருந்து இறங்கினார். "குழந்தைகளுமாப்பா?" என்று பானுமதி கேட்க,

"எல்லாம் இறங்கணும்மா. ராமலிங்கம் நீ போய் வக்கீல் ரூம்ல இருக்காரா, பார்த்துட்டுவா. நாங்க பின்னால் பத்திரம் விக்கற இடத்துல நிக்கறோம்."

"நேரே கோர்ட்டுக்கு வரச் சொல்லிட்டாரா?" சேகர் பதில் பேசினான்.

"நீ போய்ப் பார்த்துட்டு வாடா. வந்துட்டம்னு சொல்லு."

"அவரு பானுவை இட்டாரச் சொன்னா, நானும் பானுவும் போயிட்டு வந்துடறோமே."

"சரியான தத்திப் பையன்டா நீ. எல்லாத்துக்கும் ஒரு துணை வேணும். நீ இரு இங்கேயே. நான் போய் வக்கீலைப் பார்த்துட்டு வரேன்." அப்பா சலிப்புடன் படியேறினார். இடதா வலதா என்று யோசித்து விட்டு, வலதுபுறம் திரும்பி வராந்தாவில் நடந்து மறைந்தார்.

அப்பா தளர்வோடு நடந்து போவதைப் பார்க்க மனசுக்குச் சிரமமாய் இருந்தது. எழுபது வயசில் இவருக்கு இத்தனை வேதனை வேணுமா? உட்கார வைத்து உபசரிக்க வேண்டிய வயதில் தன் பொருட்டு இவர் இரவு பகலாய் அலைந்தது.... யோசிக்கிற போதெல்லாம் இருட்டு மாதிரி வேதனை கவிழும்.

'நீ பொம்பளைப் புள்ளைம்மா. கடைசி வரைக்கும் உனக்கு நான் நெஞ்சாவணும். என் கடமை இது. இந்தக் கஷ்டம் உனக்கு மட்டுமில்லை. வேறே யாருக்கு வந்திருந்தாலும் நான் ஓடியாடிச் செய்திருப்பேன். என் விருப்பம் அது.'

பாலகுமாரன்

ஆனால் அம்மாவுக்குப் பிடிக்கவில்லை. பிடிக்கவில்லை என்பதை விடப் புரியவில்லை என்பதுதான் சரி. 'நாம அறுத்துக் கட்டற ஜாதியில்லை. தப்பு இது. பிடிக்கலையா? வா. வந்து நம்ம வீட்டோட இரு. பசங்களை இங்கே வச்சுப் படிக்க வை. ஏன்மா கோர்ட்டுக்குப் போறே? ஊர் உலகம் சிரிக்காது?'

வாழ்ந்த போது சிரித்ததை விடவா... 'ஐயோ பாவம்' என்று ஊர் கூடித் துக்கப்பட்டதே அந்தக் கேவலத்தைவிடவா, அறுத்துக் கொள்வது பெரிது? அப்பா.... கழிவிரக்கம் ஒரு பெண்ணைக் கொன்று போடுவது போல, வேறு கொடுமை உண்டா? மற்றவர் இரக்கம் நம் மேல் வழிந்து, நமக்குள்ளே பெருகி நம்மையே இழுத்துப் போய்ச் சாக்கடையில் தள்ளுகிற அவலத்தைத் துடைக்கத்தான் பெரும் போராட்டம் தேவைப்பட்டது. நிமிர்ந்து இனி அழ மாட்டேன் என்று நின்ற போது தான், 'தறுதலை, திமிர், கொழுத்துப் போனது...' என்று பேசினார்கள். அதையும் உதறிய போது, பேசக்கூட மறுத்து விட்டார்கள். பதினாறு வருடக் குடித்தனத்தில் சகல வேதனையும் பட்டாயிற்று. அடி விழ விழத்தான் யுத்த வெறியே மூண்டது. காயப்பட்டுப் பட்டு மனசு தழும்பேறிய பிறகு தான், போர்த்தந்திரமே புரிந்தது. எப்படித் தாக்குவது, எங்கே தாக்குவது என்று யோசித்து, நடவடிக்கை எடுத்த போது, எதிர்ப்பக்கம் ஆடிப் போயிற்று.

இப்போது உடன்படிக்கை. போர் நிறுத்த



உடன்படிகை. இனி எந்த விதப் பொருளாதார, வர்த்தக, கலை உலக உறவுமில்லை. நீ வேறு, நான் வேறு என்கிற உடன்படிக்கை. இப்போரினால் ஏற்பட்ட சேதத்துக்கு எந்தவித உதவியும் •ஏற்க மாட்டேன் என்கிற நிபந்தனையுடன் கூடிய உடன்படிக்கை. தன் யோசனையைத் தானே பாராட்டிக் கொண்டு பானுமதி சிரித்தாள்.

ஹைகோர்ட் வளாகம் அதீத சுறு சுறுப்பாய் இருந்தது. கறுப்பு கவுன் போட்ட ஆண்களும் பெண்களும் நீளக் காகிதக் கட்டுகளுடன் நடந்து கொண்டிருந்தார்கள். இரண்டாம் நாளாய்க் கூடிக்கூடிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"ஏம்மா இவங்கெல்லாம் ஸ்பைடர்மேன் மாதிரி ட்ரஸ் பண்ணியிருக்காங்க?" பன்னிரண்டு வயதுப் பிள்ளை கேட்டான்.

"என்ன மாதிரி?"

"ஸ்பைடர்மேன் மாதிரி. பின்னால் நீள அங்கி கட்டிக்கிட்டு...."

"ரொம்ப நாளா அப்படித்தான் ட்ரஸ். ஏன்னு தெரியலை. நம்ம வக்கீல் வந்தா நீ கேளு. சொல்வாரு."

"ஸ்பைடர்மேன் இல்லை. வௌவால் மாதிரி இருக்காங்க. கறுப்பு இறக்கையோட." ஏழு வயசுப் பெண் இடை மறித்தாள்.

"ச்சு. அப்படிச் சொல்லக் கூடாது. வௌவால் தலைகீழாத் தொங்கும்டி."

"கார்ட்டூன்ல நேராத்தானே வருது."

"அது பறக்கற போது... தூங்கற போது தலைகீழாத் தொங்கும். இல்லேம்மா?"

அப்பா மூச்சிரைக்க வந்தார்.

"பார்த்துட்டேன். இன்னிக்குத் தீர்ப்பாவிடுமாம். ஃபேமிலி கோர்ட் வாசலுக்குப் போகச் சொல்றாங்க. காலிங் பத்து மணிக்கு ஆரம்பிச்சிடுமாம்." விரைந்தார்கள்.

"ஏன் தாத்தா வௌவால் தலை கீழாத் தொங்குது?"

"தலையெழுத்து. வரம் வாங்கி வந்திருக்கு."

"தலையெழுத்துன்னா?"

"நீ எனக்குப் பேத்தியா பொறக்கணும்னு தலையெழுத்து. உங்கம்மா எனக்குப் பொண்ணாப் பொறக்கணும்னு தலையெழுத்து. நீயும் நானும் கைகோத்துக்கிட்டு இந்தப்படி ஏறணும்னு என் தலையெழுத்து. பாவம் பண்ணவன்தான் கோர்ட்டுக்கு வருவான். சொத்து தகராறாம்... நம்ம வக்கீல் எதிர்க்கயே அண்ணனும் தம்பியும் அசிங்கமாகத் திட்டிக்கறாங்க. 'என்னங்க, பெரிய சொத்தா?'ன்னு கேட்டேன் வக்கீல்கிட்ட. 'கோயில் சொத்து இவன் தாத்தா காலத்துல திருடினது. இப்ப அதுக்கு அடிச்சுக்கறாங்க, ஏழு வருஷமா'ன்னாரு. 'பொண்டாட்டி கழுத்துச் செயினை வித்து ஃபீஸ் கொடுத்துருக்கான். தாத்தா பண்ண பாவம், பேரனைச் சாகடிக்குது பார்த்தீங்களா'ன்னாரு வக்கீல். பகீர்னுடுச்சு. வந்துட்டேன்."

ஹைகோர்ட் பின்பக்கம் போய் நீலப் பூக்கள் பூத்திருந்த மரங்களைத் தாண்டி, இடதுபக்க வளைவில் நுழைந்து, மரப்படி ஏறினார்கள். வராந்தாவெல்லாம் ஆட்கள் உட்கார்ந்திருக்க, மெல்லக் கடந்து உள்ளே போய் மர பெஞ்சில் குழந்தைகளோடு பானுமதி உட்கார்ந்தாள்.

நடுவே வாட வடிவ மரமேஜை போடப்பட்டிருந்தது. மேஜையைச் சுற்றி உள்ள நாற்காலிகளில் சில வக்கீல்கள் உட்கார்ந்திருந்தனர்.

வாட முடிவில் இடைவெளி விட்டு மேஜை, நாற்காலி. அதில் பருமனாய் ஒரு ஸ்டெனோகிராஃபர் உட்கார்ந்து டைப் அடித்துக்கொண்டிருந்தார். போன முறையே அறிமுகமானவர்தான். சேகரோ என்னவோ பெயர்.

வந்துட்டீங்களா என்பது போல் பார்த்தார். பானுமதி எழுந்து அருகே போய்க் கரம் குவித்தாள். அவரும் வணக்கம் சொன்னார்.

"அவரும் வந்துட்டாரும்மா. இப்பத்தான் பத்து நிமிஷம் முன்னாடி. அவங்க வக்கீல் குமாஸ்தா வந்து சொல்லிட்டுப் போனாரு."

"இன்னிக்குத் தீர்ப்பாயிடுங்களா?"

"ஆயிடலாம். அதிகம் பேசாதீங்க. என் முடிவுல உறுதியா இருக்கேன்னு மட்டும் சொல்லுங்க. முதல் கேஸே உங்களோடதுதான் இருக்கும்."

"எப்பங்க முடியும்?"

கேஸ் காலிங் முடியப்பன்னிரண்டாயிடும். பிறகு உங்களதுதான்."

"நிறையக் கூட்டம் இருக்கே!"

"செங்கல்பட்டு கேஸு, சைதாப்பேட்டை கேஸு அத்தனையும் ஒரு ஜட்ஜ் கிட்ட தள்ளி விட்டுட்டாங்களே. ஒரு நாளைப் போல ஏழு மணி ஆவுதும்மா போக. நீங்க போய் உட்காருங்க. ஜட்ஜ் சேம்பருக்கு வந்துட்டாரு."

கோர்ட் பர பரத்தது. உள்ளே இடம் தேடிப் பலர் அலைய, பானுமதி தன் சீட்டில் உட்கார்ந்து கொண்டாள். அருகே அந்தப் பூக்காரப் பெண் தலையில் கட்டுடன் சோர்வாய் உட்கார்ந்திருந்தாள். போன முறை இன்கேமிராவில் அதாவது ஜட்ஜ் சேம்பரில் இவள் அழுது புலம்பியது வாசல் வரைக்கும் கேட்டது.

"ஏம்மா, போன தடவை நல்லா இருந்தீங்களே. இப்ப என்ன தலையில?"

"கோர்ட்லயாடி அழுவறேன்னு எங்கம்மா வூட்டுக்கு வந்து அடிச்சுட்டுப் போறான்மா, பாவி. இன்னிக்கு இங்கினியே சொல்லிக்கத்திடப் போறேன். பேமானி.... வரலை இது வரைக்கும். பயந்துட்டான் பொட்டை." பல்லைக் கடித்தாள். பானுமதிக்கு அவளை அணைத்துச் சமாதானப் படுத்தத் தோன்றியது. பெண் கொடுமைக்கு மட்டும் ஜாதி பேதமோ, வர்க்க பேதமோ இல்லை என்று தோன்றியது.

"பூ வியாபாரம்தானே உனக்கு... வக்கீலுக்கு எப்படிப் பணம் கொடுக்கறே?"

"நான் எங்கேர்ந்து தர்றது. எங்க பேட்டைல ஒரு லேடீஸ் சங்கம் வச்சுருக்காங்க. அவங்க தான் கேஸ் நடத்தறாங்க. அதோ அந்தம்மா தான் நடத்துறா. மகராசி நல்லா இருக்கணும்."

பானுமதி வக்கீல் விரைந்து வந்தார். அவளைத் தேடினார். பானுமதி எழுந்திருக்க உள்ளே நுழைந்தார்.

"நான் இங்க வர கோர்ட் பர்மிஷன்

## இப்போதைய அபாயம்!



இந்த யுகத்தில் முக்கியமாக என்ன பெரிய அபாயம் என்றால் அபாயமான வஸ்து அப்படிக் கண்ணுக்குத் தெரியாமல் அதுவே ரொம்ப நல்லது மாதிரி வேஷம் போட்டுக் கொண்டு வந்து மயக்கி விடுவது தான். அபாயத்தை அபாயமானது என்று தெரிந்து கொள்ள முடிந்தால்தானே அதிலிருந்து நம்மை ஜாக்கிரதை செய்து கொள்ளலாம்? தீரர்களாக இருந்தால் அதோடு சண்டையும் போட்டு அதை அடக்கி வைக்கலாம்? பூர்வ யுகங்களில் அபாய ஹேதுவாக அஸுரர்கள் தோன்றிய போது, அவர்களுடைய க்ரூரமான ரூபம், வெளிப்படையாகவே அவர்கள் க்ரூரமாகச் செய்த கார்யங்களெல்லாம் ஜனங்களுக்குத் தெரிந்த போது, அவர்கள் ஒதுங்கிப் போகப் பார்த்தார்கள். அப்படியும் இவர்கள் மேலே வந்து விழுந்து பிடுங்கின போது, 'நம்மால் இவர்களோடு சண்டை போட்டு முடியாது' என்று பகவானிடம் பிரார்த்தித்துக் கொண்டார்கள். பகவானும் அவதாரங்கள் எடுத்து அவர்களை ஸம்ஹரித்தார். முள்ளு குத்தினால் அதைப் பிடுங்கிப் போட்டவுடன் எல்லாம் ஸரியாகி விடுவது போல, அப்புறம் ஜன சமூஹம் (தேவஸமூஹத்தையும் சேர்த்துத்தான் சொல்கிறேன்) நல்லபடியாகி, பழையபடி நல்ல வழியிலேயே போய்க் கொண்டிருந்தது.

ஆனால் கலியிலே தனியாக இப்படி அஸுரக் கூட்டம் ராக்ஷஸஜாதி என்று இல்லை. மநுஷ்ய ஜாதிக்கு வெளியிலே அப்படியில்லை. அப்படியென்றால்... புரிகிறதோல்லியோ? மநுஷ்யர்களின் மூளைகளுக்குள்ளேயேதான் அஸுரர்களும், ராக்ஷஸர்களும் புகுந்து கொண்டு விட்டார்கள்! இந்த யுகத்தில் அதர்மசக்தி வெளியிலே பௌதிகமாக இருந்து கொண்டு ஜனங்களைத் தாக்காமல் ஜனங்களுக்குள்ளேயே, அவர்களுடைய புத்திக்குள்ளேயே கெட்ட சித்த வ்ருத்திகளாகப் புகுந்து கொண்டு விட்டது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

---

வாங்கணும். எனக்குப் பர்மிஷன் இல்லை. நத்திங் டு வொரி. நான் சேகர்கிட்ட சொல்லிட்டுப் போறேன். மறுபடி கேட்பாரு ஜட்ஜ். உங்க நிலைமல ஏதாவது மாற்றம் உண்டானனு. இல்லைன்னு சொல்லிடுங்க. அதிகம் பேச வேண்டாம். ஒரு வார்த்தை இரண்டு வார்த்தைல பதில் சொல்லுங்க மரியாதையா. இந்த ஜட்ஜ் சோமசுந்தரம் அதிகம் பேசினா கோபப்படுவாரு. அமைதியாப் பதில் சொல்லுங்க."

"உடனே தீர்ப்பாயிடுமா?"

"பத்து நிமிஷத்துல முடிஞ்சுடும். நான் வாசல்லயே இருக்கேன்."

"அவரைப் பார்த்தீங்களா?"

"பெரிய படையோட வந்திருக்காரு. என்னவோ அரசியல்வாதி மாதிரி ஏகபந்தா. கேஸ் கால் ஆனதும் நீங்களும் வந்துடலாம். காப்பி சாப்பிட்டுட்டு மறுபடி உள்ள பண்ணிரெண்டு மணிக்கு வரலாம்."

ஜட்ஜ் நுழைய, வக்கீல் வெளியேறினார். கூட்டம் எழுந்து நின்றது. கேஸ் நம்பர் சொல்லி ஆட்கள் பெயர் சொல்லிக் கூப்பிட்டார்கள். இவள் பெயர் சொல்லப்பட்டது. எழுந்து நின்று நீதிபதிக்கு வணக்கம் சொன்னாள். நீதிபதி அவளை நிமிர்ந்து பார்த்தார். சாந்தமான நீள் வட்ட முகம். நரை விழுந்த மெல்லிய கேசம். வில்லென வளைந்த மேல் உதடு. கண்களில் ஒரு நிரந்தரப் பரிவு. அப்பா சொன்னார். 'உன் புருஷனுக்கு மேல் உதடு மெல்லிசு. கோடு போட்டாப்பல இருக்கும். நரி புத்தின்னு அதைவச்சே சொல்லிடலாம். யாரைவேணா நம்பலாம். மெல்லிசு உதடுக்காரங்களை நம்பவே கூடாது."

"ஆனால் ஜட்ஜ் ஏன் கோபக்காரர்ங்கறாங்க? மேற்கொண்டு கேஸ் நம்பர் கூப்பிடக் குழந்தையுடன் வெளியே வந்தாள்.

கீழே எட்டிப் பார்க்க, சாம்பல் நிற அம்பாஸிடர் தெரிந்தது. அவள் பல தடவை பயணம் செய்த கார். இப்போது குரோட்டன்ஸ் செடி ஒன்றைப் பானெட்டில் பொருத்தியிருக்கிறார்கள். அதை உறை வைத்து மூடியிருக்கிறார்கள்.

"கொடி வச்ச கார்ல வந்தா நான் பயந்துடுவேன்னு நினைக்கிறயா?" யாரோ மந்திரி காரில் வந்து இறங்கிப் பயமுறுத்திய போது, அப்பா எழுந்து நின்று அதட்டினார்.

"இனி பேச்சு கோர்ட்லதான். போடா."

"சட்டப்படி அவள் என் மனைவி." அது உறுமிற்று.

"அதைத்தான் சட்டம் வச்சு அறுத்து எறியப்போறோம் போடா."

"மரியாதை கொடுத்து மரியாதை வாங்கும்."

"பொண்டாட்டியைச் செருப்பால் அடிக்கறவனுக்கு என்னடா மரியாதை? உதடு கிழிஞ்சு போய் இன்னி வரைக்கும் பேச முடியலைடா என் குழந்தைக்கு."

"உமது பொண்ணு பொண்ணா இல்லை." அது கத்திற்று.

''போடா நாயே.... நீ ஆம்பளை இல்லைடா நாயே......''

''ஏய்.....'' யாரோ துணைக்கு வந்த ஜால்ரா கத்த, அப்பா அரிவாள் எடுத்துக் கொண்டு நின்றார்.

கூட்டம் கலைந்து போயிற்று. இப்போது மந்திரி கொடி வீட்டுக்கு வந்து விட்டது போலிருக்கிறது. மரத்து நிழலில் வெள்ளை வேட்டி கறுப்புக் கறையோடு தெரிந்தது. கடைசில வெள்ளை வேட்டிகள் நின்றிருந்தன.

பானுமதி படியிறங்கி எதிர்ப்புறம் போய்க் குழந்தைகளுக்குக் குளிர்பானம் வாங்கித் தந்தாள். அப்பாவும், தம்பியும், அவளும் காப்பி சாப்பிட்டார்கள். பன்னிரெண்டே காலுக்கு காலிங் முடிய, உள்ளே போய் உட்கார்ந்தார்கள். பாதிக் கூட்டம் குறைந்து விட்டது. அந்தத் தலைக்கட்டுப் பூக்காரியைக் காணோம். புருஷன் கோர்ட்டுக்கு வராது வாய்தா வாங்கி விட்டாள் போலிருக்கிறது. உட்கார்ந்த நேரம் வீண். பாவம்.

நீதிபதி உள்ளே போய் விட்டார். அரை மணியில் வருவார் என்று ஸ்டெனோ கிராஃபர் சொல்ல, பானுமதி காத்திருந்தாள். நீதிபதி சரியாய் அரை மணியில் உள்ளே வர,

''கதிரேசன், பானுமதி.... கதிரேசன், பானுமதி.... கதிரேசன், பானுமதி'' கூப்பிட்டார்கள். அது உள்ளே நுழைந்து மேடை பார்த்துக் கைகூப்பிற்று.

''வந்து பொட்டில நில்லுங்க, கதிரேசன்.''

அது ஏறி மறுபடி வணங்கிற்று. 'நான் சொல்லுவதெல்லாம் சத்தியம்' என்றது.

''என்னங்க கதிரேசன் யோசிச்சீங்களா.. நீங்க வெறும் கதிரேசன் இல்லை; டாக்டர் கதிரேசன். தமிழ் எம்.ஏ.பி.எச்டி. ஒரு கல்லூரியில் தமிழ் பிரிவுத் தலைவர், சொல்லுங்கள். இந்த விவாகரத்து தேவைதானா... பத்து நாள் டைம் கொடுத்தேன். யோசிச்சீங்களா? மறுபடி சேர்ந்து வாழ' விருப்பமா?''

''இல்லை ஐயா.''

''ஏன்?''

''வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி கொடுத்தார்க்கும் துய்த்தல் அரிது.'' தோளை ஆட்டிக்கொண்டிருக்குறள் சொல்லிற்று.

''என்ன சொல்றீங்க?'' நீதிபதி முகத்தில் சட்டென்று கோபம் ஏறிற்று.

''ஊழ்வினை ஐயா ஊழ்வினை. கோடிக் கணக்கான செல்வத்தைச் சேர்த்தவர்க்கும் அவற்றை நுகர வேண்டும் என்கிற ஊழ்வினை இருந்தால் ஒழிய அவற்றை நுகர முடியாது. இவளைப் பொறுத்தவரை என் ஊழ்வினை முடிந்து விட்டது.''

குறள் சொல்லி அர்த்தம் சொன்னதைக் கோபமாக்கிற்றா, இல்லை கேள்விக்கு நேரடியாய்ச் சொல்லாத அதிகப் பிரசங்கித்தனம் கோபமாக்கிற்றா புரியவில்லை.

''டாக்டர் கதிரேசன்....'' நீதிபதி சோமசுந்தரம் குரல் உயர்த்தினார். ''உங்களுக்கு

நானே ஒரு திருக்குறள் சொல்லட்டுமா? ஒத்தறிவான் உயிர் வாழ்வான் மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்.''

செத்தாருள் என்கிற வாசகம் கன்னத்தில் அடித்தது போல் சொல்லப்பட்டது.

''உங்களுக்கு அர்த்தம் தெரியும்னு நினைக்கிறேன். ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்சுக்கிட்டுப் போற்றி, பிறருக்கு உதவியாக வாழ்பவனே உயிர் வாழ்கிறவன். மற்றவர்கள் அப்படி வாழாதவர்கள்; செத்துப் போனவர்கள்.''

கோர்ட் சல சலத்தது.

''வாங்கம்மா.'' கூண்டில் ஏறினாள் பானுமதி. சத்தியம் செய்தாள்.

''யோசிச்சீங்களா? நீங்க கெமிஸ்ட்ரி டீச்சர். எம்.எஸ்ஸி படிச்சவங்க. மக்களுக்கு நல்ல ஒரு முன் மாதிரியா டீச்சர் இருக்க வேண்டாமா. மறுபடி சேர்ந்து வாழ விருப்பமா?''

''இல்லை ஐயா.''

''ஏன்?''

''என் கணவரோடு அனுசரித்துச் சேர்ந்து வாழும் மனநிலை எனக்கில்லை. என் முடிவில் உறுதியாய் நான் இருக்கிறேன்.''

கோர்ட் அமைதியாயிற்று.

''திரு கதிரேசன், திருமதி பானுமதி இருவரும் சேர்ந்து ஜூலை பதினான்காம் தேதி ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எழுபத்து மூன்றாம் ஆண்டு செய்து கொண்ட திருமண ஒப்பந்தம், செக்ஷன் பதின்மூன்று பி யின் கீழ் பரஸ்பர சம்மதத்தின்படி இந்த கோர்ட்டால் விலக்கப்பட்டது. விவாகரத்து தரப்படுகிறது.'' நீதிபதி உரக்கப்படித்து மேஜையிலுள்ள பேப்பரில் கையெழுத்திட்டார்.

குபீரென்று ஒரு சந்தோஷமும் துக்கமும் வயிற்றிலிருந்து பொங்கிப் பானுமதியின் உச்சி மண்டையைத் தாக்கின. உடம்பு நடுங்கிற்று. தரை மொத்தமும் ஆடுவதாய்த் தெரிந்தது. பிள்ளையின் தோளைப் பிடித்துக் கொண்டாள். பிள்ளை அவளை இறுக்கிக் கொண்டான்.

தலை நிமிர்ந்து நீதிபதியை நோக்கிக் கும்பிட்டாள். படபடப்பு அடங்கி, அவரின் பார்வையில் ஒரு துக்கம் தெரிந்தது. குனிந்த தலையுடன் குழந்தைகளோடு வெளியே வந்தாள். இருண்டு கிடந்த வராந்தாவைத் தாண்டி ஓடி வந்து அப்பாவைக் கட்டிக் கொண்டாள். வக்கீலுக்கு நன்றி சொன்னாள். அழுகையும் சிரிப்புமாய் நின்றாள்.

''என்னம்மா.... விடுதலை கொடுத்துட்டாங்களா?'' வராந்தா இருட்டிலிருந்து பூக்காரி எழுந்து வருவது தெரிந்தது.

''கொடுத்துட்டாங்க பூக்காரம்மா.'' பதிலில் குதூகலம் அவளை மீறிப் பொங்கிற்று. ''உன்னுது என்னாச்சு?''

''வந்துருக்கான். வக்கிலய்யா இன்னிக்கு அழுது ரகளை பண்ணிடுன்னுட்டாங்க. எப்படியும் இன்னிக்கு விடுதலை வாங்கிடலாம்னாங்க. கடவுள்தான் கண் திறக்கணும்.''

''நிச்சயம் திறப்பார். இந்தா.'' பர்ஸ் திறந்து நடுங்கும் விரல்களால் நூறு ரூபாய் எடுத்து அவள் கைகளில் திணித்தாள். ''செலவுக்கு வச்சுக்க. இந்தா என் கார்ட். இதுல என் விலாசம் இருக்கு. என்ன ஆச்சுன்னு வீட்டுக்கு வந்து சொல்லு.''

''தாயே, நீ நல்லா இருக்கணும். சந்தோஷமாப் போ. உன்னைப் புடிச்ச பீடை இன்னியோட போச்சு.'' கன்னம் வழித்து நெட்டி முறித்தாள். ''நான் வீட்டாண்ட வரேன். எங்க பசங்க?''

''ராசு... ராஜேந்திரா'' பானுமதி குரல் கொடுத்தாள். தேடினாள். ''அப்பா குழந்தைங்க எங்கே? பூங்குயில் எங்கே?''

''அவரு கூப்பிட்டாரு. பேசிட்டிருக்காங்க.''

''நோ.... நோ...'' பானுமதிக்குக் கோபம் பொங்கிற்று! வக்கீல் அவளைக் கையமர்த்தினார்.

(தொடரும்)

---

முகம்மதியர்களின் சட்ட திட்டங்களையும், அவர்களின் புனித நூலான திருக்குரானின் வாசகங்களையும் விளக்கிச் சொல்லும் மதகுருவிற்கு மஃப்டி (Mufti) என்று பெயர். மஃப்டிகள் மிக எளிய உடைகளையே அணிவது வழக்கம். அவ்வுடை Mufti Dress என வழங்கப்பட்டது. அதே பெயர் நாளாவட்டத்தில் உத்தியோக உடைகள் அல்லாத எளிய உடைகளுக்கும் பெயராக அமைந்துவிட்டது!

— எஸ். முகம்மது யூசுப்.





''நமது கட்சித் தலைவர் சர்வ கட்சி மாநாட்டைச் சிறப்பாக நடத்தியதற்குப் பாராட்டுகிறோம். மற்ற எல்லாக் கட்சிகளும் கூட்டத்தில் கலந்து கொள்ள மறுத்தும், நமது கட்சி தனித்து நின்று நடத்தியது கண்டு நாடே வியக்கிறது!

— என். வி. ரமணி.

முழு நீள நாடகம்.



# நாற்காலி

காட்சி — 1

(மேடையில் ஒரு வாசகர் தோன்றி புதிய தமிழ்ச் சிறுகதைகள் என்ற புத்தகத்தைப் படித்துக் கொண்டிருக்கிறார்.)

வாசகர் (படிக்கிறார்): நாற்காலி இல்லாததும் ஒரு வீடா? எங்கள் வீட்டில் இப்படித் திடீரென்று எல்லாருக்கும் தோன்றி விட்டது. அவ்வளவுதான். குடும்ப அஜெண்டாவில் வைக்கப்பட்டு இந்த விஷயத்தில் விவாதம் தொடங்கியது. எங்கள் வீட்டில் அதற்குமுன் ஒரு முக்காலிதான் உண்டு...

(மேடையில் ஒருவர் ஓர் அடி உயரமுள்ள ஒரு முக்காலியைக் கொண்டு வந்து போடுகிறார்.)

...எங்கள் பாட்டி தயிர் கடையும் போது அதில் உட்கார்ந்து கொள்வாள்.

(ஒரு வயதான மூதாட்டி முக்காலியில் உட்கார்ந்து கொண்டு தயிர் கடைவது போல பாவனை செய்கிறாள். கூடவே ஒரு நாட்டுப் பாடலும் பாடிக் கொள்கிறாள்.)

பாட்டி:

கொன்ன கொன்ன மாரியக்கா
கொழக்காட்டு மாரியக்கா
என்ன சொன்னே எங்கிட்டே
எதுத்துப் பேச வாரியா?
என் புருசன் கோவக்காரன்
தெம்பிருந்தா பேச வாடி...
பொட்டக்கண்ணு பொம்மியக்கா
எட்டநின்னு பேசடி நீ
சொட்டைத் தலை உன் புருசன்
கிட்டவந்தாத்தான் தெரியும்
சட்டம் பேச வந்துட்டாக்கா
சாத்திடுவேன் உலக்கையாலே...

(அவள் புருஷன் வயோதிகர் தாத்தா பின்னால் நின்று கொண்டு அவள் தயிர் கடைவதைப் பார்க்கிறார்....)

தாத்தா: கட்டில் மெத்தை பாய் இருக்கு —
— பெண்ணே
கால் புடிக்கவும் ஆள் இருக்கு
தோட்டத்துக்குள் தொட்டில் இருக்கு
— பெண்ணே
துணை மட்டும் இல்லையடி...

பாட்டி:

ஒட்டுக் கடுக்கனாம்
உடம்பெல்லாம் தேமலாம்
முன்னால நடக்கையில்
கண்ணைப் பறிக்குதய்யா...

தாத்தா: விட்டாப் போதுமே... நீ பாட்டுக்குப் பாட்டு எடுத்திடுவியே.... லேகப்பட்ட கிழவியா நீ...?

பாட்டி: நீரும் என்ன லேகப்பட்ட ஆளா...? கால்பிடிக்க ஆளு தேடுதிருல்ல, இந்த வயசுல...

தாத்தா: அதில்லை பாவாயி... முக்காலி சரியா இருக்குதான்னு கேட்டேன்.

பாட்டி: சரியா இருக்குதே, என்ன செய்திக?

தாத்தா: உம் பாரியான உடம்புக்கேத்த மாதிரி தச்சன்கிட்டச் சொல்லிக் கொஞ்சம் அகலமாச் செய்யச் சொன்னேன்.

பாட்டி: இப்படி வாகா — உட்கார்ந்து தயிர் கடைஞ்சாத்தான் கடைஞ்ச மாதிரி இருக்குது.

தாத்தா: இதுக்குமேல் உப்பாதே? இனிமே தச்சனைக் கூப்பிட்டு முக்காலியை அகலப்படுத்த முடியாது...

பாட்டி: அப்படி என்னத்தை உப்பிட்டேன்? அதுக்குன்னுட்டு தட்டைக்குச்சி மாதிரி இருந்தா நல்லாவா இருக்குது? வேலு நாயக்கருக்கு ஒரு மருமக வந்திருக்காளே... நெடுநெடுன்னு ஈர்க்கி மாதிரி. தலையிலே குஞ்சத்தைக் கட்டி விட்டோம்னா... காலைப் புடிச்சிக்கிட்டு ஒட்டடை அடிக்கலாம்...

(இருவரும் சிரித்துக் கொண்டே உள்ளே போகிறார்கள்....)

வாசகர் (தொடர்ந்து படிக்கிறார்): முதல் நாள் எங்கள் வீட்டிற்கு ஒரு குடும்ப நண்பர் விஜயம் செய்தார். அவர் ஒரு சப் ஜட்ஜ். வந்தவர் நம்மைப் போல வேட்டி சட்டை போட்டுக் கொண்டு வரப்படாதோ...?

**கதை: கி.ராஜநாராயணன்**

**நாடகவடிவம்: கோமல் சுவாமிநாதன்**

(கோட்டும் சூட்டுமாக மேடைக்கு ஒரு சப்ஜட்ஜ் நுழைகிறார்.)

...இந்த முக்காலியில் ஒரு சனியன் என்ன வென்றால், அதன் கால்களுக்கு நேராக இல்லாமல் பக்கத்தில் பாரம் அழுங்கி னால் வாரித் தட்டிவிடும்.

(சப்ஜட்ஜ் மேடைக்கு வர தாத்தா, பாட்டி, அப்பா, அம்மா, மகள், மகன் முதலானோர் வருகிறார்கள்.)

அப்பா: வாங்க... வாங்க... இது... எங்க அப்பா... இது எங்க அம்மா...

(தாத்தா பாட்டியை அறிமுகப்படுத்துகிறார்.)

உட்காருங்க...

(சப்ஜட்ஜ் முக்காலியில் உட்கார்ந்து பேச ஆரம் பிக்கிறார். முக்காலியில் கையை ஊன்றிக் கொண்டு பேச அது இப்படியும் அப்படியும் சாய்கிறது.
சுற்றிலுமுள்ளவர்கள் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கின்றனர். பேசிக் கொண்டிருந்த சப்ஜட்ஜ் முக்காலி நொடித்துக் கொள்ளக் கீழே விழுகிறார்.
எல்லாருக்கும் சிரிப்பு...
அப்பா சிரிப்பை அடக்கிக் கொண்டு சப்ஜட்ஜைத் தூக்கி நிறுத்துகிறார்.
சப்ஜட்ஜ் கோபமாக, முறைக்க, அப்பா சிரிப்பை அடக்க முடியாமல் பிள்ளைகளை அடக்குவது போல உள்ளே போய் விடுகிறார்.
சப்ஜட்ஜ் சுற்றுமுற்றும் பார்த்து விட்டு, முக்காலி யைக் கையால் எடுத்துக் கொண்டு போகிறார்.
எல்லாரும் திரும்பி வருகின்றனர்.)

அப்பா: எங்கே... அவரைக் காணோம்?

மகன்: அப்பா முக்காலியும் காணோம்பா...

அப்பா: அவர் முக்காலியை எடுத்துக்கிட் டுப் போயிட்டாரா?

அம்மா: சப்ஜட்ஜுக்கு எதுக்கு முக்காலி? அதை ஏன் அவர் எடுத்துக்கிட்டுப் போக ணும்? நம்ப வீட்டுக்கு அது ஆவி வந்த முக்காலி.

மகள்: அப்படிச் சொல்லாதேம்மா, ஆவியை வாங்க வந்த முக்காலின்னு சொல்லு...

அப்பா: அதை என்ன பண்ணப் போறாரு அவரு?

மகன்: உங்க வீட்டுக்கு வந்தா இதைப் போட்டு என் இடுப்பை ஒடிக்காதீங் கன்னு சொல்லாம சொல்லிட்டாரு...

மகள்: அப்படி இல்லேண்ணே... சாணக் கியன் மாதிரி அதை எரிச்சுப் போட்டுச் சாம்பலைக் கரைச்சுக் குடிக்கப் போகி றாரோ என்னமோ...?

பாட்டி: நான் இப்ப எதுல உட்கார்ந்துக் கிட்டு மோர் கடைவேன்?

தாத்தா: ஆங்... என் தோளில் உட்கார்ந்துக் கிட்டு மோர் கடை...

பாட்டி: உங்க தோளிலே உட்கார்ந்துக் கிட்டா காதுதான் குடையலாம் — மோர் கடைய முடியாது.

(எல்லாரும் சிரிக்க, விளக்கொளி மங்குகிறது.)

## காட்சி — 2

வாசகர் (படிக்கிறார்): இந்த நிகழ்ச்சிக்குப் பின்னேயே எங்கள் வீட்டில் எப்படி யாவது ஒரு நாற்காலி செய்வதென்று முடிவெடுக்கப்பட்டது. இந்த நாற்காலி செய்வதில் நடைமுறைக் கஷ்டம் என்ன வென்றால், முதலில் பார்வைக்கு எங்கள் ஊரில் ஒரு நாற்காலி கூடக் கிடை யாது. அதோடு நாற்காலி செய்யத் தெரிந்த தச்சனும் இல்லை.

(விளக்கு ஒளி பெரிதாகிறது.)

## காட்சி — 3

மகன்: டவுன்ல செய்து விக்கிற நாற் காலியை வாங்கிட்டு வந்துட்டாப் போச்சு.

அப்பா: அதெல்லாம் அவ்வளவு உறுதியா இருக்காதுப்பா. மெழுகைவைச்சு அடைச் சிருப்பான். வீட்டுக்கு வந்தாக் கையும் காலும் பொலபொலன்னு உதிர்ந்து போகும்.



அம்மா: நாற்காலிக்குக் கால் இருந்தாப் பத்தாதா? கை எதுக்கு வைக்கணும்?

பாட்டி: நல்லாச் சொன்னே போ... அது என்னது கையில்லாத நாற்காலி... மூளி அலங்காரி கணக்கா... பார்க்க அழகாவா இருக்கும்...?

அம்மா: கைக்கு அனாவசியமா மரம் செலவு தானே...?

பாட்டி: ஆமாடி... எதில் போய்ச் சிக்கனம் பண்றா... பாரு இவ... குதிரை வாங்கிட்டுச் சவுக்கு வாங்கக் கஞ்சம் பிடிச்சானாம்...

மகன்: அதானே — மாமாதான் கஞ்சமுட்டின்னா நீயும் அப்படியே இருக்கிறியே! அப்பா, செய்யறதைச் செய்யறோம் — நல்லா நாலு காலு வச்சு இரண்டு கை வச்சுக் கடசப் புடிச்சு ஆளை அசத்துற மாதிரி பண்ணிடுவோம்.

(மாமா வருகிறார்)

அம்மா: வாங்க அண்ணே...

பையன்: வாங்க மாமா... உங்களைப் பத்தித் தான் பேசிக்கிட்டு இருந்தோம்...

(மாமா வாயில் வெற்றிலை போட்டிருப்பதால் என்னைப் பத்தியா... என்ன பேசிக் கொண்டீர்கள் என்ற பாவனையில் கையை ஆட்டுகிறார்...)

பையன்: ஒண்ணுமில்லே மாமா... ஊர்ல மாமாவுக்குத்தான் தாராள மனசு. அவருக்குப் பின்னால அந்த வார்த்தைக்கே இந்த ஊர்ல அர்த்தமில்லாமப் போயிடும்னு சொல்லிக்கிட்டிருந்தோம்.

(மாமா — அவனை அருகில் அழைத்து கன்னத்தைப் பலமாக கிள்ளுகிறார்.

மகன் அய்யோ என்று வலி பொறுக்க முடியாமல் ஓடுகிறான்.

மாமா கற்று முற்றும் பார்த்து விட்டு, முக்காலி எங்கே என்ற பாவனையில் கையசைக்கிறார்.)



அப்பா: எதைக் கேட்கிறீங்க?

மாமா: மூக்காழி... மூக்காழி...

(எல்லாரும் சிரிக்க மாமாவுக்கு ஒன்றும் புரிய வில்லை.)

மகன்: உங்களுக்குத்தான் அந்தத் தூண் இருக்குதே மாமா... வழக்கம் போல அதிலே சாஞ்சுக்கிட்டு இருங்க...

(மாமா சாவகாசமாகத் துண்டால் தரையைத் தட்டி விட்டுத் தூணில் சாய்வது போல் உட்காருகிறார்.)

அம்மா: இருங்கண்ணே... மோர் எடுத்துக் கிட்டு வர்றேன்...

(அம்மா உள்ளே போக மாமா குடுமியைத் தட்டி முடித்து விட்டுக் கீழே தேடுகிறார்.)

மகன்: என்ன மாமா... ஏதாவது கீழே போட்டுட்டீங்களா?

மாமா: இல்லே... ழோமம்... ழோமம்...

மகன்: என்னது ழோமம்?

மகள்: அதுதாண்ணே ரோமம். முடியைச் சொல்றாரு...

மகன்: அதுதானே மாமா... ஊரிலேயே பெரிய கஞ்ச முட்டி நாய்க்கரு... ஒரு முடியைக் கூட இங்கே விட்டுட்டுப் போக மாட்டாரே...?

(மாமா பையனை ஜாடையால் அழைக்க பையன் கன்னத்தைத் தடவிக் கொண்டு வேறுபுறம் போகி றான்.
அம்மா மோர் கொண்டு வருகிறாள்.
மாமா அப்புறம் சாப்பிடுவதாகச் சைகை காட்டு கிறார்.)

மாமா (வாய் குளறலுடன்): மாப்பிள்ளை, அந்தப் பசுமாடு என் தங்கச்சிக்காக நானே கன்னாவரம் போய் வாங்கிட்டு வந்தேண்ணே...

அப்பா: ஆகா... என்ன அட்சர சுத்தமாப் புரியுது. என்ன சொல்றீங்க மச்சான்?

(மாமா வெத்திலையைத் துப்ப வெளியே போகி றார்...)

அப்பா: இதை முதலிலேயே செய்திருக்கப் படாதா? வெற்றிலை போட்டாத்தான் அவருக்கு 'ர' பேச மாட்டேங்குதே...

(மாமா திரும்பி வருகிறார்)

மாமா: மாப்பிள்ளே, அந்தப் பசுமாடு என் தங்கச்சிக்காக நானே கன்னாவரம் போய் வாங்கிட்டு வந்தேன்னேன்...

அப்பா: இதை நெறைய வாட்டி நீங்களே எங்கிட்டச் சொல்லியிருக்கீங்களே...

மாமா: நல்ல விஷயத்தைத் திரும்பத் திரும்பச் சொல்றதிலே தப்பில்லே...

(மோரைக் குடிக்கிறார்)

அப்பா: அது போகட்டும்... ரொம்ப வெவரம் தெரிஞ்ச ஆளாச்சே — உங்க கிட்ட ஒண்ணு கேக்கணுமே...?

மாமா: என்ன விஷயம்?

அப்பா: நாற்காலி செய்யக் கூடிய தச்சன் யாராவது தெரியுமா உங்களுக்கு?

மாமா: தச்சன்களுக்கென்ன, ஊரிலே தடுக்கி விழுந்தாத் தச்சன்கள் மேலேதான் விழ கணும்...

அப்பா: உள்ளூர்த் தச்சனுக யாரும் வேண் டாம். அவுங்களுக்கெல்லாம் வண்டிப் பட்டா அடிக்கத்தான் தெரியும். நல்ல அளகா நாற்காலி செய்யணும். கடசல் வேலை எல்லாம் தெரிஞ்சவனா இருக்க ணும்.

மாமா: பக்கத்து ஊரிலே ஒரு ஆளு இருக் கிறான். கில்லாடி. அவன் செய்யாத நாற் காலியே கிடையாது. கவர்னரே அவன் செய்த நாற்காலியைப் பார்த்து மெச்சி யிருக்காரு.

மகன்: பக்கத்து ஊருக்குக் கவர்னர் எப்ப மாமா வந்தாரு? ரீப் அடிக்கிறீங்களே?

மாமா: கவர்னர் ஏண்டா பக்கத்து ஊருக்கு வரணும்... இங்கிருந்து நாற்காலி கவர் னர் மாளிகைக்குப் போச்சுடா. உளியைக் கையிலே பிடிச்சான்னா சரசரசரன்னு செதுக்கி எடுத்துடுவான். அந்த மரத்துக் குள்ளே எப்படித்தான் நாற்காலிகள் மேசைகள், அலமாரிகள், கிளிகள், குருவி கள் எல்லாம் ஒளிஞ்சுக்கிட்டிருந்த தோன்னு ஆச்சரியப்பட்டுப் போயிடு வோம். இழைப்புளி எடுத்துத்தேச்சான்னா. ஜாதிக்காய் மரத்துல முகம் பார்த்துத் தலை சீவிக்கலாம். எம்டன்.

அப்பா: சரி, இன்னைக்கே அந்தத் தச்ச னுக்கு ஆள் விட்டுடுங்க.

மாமா: எனக்குக் கூட வீட்டிலே ஒரு நாற் காலி வேணும். இரண்டாச் செய்யச் சொல்லுவோம்.

அப்பா: ஆமா... எந்த மரத்திலே செய்யறது?

மாமா: வேப்பமரத்துல செய்யுறதுதான் நல்லது. அதிலே உட்கார்ந்தா உடம்புக் குக் குளிர்ச்சி. மூல வியாதி கிட்ட நாடாது.

தாத்தா: ஆமா... அதுதான் நல்லது.

மாமா: பாருங்க... வீட்டுலேயே ஒரு கேக இருக்குது...

அப்பா: ரொம்ப சௌகரியமாப் போச்சு. என் மந்தைப் புஞ்சையிலே ரொம்ப நாள் நின்ன வைரம் பாய்ஞ்ச ஒரு வேப்ப மரத்தை வெட்டி ஆறப் போடணும்னு முந்தா நாள் ஆட்கள் கிட்டச் சொல்லிக் கிட்டிருந்தேன்...

மாமா: அதையே அறுத்துடுவோம்...

மகன்: பூவரசம் கட்டையிலே செஞ்சா ரொம்ப நல்லா இருக்கும்பா. அது கண் இறுக்கமுள்ள மரம். பளபளப்பாக இருக் கும்.

அப்பா: பளபளப்பாக இருந்தாப் போதுமா? உழைக்க வேணாமா?

மகன்: அதெல்லாம் ஒண்ணும் வேணாம். பூவரசங்கட்டையிலே செய்தா வெள் ளையா இருக்கும். பார்க்கச் சகிக்காது.

செங்கரும்பு நிறத்திலேயோ எள்ளுப் புண்ணாக்கு மாதிரி கறுப்பாக இருக்கிற மரத்திலோதான் செய்யணும்...

அம்மா: ஆமா, அவ சொல்ற மாதிரி எள்ளுப் புண்ணாக்கிலேயே செய்துடலாம்.

மகன்: ஆமா, எள்ளுப் புண்ணாக்கிலேயே செய்... மாடு வந்து தின்னுட்டுப் போயிடும்...

அம்மா: இவன் யார்ரா... நிறத்தைச் சொன்னேண்டா...

அப்பா: ஆளாளுக்கு ஏதாவது சொல்லிக்கிட்டிருக்காதீங்க — மாமா விவரம் தெரிஞ்சவர். அவரு எல்லாம் பக்காவா ரெண்டு நாற்காலி செய்து முடிப்பாரு — என்ன மச்சான்...?

மாமா: எங்கிட்டே விட்டுட்டீங்கல்லே. ராஜா சிம்மாசனம் மாதிரி இரண்டு நாற்காலி கொண்டு வந்து இறக்கிப்புடறேன்... பேசாம இருங்க...

### காட்சி — 4

(லைட் ஒளி மங்குகிறது...)

வாசகர் (படிக்கிறார்): இரண்டு நாற்காலிகள் எங்கள் வீட்டுக்கு வந்து இறங்கிய போது, அதில் எந்த நாற்காலியை வைத்துக் கொண்டு எந்த நாற்காலியை மாமா வீட்டுக்குக் கொடுத்தனுப்புவது என்று எங்களுக்குத் தெரியவில்லை. ஒன்றைப் பார்த்தால் மற்றதைப் பார்க்க வேண்டாம். அப்படி ராமலட்சுமணர் மாதிரி இருந்தது. ஒன்றை வைத்துக் கொண்டு மாமா வீட்டுக்கு ஒன்றைக் கொடுத்தனுப்பினோம். மாமா வீட்டுக்குக் கொடுத்தனுப்பியதுதான் நல்ல நாற்காலியோ என்ற சந்தேகம் இருந்து கொண்டேயிருந்தது.

### காட்சி — 5

(லைட் ஒளி பெரிதாகிறது. நாற்காலி வந்தாச்சு. நாற்காலி வந்தாச்சு என்ற குரலுடன் உள்ளேயிருந்து சின்னப் பெண்கள் மகள், அம்மா, தாத்தா, பாட்டி எல்லாரும் ஓடி வருகிறார்கள்.

மகன் நாற்காலியை மகிழ்ச்சியுடன் தூக்கிவரப் பின்னால் அப்பாவும் வருகிறார்.

அதை ஹாலில் போட எல்லாரும் நல்லாருக்கே. அருமையாயிருக்கு. அம்சமா இருக்குது — என்ற குரல்களுடன் சுற்றிச் சுற்றி வர அப்பா அதில் உட்காரப் போகிறார்.)

அம்மா: இருங்க... யாரும் உட்கார வேண்டாம்....

(அம்மா உள்ளே போய் ஆரத்தித் தட்டை எடுத்து வந்து நாற்காலிக்கு ஆரத்தி சுற்றிப் பொட்டு வைக்கிறாள்.

முதலில் அப்பா உட்காருகிறார். பல போஸ்களில் உட்கார்ந்து பார்க்கிறார். ரொம்ப சௌகரியமாக இருக்கு என்று கூறிக் கொள்கிறார்.)

மகன்: இருங்கப்பா... நான் கொஞ்ச நேரம் உட்காருகிறேன்.

(மகன் பல ஸ்டைல்களில் உட்காருகிறான்.)



## ஆனந்த் தியேட்டர் அப்படியேதான் இருக்கும்!

சென்னை நகரின் மிகப் பழைய சினிமாத் தியேட்டர்கள் சில இடிக்கப்பட்டு, வணிக வளாகங்களாக மாற்றப்பட்டு வருகின்றன. ஆனந்த் தியேட்டரையும் இடித்து விட்டுக் 'கமர்ஷியல் காம்ப்ளெக்ஸ்' கட்டப் போகிறார்கள் என்றனர் சிலர்; கல்யாண மண்டபம் கட்டப் போகிறார்கள் என்றனர் சிலர். உண்மை என்ன?

அதன் அதிபர் ஜி. உமாபதியைச் சந்தித்துக் கேட்டோம்.

"பழைய தியேட்டர்கள் இடிக்கப்படுவதன் காரணம், வசூல் குறைச்சல்; முதலீட்டுக்குத் தகுந்த லாபம் இருக்கவில்லை என்பதோடு டிக்கெட்டில் சுமார் அறுபது சதவிகித வசூலை வரிகளாகவே கொடுக்க வேண்டியிருக்கிறது என்பதும்தான். இதன் காரணமாகவே நானும் தியேட்டரை மூடினேன்.

"ஒரு பக்கம் தியேட்டரை விற்று விடுவதென்று நான் முடிவெடுத்த போது, மறுபுறம் என் பெண்களும் பிள்ளைகளும் 'விற்க வேண்டாம்' என்று பலமாக எதிர்த்தார்கள். நானும் சரியென்று இருந்தேன். அப்போதுதான் முதல்வர் கலைஞர், 'என்ன சமாச்சாரம்? தியேட்டரை ஏன் மூடி வைத்திருக்கிறீர்கள்?' என்று விசாரித்தார். நானும் என் பாலன்ஸ் ஷீட்டைப் பாருங்கள் என்று அவரிடம் உண்மை நிலவரத்தை எடுத்துச் சொன்னேன்.

அதற்கு அவர், 'நான் வரியைக் குறைக்க முடியாது; வேண்டுமானால் நீங்கள் டிக்கெட் விலையில் முப்பது சதவிகிதம் கூடுதலாக வைத்துக் கொள்ளுங்கள்!' என்றார்.

"இப்போது டிக்கெட் விலையைக் கூட்டி விட்டோம். எட்டு ரூபாய் டிக்கெட்டில் ரூ. 3.20 அரசுக்கும் ரூ. 4.80 தியேட்டருக்கும் கிடைக்கிறது. எனவே இப்போது தியேட்டரை மூடி வைக்க வேண்டிய அவசியமும் ஏற்படவில்லை; இடிக்க வேண்டியதும் இல்லை!"

சந்திப்பு: சித்தார்த்



எப்படீம்மா இருக்குது?

அம்மா: ஆறாம் ஜார்ஜ் மன்னர் உட்கார்ந்த மாதிரி இருக்குது. திருஷ்டி பட்டுடப் போகுதுடா...

மகன்: இருண்ணே... நான் உட்கார்றேன்.

(மகன் ஆசனத்தில் சம்மணமிட்டு உட்காருகிறான்.)

மகன்: எப்படி இருக்குது? விக்டோரியா மகாராணி உட்கார்ந்த மாதிரி இருக்குதா?

மகன்: நாக்கைக் கொஞ்சம் தொங்க விட்டுக் கிட்டேன்னா நம்ம ஊரு எல்லைக்காளி உட்கார்ந்த மாதிரி இருக்கும்.

மகன்: வெட்கத்துடன்... போண்ணே...

(எழுகிறான்....)

அப்பா: இந்தா... நீ கொஞ்சம் வந்து உட்கார்ந்து பாரு.

அம்மா: பெரியவங்க முன்னால நான் அப்படியெல்லாம் உட்கார மாட்டேன்.

(அம்மா உள்ளே போக....)

மகன்: அப்பாடா — நம்ப வீட்டுக்கும் ஒரு நாற்காலி வந்தாச்சு.

சின்ன மகள்: இருங்க.. இதை நான் என் கூட்டாளிகள்கிட்டே எல்லாம் சொல்லிட்டு வந்துடறேன்.

(சிறுமி வெளியே ஓடுகிறாள். எல்லாரும் தாத்தா பாட்டி தவிர உள்ளே போகிறார்கள். தாத்தா சுற்று முற்றும் பார்த்து மெள்ள பாட்டியை அழைக்கிறார்.)

பாட்டி: ஏன், எதுக்குக் கூப்புடறீக?

தாத்தா: இங்கே வா...

(நாற்காலியில் அந்தஸ்தாக இருக்கிறார்.)

எப்படியிருக்கு?

பாட்டி: நல்லாத்தான் இருக்கு. கட்டபொம்மன் ராசா மாதிரி.

தாத்தா: நீயும் இப்படி வந்து பக்கத்துல நில்லு —

பாட்டி: அட எனக்கு வெக்கமா இருக்குது.

தாத்தா: அட வந்து நில்லுங்கறேன்...

(பாட்டி நாற்காலி அருகில் வருகிறாள்.)

இப்படி நில்லு —

(நிற்கிறாள்.)

மேல கையை வச்சுக்க —

(பாட்டி நாற்காலி மேல் கை வைக்கிறாள்.)

அட.... நாற்காலில இல்லை — என் தோள் மேல கையைப் போட்டுக்க —

பாட்டி: இப்ப நமக்கு என்ன கல்யாணமா நடக்கப் போகுது? போட்டோ படம் பிடிக்க...

(முகத்தில் இடித்து விட்டுப் போகிறாள்)

தாத்தா: நல்லாத்தான் இருக்குது. சும்மா சொல்லப்படாது. வெள்ளைக்காரன் நாற்காலின்னு ஒண்ணு கண்டுபிடிச்சான் பாரு —

(மகன் வருகிறான்)

மகன்: தாத்தா, நாற்காலியை வெள்ளைக்காரன்தான் கண்டுபிடிச்சான்னு உங்க கிட்ட ஆதாரம் ஏதாவது இருக்குதா?

தாத்தா: இந்த மாதிரி சூச்சுமான புத்தியெல்லாம் அவனுக்குத்தாண்டா இருக்குது.

(விளக்கொளி மங்குகிறது.)

## காட்சி — 6

(விளக்கு ஒளி பெரிதாக இப்போது சிறுமி நாற்காலியில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருக்கிறாள்.)

சிறுமி: தக்காணத்துப் பாமினி சுல்தான்கள் படை, விஜய நகரத்துப் படையை கி.பி. 1565-ம் வருஷம் தலைக்கோட்டை யுத்தத்தில் தோற்கடித்தன. தலைக் கோட்டைச் சண்டையினால் விஜயநகர சாம்ராஜ்யம் வீழ்ச்சியடைந்தது.

(திரும்பப் படிக்கிறாள். அவள் தங்கை வருகிறாள்.)

தங்கை: நீ அப்போப் பிடிச்சு உட்கார்ந்துக் கிட்டிருக்கியே — எழுந்திரு — நான் உட்காரணும் இப்போ...

சிறுமி: நான் இப்பத்தான் வந்து உட்கார்ந்தேன். எந்திரிக்க முடியாது — போ —

தங்கை: இப்ப எந்திரிக்கப் போறியா இல்லையா?

சிறுமி: முடியாது — உன்னால ஆனதைப் பார்த்துக்க.

(படிக்கிறாள்)

தக்காணத்துப் பாமினி சுல்தான்கள் படை.

(தங்கை அவள் கையைப் பிடித்து அவளைக் கீழே தள்ளுகிறாள்.
அவள் இவள் தலை மயிரைப் பிடித்துக் குலுக்க இவள் 'ஓ'வென்று கத்துகிறாள்.
இருவரும் சண்டை போட்டுக் கொள்கிறார்கள்.
அம்மா விசிறிக் கட்டையை எடுத்துக் கொண்டு உள்ளே வருகிறாள்.)

அம்மா: இரண்டு பேரும் இப்ப உள்ள போகப் போறீங்களா இல்லையா?

(என்று அடிக்க....)

சிறுமி: நான்தான் நாற்காலியில உட்கார்ந்து படிச்சுக்கிட்டிருந்தேன். இவள் என்னை இழுத்துத் தள்ளிருக்காள் —

தங்கை: எம்புட்டு நேரம் அவள் அதில உட்கார்ந்திருக்காள்.. எனக்குக் கொஞ்ச நேரம் கூட கொடுக்க மாட்டேங்குறாள்.

(அப்பா வருகிறார்)

அப்பா: என்ன சண்டை?

அம்மா: எல்லாம் இந்த நாற்காலியில இடம் பிடிக்கத்தான் சண்டை. குஸ்தி போட்டுக் கறாங்க. வீடே நாறுது. சவத்து மூதி. இதுவும் சரிக்கு சரி நின்று சண்டை போட்டுக்கிட்டு இருக்கே — போ உள்ளே.

(சிறுமிகள் உள்ளே போக....)

அப்பா: சரி. பசங்கன்னா அப்படித்தான் இருக்கும்.

அம்மா: நானும் பசங்களைப் பார்த்திருக்கிறேன். நம்ப வீட்டு புள்ளைங்க மாதிரியா... வாய் வார்த்தை இருக்கும் போதே, கையை ஓங்குறது என்ன பழக்கம்? சவத்து மூதிங்க, இந்த நாற்காலி வந்ததிலேயிருந்து நெத்தம் பொழுது விடிஞ்சாச் சண்டைதான். நாற்காலியில யார் உட்கார்றதுன்னு மத்யஸ்தம் பண்ணவே சரியா இருக்குது. ஒரு நா அந்த நாற்காலியை வெட்டி வெந்நீர் அடுப்புல போடப் போறேன்.

அப்பா: இந்தா... நாற்காலியை வெட்டினா என்னை வெட்டின மாதிரி. தெரியுமா? இனிமே அப்படியெல்லாம் பேசாதே..

(இரண்டு மூன்று பேர் வர அம்மா உள்ளே போகிறாள்)

வந்தவர்: என்ன.. சோலை நாயக்கரே, நாற்காலி வாங்கிருக்கிங்களாமே?

அப்பா: ஆமா... இத இருக்கு பாருங்க...

(வந்தவர் ஒருவர் அதைத் தூக்கிப் பார்க்கிறார்.)

வந்தவர்: கழுதைப்பய நாற்காலி.. நல்லாத்தான் இருக்குது. அதென்னங்க அப்படி ஒருவளவளப்பு? வாளைமீனைத்தொட்ட மாதிரி... நல்லா உறுதியா இருக்குமல்ல..

(ஓங்கி நாற்காலியில் இரண்டு குத்து விடுகிறார்.)

அப்பா: ஏங்க, அதைப் போட்டு அப்படிக் குத்துறீங்க... உங்க முதுகில குத்தினா எப்படி இருக்கும்?

வந்தவர்: அட என்னப்பா, அப்படி ஒரு கரிசனம்.. மரக்கட்டைதானே அது.. வலிக்கவா போகுது? ஊரில அதிசயமா ஒரு நாற்காலி வாங்கியிருக்கியேன்னு பாக்க வந்தோம். அதுக்கென்ன இந்த பிலுக்குப் பிலுக்கிறே?

அப்பா: அதில்லை மாமா. புது நாற்காலி.. ஜாயிண்டெல்லாம் சரியா அடிச்சிருக்க மாட்டான். அதுக்காகத்தான் சொன்னேன். நாற்காலியைப் பார்க்கத்தான் வந்தீகளா?

வந்தவர் 2: நாற்காலியைப் பார்க்கத்தான் வந்தேன். அதோட பிணையலுக்கு மாடு வேணும். அதையும் பத்திக்கிட்டு போகலாம்னு வந்தேன்.

அப்பா: மாடுதானே... மந்தையில மேஞ்சுக்கிட்டிருக்கும் பிடிச்சுக்கிட்டுப் போங்க..

வந்தவர் 2: (நாற்காலியில் உட்கார்ந்து) நல்லாத்தான் இருக்குது நாற்காலி...

(வெளியே பார்த்து அதிகார தோரணையில்)

ஏலே..: யார்ராவன்... காடுமுழுக்க ராத்திரிக்குள்ள தண்ணி பாச்சிடணுமுல்ல... இது சொணங்கினீங்க முதுகுத் தோலை உரிச்சுடுவேன்.

அப்பா: என்ன மாமா...

வந்தவர் 2 (கடகடவென்று சிரித்து): நாற்காலியில உட்கார்ந்தவுடனே ஒரு அந்தஸ்துவந்துடுதப்பா...நாற்காலின்னா ஒரு பவர் இருக்கத்தான் செய்யுது. நான் வரேன்.

(வந்தவர்கள் போகிறார்கள்)

அம்மா (வந்து கொண்டே): முதல்ல நாற்காலிக்கு ஒரு உறை தைக்கணுங்க..

அப்பா: ஏன்?

அம்மா: அழுக்கு வேட்டி கட்டிக்கிட்டு சைய்யின்னு உட்கார்ந்திடுறாங்க.

அப்பா: செத்த முன்னாடி அதை வெட்டி அடுப்புல போடணும்னு சொன்னே..

அம்மா: அதெல்லாம் ஒரு கோபத்துல சொல்றதுதான்.... நாற்காலிக்காகச் சண்டை போட்டுக்கிட்டாப் பத்திக்கிட்டு வருதில்ல....

(இருவரும் உள்ளே போகின்றனர்.)

காட்சி — 7

(விளக்கு ஒளி மங்கிப் பெரிதாகிறது.

நர்ஸ்: ஆபரேஷன் தேதியை ஏன் டாக்டர் ரகசியமாகவே வச்சிருக்கீங்க?''

டாக்டர்: பேஷண்ட் ஓடிப் போயிட்டா என்ன செய்யறது?

— ஷெந்தில்.



கல்லூரிப் பேராசிரியர்: காலேஜிலே உங்க பையனைக் கண்டிக்க மிரட்டற துக்கு ரொம்பச் சங்கடமா இருக்கு.

நண்பர்: ஏன் அப்படி?

முன்னவர்: உங்க பையனைப் பார்த்தால் என்னைவிட வயசானவராத் தெரிய றாரு!

— வி. கிருஷ்ணகுமார்.



இரவு நேரம்.
வெளியே ஐயா ஐயா என்ற குரல் கேட்கிறது.
அப்பா, அம்மா, மகன், மகள் முதலானோர் வருகின்றனர்.)

மகன்: வாங்க... என்ன?

வந்தவர்: நம்ப ஜம்பு நாயக்கரு தவறிப் போயிட்டாருங்க...

அப்பா: என்ன சொல்றீக? சாயந்திரம் கூட மந்தையில பேசிக்கிட்டிருந்தோம். தாளடிக்கு மிளகாப் பயிர் பண்ணலாம்னு சொல்லிக்கிட்டிருந்தாரு...

வந்தவர்: ஆமாங்க. மிளகாய் விதையெல்லாம் போய் வாங்கிட்டு வந்தாருங்க. பன்னிரண்டு மணிக்கு நெஞ்சு வலிக்குதுன்னாரு. வைத்தியரைக் கூட்டிக்கிட்டு வர்றதுக்குள்ளே மூச்சு நின்னு போச்சுங்க.

அப்பா: என்னங்க இது? நம்பும்படியா இல்லையே... நோக்காடுன்னு ஒரு நா கூடப் படுத்தறியாரு... இப்படியா ஒரு சாவு வரும்...

அம்மா: ஊருக்குள்ள நல்ல மனுசங்கல்லாம் ஒவ்வொருத்தராப் போயிக்கிட்டிருக்காங்க...

வந்தவர்: என்ன செய்யுறதுங்க? சாவு நம்ப கையிலா இருக்குது? உங்ககிட்டவும் தகவல் சொல்லிட்டு நாற்காலியை வாங்கிட்டுப் போகலாம்னு வந்தேன்...

அப்பா: நாற்காலியா ... எதுக்கு?

வந்தவர்: உங்க வீட்டு நாற்காலியிலதான் ஜம்பு நாயக்கரை உட்கார்த்தி வைக்கணும்னு பசங்க சொல்றாங்க. போட்டோப் பிடிக்கக் கூட ஆள் அனுப்பியிருக்காங்களாம்.

(ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொள்கின்றனர்.)

அம்மா: என்னங்க இது... நாற்காலியைக் கொடுத்தனுப்பப் போறீங்களா?

அப்பா: என்ன செய்யுறது? உசிரை விட்டுருக்கிறவரு ஊரில பெரிய மனுசன். இல்லைன்னு சொன்னா நல்லாவா இருக்கும்?

அம்மா: நம்ப வேணா, குடும்பத்தோட போய்த் துட்டியில கலந்துப்போம். நாற்காலியெல்லாம் கொடுக்க வேணாம்.

அப்பா: ஒரேயடியா நாற்காலியைத் தூக்கிட்டுப் போற எண்ணத்தோடதான் வந்திருப்பான் போல இருக்கே. பேசிப் பார்ப்போம்.. (வந்தவரிடம்) அது என்னங்க, புது வழக்கம்.. பொணத்தை நாற்காலியில உட்கார்த்தி வைக்கிறது...

வந்தவர்: நமக்கென்ன தெரியும்? அந்தப் பசங்க எந்த ஊரில போய் எந்த மோஸ்தரைப் பார்த்துக்கிட்டு வந்தானுகளோ தெரியலே... என்னைக் கூப்பிட்டு 'கரிய நாயக்கரே, சோலை நாயக்கரு வீட்டில இருந்து நாற்காலி வாங்கிட்டு வாங்கன்'னுட்டாங்க.

மகன்: இதுக்கு முன்னால செத்துப் போனவங்களை நம்ப ஊரில தரையிலதான் உட்கார்த்தி வைப்பாங்க.

அம்மா: அதானே! உரலைப் படுக்க வச்சு அது உருண்டுடாம இருக்க அண்டைக் கொடுத்து, ஒரு கோணிச்சாக்குல வரகு வைக்கோலைத் திணிச்சு அதைப் பாட்டு வசத்தில உரல் மேல் சாத்தி அந்தச் சாய்மானத் திண்டுல செத்துப் போனவங்களைச் சாஞ்சு உட்கார்ந்திருக்காப்பல உட்கார்த்தி வைப்பாங்க.

வந்தவர்: ஆமாங்க. எனக்கு விவரம் தெரியாதது போலச் சொல்றீங்களே... போன மாசம் எங்கப்பாரு செத்த போது அப்படித்தான் செய்தேன்.

அம்மா: உங்கப்பாரு ஆவி நல்லாத்தானே போய் சேர்ந்திச்சு?

அப்பா: நாற்காலியே இந்த ஊருக்கு வந்ததில்லே. அது வந்தவுடனே அதுக்குப் புது உபயோகம் கண்டுபிடிச்சுட்டாங்க. எடுத்துட்டுப் போங்க...

(வந்தவர் நாற்காலியை எடுத்துக் கொண்டு போகிறார்.)

மகள்: என்னப்பாது? கஷ்டப்பட்டு நாற்காலி வாங்கி அதைப் பொணத்தை உட்கார்த்தி வைக்கக் கொடுத்தனுப்புறீங்களேப்பா?

அப்பா: இல்லைன்னு சொன்னா, ஊரில கெட்ட பேரு வரும். பிசாத்துப்பய நாற்காலி வாங்கிட்டானாம்.. ரொம்பப் பீத்திக்கிறான்பாக.. போகட்டும்...

அம்மா: அந்த நாற்காலி திரும்ப வந்தா



அதில நான் உட்கார மாட்டேம்பா..

(அம்மா உள்ளே போகிறாள்)

அப்பா: அதெல்லாம் அப்புறம் பேசிக்குவம். காலையில எந்திரிச்சு முத வேலையாத் துட்டிக்குப் போயிட்டு வரணும். போய்ப் படுங்க..

(எல்லாரும் போக விளக்கு ஒளி மங்குகிறது.)

## காட்சி — 8

(விளக்கு ஒளி பெரிதாக. ஐம்பு நாயக்கரை வாயைக் கட்டி நாற்காலியில் உட்கார்த்தி வைத்திருக்கிறார்கள்.

சுற்றிலும் கூட்டம் துக்கம் கொண்டிருக்கிறது.

சோலை நாயக்கர் குடும்பமும் துக்கத்தில் கலந்து கொள்கிறது.)

அம்மா (வந்து கொண்டே): ராசா! (ஒப்பாரி பாடுகிறாள்):

சுத்தி நின்று மாரடிக்க உனக்குச்
சுற்றத்தார் மெத்த வுண்டு
வளைத்து நின்று மாரடிக்க உனக்கு
வங்கிசத்தார் மெத்த வுண்டு

பாட்டி:

உற்றார் அறியாமல் உனக்கு
உடன் மரணம் வந்ததென்ன?
சாதிசனம் அறியாமல் உனக்கு
சதிமரணம் வந்ததென்ன.. என் ராசா

மகன் (சகோதரியிடம்): அம்மாவும் பாட்டியும் நெசமாகவே துக்கம் தாங்காம அழுறாங்களா, இல்ல நம்ப நாற்காலிக்கு இந்தக் கதி வந்திருச்சேன்னு அழுகுறாங்களா?

(மகள் சிரிப்பை அடக்கி உஸ் என்று வாயைப் பொத்தி சகோதரனையும் அடக்குகிறாள்.)

ஒருவர் (அப்பாவிடம்): சோலை நாயக்கரே, நாற்காலியை எங்கிட்டுப் புடிச்சீங்க?

அப்பா: நல்லாருக்கா?

ஒருவர்: அற்புதமா இருக்குது. அதுல பொணத்தை உட்கார்த்தி வச்சா அதுவும் ஒரு அம்சமாத்தான் இருக்குது. பாருங்க, ஐம்பு நாயக்கரை, அவர் செத்துப் போனவர் மாதிரியா தெரியுது? உங்க வீட்டு நாக்காலியில உட்கார்ந்தவுடனே அவருக்குப் புதுக் களையே வந்திடிச்சே...

அப்பா: சும்மா வயித்தெறிச்சலைக் கிளப்பாதீங்க... பொணத்துக்குக் களை வந்திடுச்சாம்... நாற்காலிக்குக் களை போயிடுச்சுங்க...

(விளக்கு ஒளி அணைகிறது — மீண்டும் விளக்கு எரிய)

## காட்சி — 9

அப்பா (உள்ளேயிருந்து வந்து கொண்டே): ஏலே.. அந்த நாற்காலியை நல்லாக் கழுவுனியா?

மகன்: கிணத்தடிக்கு எடுத்துட்டுப் போய் வைக்கலால தேச்சுத் தேச்சுப் பெரிய வாளியில ஒரு பதினைஞ்சு வாளித் தண்ணி ஊத்திக் கழுவிருக்கேம்பா..

அப்பா: காஞ்சிருச்சுல்ல... அதை உள்ள கொண்டாந்து போடேன்..

(மகன் நாற்காலியை எடுத்து வர சோலை நாயக்கர் அதில் உட்காரப் போகிறார்.
உள்ளேயிருந்து அம்மா ஓடி வருகிறாள்.)

அம்மா: எந்திரிங்க... எந்திரிங்க...

அப்பா: ஏன்?

அம்மா: அதில உட்காராதீங்க.

அப்பா: உட்கார்ந்தா என்னவாம்?

அம்மா: என் வாயால சொல்லப்படாதுங்க.. அதுல நீங்க உட்கார்ந்ததைப் பார்த்தா ஐம்பு நாயக்கரைப் பார்த்த மாதிரியே இருக்குதுங்க...

(அப்பா திடுக்கிட்டுத் தள்ளி வருகிறார்)

அப்பா: சும்மா ஏதாவது ஏடாகூடமா சொல்லிக்கிட்டிருக்காதே. பொணம் உட்கார்ந்தா அது வந்து நாற்காலியை ஒட்டிக்கிட்டிருக்குதா? அதை நல்லாக் கழுவி விட்டாச்சு.. அப்படித்தான் உட்காருவேன்.

(அப்பா நாற்காலியில் உட்காருகிறார்.)

அம்மா: ஐயோ... நான் இந்தக் காட்சியைப் பார்க்க மாட்டேன்.

(வேகமாக உள்ளே போகிறாள்)

அப்பா (மகனிடம்): ஏலே கிட்டவா...

மகன்: இல்லேப்பா... நான் இங்கேயே நிக்கிறேன். சொல்ல வேண்டியதை அங்கிருந்தே சொல்லுங்க.

அப்பா: ஏலே.... நீயுமாடா...

(ஒரு விருந்தாளி வருகிறார்)

அப்பா: அடடே... வாங்க சுப்புநாயக்கரே... அம்பாசமுத்திரத்திலேயிருந்து எப்ப வந்தீங்க?

விருந்தாளி: இத வந்துக்கிட்டேயிருக்கேன்.

அப்பா: போன காரியம் எல்லாம் நல்லா முடிஞ்சுதா? பொண்ணு வீட்டுக்காரங் களைப் பார்த்தீங்களா?

விருந்தாளி: நல்லா முடிஞ்சுது. அவங் களுக்கு நம்ப வீட்டோட சம்பந்தம் பண்ண ரொம்பச் சம்மதம்.

அப்பா: அப்படியா... வாங்க, உட்கார்ந்துக் கிட்டு பேசுங்க...

(என்று நாற்காலியைக் காட்ட)

விருந்தாளி: இதுல உட்கார்ந்துக்கிட்டுப் பேசவா? என்னப்பா, விவரம் புரியாத ஆளா இருக்கே... கல்யாண விஷயத்தை அந்த நாற்காலியில உட்கார்ந்துக்கிட்டுப் பேசறதாவது... வாங்க வெளித் திண்ணை யில உட்கார்ந்து பேசுவோம்.

(மகன் சிரித்துக் கொண்டு நிற்கிறான்.
சிறுமி படித்துக் கொண்டே உள்ளே வருகிறாள்.)

சிறுமி: தக்காணத்துப் பாமினி சுல்தான் கள் படை விஜயநகரத்துப் படையை கி.பி. 1565ம் வருஷம் தலைக்கோட்டை யுத்தத்தில் தோற்கடித்தது.

மகன்: ஏம்மா, நானும் பார்த்துக்கிட்டே யிருக்கேன்... ரொம்ப நாளா தலைக் கோட்டைச் சண்டையை விட்டு வெளிய வரமாட்டேங்குறே..

சிறுமி: இந்தக் கேள்வி நிச்சயம் பரீட் சைக்கு வருதாம். அதான் நெட்டுருப் போடறேன்.

மகன்: அதையேன் இப்படி உலாத்திக்கிட்டே படிக்கிறே? நாற்காலியில உட்கார்ந்துக் கிட்டு நிதானமாப் படியேன்..

சிறுமி: அந்த நாற்காலியிலியா? வேணாம்.

மகன்: ஏன்மா?

சிறுமி: அதுல உட்கார்ந்தா ஜம்பு நாயக் கர் மடியில உட்கார்ந்த மாதிரி இருக் குது.

(விளக்கு ஒளி மங்குகிறது.)

## காட்சி — 10

(விளக்கு ஒளி பெரிதானவுடன் வாசகர் வரு கிறார்.)

வாசகர்: திரும்பவும் ஒரு நாள் ராத்திரி யாரோ இறந்து போய் விட்டார்கள் என நாற்காலியைத் தூக்கிக் கொண்டு போனார்கள். இப்படி அடிக்கடி நடந் தது. நாற்காலியை வருத்தத்தோடுதான் கொடுத்தனுப்புவோம். இழவு வீட்டுக் காரர்கள் எங்கள் துக்கத்தை வேறு மாதிரி அர்த்தப்படுத்திக் கொள்வார்கள். தங்களவர் இறந்து போன செய்தியைக் கேட்டுத்தான் இவர்கள் வருத்தம் அடை கிறார்கள் போலிருக்கிறது என்று நினைத்துக் கொள்வார்கள். தூக்கம் கலைந்த எரிச்சல் வேறு. செத்துத் தொலைக்கிறவர்கள் ஏன்தான் இப்படி அகாலத்தில் சாகிறார்களோ தெரியல்லே என்று அம்மா ஒருதரம் சொன்னாள்.

'நல்ல நாற்காலி செய்தோமடா நாம, செத்துப் போன ஊர்க்காரனுக உட் காருவதற்காக' என்று அலுத்துக் கொண் டார் அப்பா.

'நாற்காலி செய்யக் கொடுத்த நேர பலன்' என்றான் மகன்.

ஆனால் அதே நேரத்தில்தானே மாமா வீட்டு நாற்காலியும் செய்தது. அது மட்டும் அதிர்ஷ்டம் செய்திருக் கிறதே...

நாற்காலியை மாமாவைத் தவிர அந்த வீட்டில் யாரும் உபயோகிக்கக் கூடாது. காலையில் எழுந்ததும் முதல் காரியமாக அதைத் துடைத்து வைப்பார். ஓர் இடத் திலிருந்து இன்னோர் இடத்துக்குத் தாமே மெதுவாக எடுத்துக் கொண்டு போய்ச் சப்தமில்லாமல் தண்ணீர் நிறைந்த மண் பானையை இறக்கி வைப் பது போல அவ்வளவு மெதுவாக வைப்பார். அதில் அமர்ந்து நிதானமாக வெத்திலை போடுவார்.

அவர் வீட்டு நாற்காலி கொடுத்து வைத்த நாற்காலி. ஒரு நாள் மாமா வீட்டுக்கு வந்தார். அப்பா நாற்காலியில் அமர்ந்து உச்சிமோட்டை பார்த்தவண் ணம் இருக்க...

மாமா: மாப்பிள்ளை, என்ன ஆச்சு மாப் பிள்ளை?

அப்பா: சும்மாயிருங்க மாமா... நான் யோசனையில இருக்கேன்.

மாமா: அப்படியா? நான் வேற என்னமோ

"அந்தப் பத்திரிகை ஆசிரியருக்கு ரொம்பவும் குறும்புதான்!"

"எப்படிச் சொல்றீங்க?"

"நான் அனுப்பி இருந்த தொடர்கதை யைப் பிரசுரிக்க லாயக்கு இல்லைன்னு சொல்லி வாரம் ஒரு அத்தியாயமா எனக்குத் திருப்பி அனுப்பிக்கிட்டு இருக் கார்!"

— வளர்மதி ஆசைத்தம்பி.





''வீட்டுக்கு மருமகள் வந்த பின்னாடி தான் ட. வி. வாங்கணும்னு சொல்றியே! ஏன் அப்படி?''

''ட. வி. பார்க்கிறதாலே ஏற்படற எரிச்சலைத் திட்டித் தீர்த்துக்க ஆள் வேண்டாமா?''

— குமுதி எஸ். சேதுராமன்.

நினைச்சிட்டேன்.

மகன்: வாங்க மாமா...

மாமா: சுப்புலட்சுமி வீட்டுல இருக்குதுல்ல, ஒரு சங்கதி சொல்லணும்.

அப்பா: இருக்காங்க வாங்க..

மகன்: மாமா, நாற்காலி எப்படி இருக்குது?

மாமா: அது சிம்மாசனம் மாதிரில்ல இருக்குது... தச்சன் யாரு? நான் சொன்ன ஆளு இல்லே? கவர்னரே அவன் கை நேர்த்தியைப் பாராட்டினவராச்சே.. உள்ளூர்த் தச்சன்களுக்கு என்ன தெரியும்? கோடாலியைக் கொடுத்தா விறகுக் கட்டையைப் பொளப்பானுங்க... செய்யுற வேலையில ஓர் அழகு வேணும்... ஒரு நேர்த்தி வேணும்... கூடத்திலே இப்படி ஒரு நாற்காலியைப் போட்டாலே லட்சுமி களை தாண்டவமாடும்.

(மாமா உள்ளே போகிறார்.
மகன் பொறுமலுடன் நிற்கிறான்.
மகள் வருகிறாள்.)

மகன்: கேட்டியா மாமா சொன்னதை? கூடத்துல நாற்காலியைப் போட்டா லட்சுமி களை தாண்டவமாடுதுங்கறார் மாமா. நம்ப வீட்டு நாற்காலியில சவக் களை தாண்டவமாடுது.

மகள்: இதுவரைக்கும் பதினோரு பொணம் அதிலே உட்கார்ந்திருச்சண்ணே. ஜம்பு நாயக்கர்லே ஆரம்பிச்சு முத்து நாயக்கர், வேலையா நாயக்கர், விசாலாட்சிப் பாட்டி...

மகன்: போதும் போதும்... இந்த நாற்காலியில உட்காரணும்னே பொசுக்குப் பொசுக்குன்னு இந்த ஊர்க்காரனுக சாவானுக போல இருக்குது...

மகள்: அன்னிக்கு அப்பா... நிர்தாட்சணியமா இந்தக் காரியத்துக்கெல்லாம் நாற்காலி கொடுக்கிறதில்லேன்னு சொல்லியிருந்தார்னா வம்பே இல்லை...

மகன்: நம்ப வீட்டு நாற்காலிக்கு ஏற்பட்ட இந்த களங்கத்தை நாம துடைச் சேயாகணும்.

மகள்: யாரோ ஓர் ஆபீசர் ஊருக்குள்ள வந்து சோலை நாயக்கர் வீடு எதுன்னு கேட்டிருக்காங்க. அதுக்கு ஒரு ஆளு 'சாவு வீட்டுக்கு நாற்காலி கொடுத்தனுப்புவாரே, அந்தச் சோலை நாயக்கர் வீடு தானேன்'னு கேட்டிருக்கான். என் சிநேகிதி சொல்லிச் சொல்லிக் கிண்டல் அடிக்கிறா.

மகன்: அய்யோ... மணியக்காரர் பொம்மி நாயக்கர் காலையிலே இருந்து இழுத்துக்கிட்டு இருக்காராம். சுவாசம் முட்டிப் போகுதாம். ராத்திரித் தாண்டாதுங்கு றாங்க. எனக்கு வேற கவலையாக இருக்குது. சொந்தக்காரங்களுக்குச் சொல்லியனுப்புறாங்களோ என்னவோ.. முதல்ல நாற்காலிக்குச் சொல்லிடுவாங்க...

மகள்: இதுக்கு ஏதாச்சும் ஒரு முடிவு கட்டணும்.

மகன்: எனக்கு ஒரு யோசனை தோணுது..

மகள்: என்ன?

(மகன் காதோடு ரகசியமாக ஏதோ கூறுகிறான்.
பெண் மகிழ்ச்சியுடன் தலையசைக்கிறாள்.)

மகன்: அப்ப... நாற்காலியைத் தூக்கு...

(இருவரும் நாற்காலியை உள்ளே எடுத்துச் செல்கின்றனர். விளக்கு ஒளி மங்குகிறது.)

## காட்சி — 11

வாசகர்: ராத்திரி அகாலத்தில் கதவு தட்டும் சப்தம் கேட்டது. வீட்டில் எல்லாரும் அயர்ந்த உறக்கம். பெண் தன் அண்ணனை எழுப்பினாள். இருவரும் வெளியே வந்தார்கள்.

(ஒருவர் வந்து நிற்கிறார்....)

மகன்: என்னங்க?

வந்தவர்: என்னத்தைச் சொல்வேன்க.. கர்ண மகாராஜா போயிட்டாருங்க..

மகன்: என்னய்யா சொல்றே?

வந்தவர்: ஆமாங்க. தர்மபுத்திரன் போயிட்டாருங்க...

மகன்: ஏங்க, ஏதாவது மகாபாரதம் கேட்டுட்டு வரீங்களா? விஷயத்தைச் சொல்லுங்க...

வந்தவர் (அழுது கொண்டே): மணியக்காரு பொம்மி நாயக்கரு தவறிப் போயிட்டாருங்க..

மகன்: இப்பத்தானா?

வந்தவர்: என்ன கேட்டீங்க?

மகன்: நல்லாருந்தாரே மனுசன்..

வந்தவர்: ஆமாங்க... இப்பப் பொணமா செத்துக் கிடக்காருங்க..

மகன்: செத்துப் போனப்புறம்தான்யா



# பாவம், இந்தப் பெண்கள்!

## பஷ்பா தங்கதுரை

எழுதும்
புதுமையான
உண்மைக்
கதைகள்

# சாவி

ஆகஸ்ட் 2ம் தேதி
இதழில் ஆரம்பம்



வெளிநாடுகளில் வாழ்க்கைப்பட்ட பெண்களின் கண்ணீர்க் கதைகளை வரிசையாக எழுதுகிறார்.

வெளிநாட்டு இந்தியக் கணவனின் மிருகத்தனம், அந்த கொடூரக் கணவனிடமிருந்து தப்பி தாய்நாடு திரும்புவதற்கே திண்டாடும் பெண்களின் பரிதாபநிலை இது போன்ற பயங்கர உண்மைகளை வெளிச்சமிட்டுக் காட்டப் போகிறார் புஷ்பா தங்கதுரை.

ஒவ்வொரு கதையும் உள்ளத்தை உருக்கும் ஒரு சோக சித்திரம்.

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...

ஆகவே நானும்
விவேகானந்தா கல்வி
நிலையத்தில் ஆங்கிலம்
கற்க விரும்புகிறேன்.
எனவே, இப்பயிற்சி பற்றிய
தகவல் புத்தகத்தையும்
விண்ணப்ப படிவத்தையும்
கீழ்க்கண்ட எனது
முகவரிக்கு உடனே அனுப்பவும்.

முகவரி:
B. சுதாகர்
30, ஆத்மூலம் பிள்ளை சந்து
வடக்கு ஆவணி மூல வீதி
மதுரை - 625006



WRITE PIN CODE IN ADDRESS

To
விவேகானந்தா கல்வி
நிலையம்,
தபால் பெட்டி எண் 4986
No. 9, மேட்லி ரோடு,
தி. நகர்,
சென்னை
பின் PIN 600017

உங்களுக்கும் உங்களது முன்னேற்றத்திற்கும் இடையில் இப்பொழுது உள்ள தூரம் ஒரு போஸ்ட் கார்டு தான் என்று நாங்கள் கூறினால் அது சற்று மிகையாகத் தோன்றும். ஆனால் உண்மை அதுதான்.

நீங்கள் வாழ்க்கையில் முன்னேறுவதற்கு ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மை ஒரு தடையாக இருந்திருந்தால்........

மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசும் போது அதை ஓரளவு புரிந்து கொண்டும், அதற்கு ஆங்கிலத்திலேயே பதிலளிக்க முடியவில்லையே என்ற குறை உங்களிடம் குடி கொண்டிருந்தால்,

பல புத்தகங்களைப் படித்தும் ஆங்கிலத்தில் பேச முடியவில்லையே என்ற சலிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருந்தால்,

நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற்றத்தை இப்பொழுது அடைய ஒரே ஒரு போஸ்ட்கார்டுபோதும்...ஆமாம்!

ஆங்கிலத்தில் இலக்கணப் பிழையின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், தயக்க மின்றி சரளமாகப் பேசவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்று போற்றப்படும் விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு இன்றே அனுப்புங்கள்.

நீங்கள் மேற்கொள்ள வேண்டிய பயிற்சியைப் பற்றியும் மற்ற தகவல்களையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இந்த எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற்கொள்ளலாம்.

"நேர்முகப்பயிற்சியும் உண்டு."

என்ன?.....எங்கே கிளம்பி விட்டீர்கள்? போஸ்ட் கார்டு வாங்கத்தானே?

உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கிவிட்டது.

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி

---

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**9, மேட்லி ரோடு,**
**தி. நகர், சென்னை - 17.**

NAGA



அடுத்த இதழில்......

## "பிரதமருக்கு எல்லாமே விளையாட்டாக இருக்கிறது!"

— மேனகா காந்தி சிறப்புப் பேட்டி

பொணம். சரி, காலையில வந்து சேர்றோம்..

வந்தவர்: சரிங்க. உங்க வீட்டிலேயிருந்து நாற்காலி எடுத்துட்டு வரச் சொன்னாங்க.

மகன்: அடடே... நாற்காலிதானே? அது எங்க மாமா வீட்டில இருக்குது. அங்கே போய்க் கேளுங்க. தருவாரு. இப்படிக் காரியங்களுக்கு இல்லேன்னு சொல்ல முடியுமா? அதுவும் கர்ண மகாராஜா தர்மபுத்திரன், பொம்மி நாயக்கருக்கு இல்லேன்னு சொல்வாங்களா? ஒரு வேளை தரமாட்டேன்னு மாமா சொன்னாருன்னா ஊர் பொதுக் காரியம்னு சொல்லிப் பாருங்க. அங்கே கிடைக்கல்லேன்னா நேரா இங்கே வாங்க... அப்புறம் ஏதாவது ஏற்பாடு செய்வோம்...

வந்தவர்: சரிங்க.. நான் வரேன். தருமராசா, போயிட்டியே...

**(வந்தவர் போனபின் இருவரும் சிரிக்கின்றனர்.)**

மகன்: சும்மா நாமே எத்தினி நாளைக்குக் கொடுத்துக்கிட்டிருக்கிறது? மாமாதான் ஒரு நாள் கொடுக்கட்டுமே...

மகன்: அதானே... மணியக்காரர் பொம்மி நாயக்கர்கிட்ட இருந்து ஒரு தொடக்க விழா ஆரம்பிச்சு வைக்கட்டுமே..

**(இருவரும் உள்ளே போக விளக்கு ஒளி மங்குகிறது.)**

### காட்சி — 12

வாசகர்: இப்பொழுது மாமா காட்டில் மழை பெய்து கொண்டிருக்கிறது. இந்த புனித கைங்கர்யத்துக்கு அவர் நாற்காலி போய்க் கொண்டிருக்கிறது. மணியக்காரர் பொம்மி நாயக்கர் பிள்ளையார் சுழி போட்டு ஆரம்பித்து வைத்த பணி சிறப்பாக நடந்து கொண்டிருக்கிறது.

ரொம்ப நாள் கழித்து மகன் தன் மாமா வீட்டுக்குப் போன போது...

**(விளக்கு ஒளி மங்கிப் பெரிதாகிறது.**

**மாமா தரையில் உட்கார்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருக்கிறார்.**

**மகன் வருகிறான்)**

மாமா: வாங்க மாப்பிள்ளை... வெத்திலை போடுங்க...

மகன்: சின்னப் புள்ளைங்க... வெத்திலை போட்டாக் கோழி முட்டும்.

மாமா: அட அது கோழிக்குக் கொம்பு இருந்த காலத்துல வந்த பழமொழி. இப்பத்தான் கோழிக்குக் கொம்பு இல்லையே...

**(மகன் சுற்றுமுற்றும் பார்க்கிறான்)**

மகன்: என்ன மாமா, இப்படி கீழே உட்கார்ந்திருக்கீங்க? நாற்காலி எங்கே?

மாமா: ஓ அதுவா? ஊரிலே எத்தனை சாவு வருது. அதனால அந்தக் காரியத்துக்கு வச்சுக் கொள்ளும்படி நான் கொடுத்துட்டேன். அந்தக் காரியத்துக்கும் ஒரு நாற்காலி வேண்டியதுதானே...நம்ப வீட்டிலேயிருந்து ஒவ்வொருவாட்டி நாற்காலி வெளியே போகும் போது அக்கம் பக்கத்தில யாரு, எப்ப, எத்தினி மணிக்கு, என்ன ஆச்சு அப்பமன்னு நம்மை துக்கம் விசாரிக்க ஆரம்பிச்சுடறாங்க. இந்தத் தொல்லை தாங்காம அதுக்குன்னே அதை ஒதுக்கிட்டேன்.

மகன் (தனக்குள்): அப்பா.. இப்பத்தான் நிம்மதி. எங்க வீட்டு நாற்காலி தப்பிச்சது. இனி தைரியமா கூடத்துல அதைக் கொண்டாந்து போடலாம். தைரியமா அதுல உட்காரலாம். இந்தச் சந்தோஷ சமாச்சாரத்தை முதல்ல வீட்டுல எல்லார் கிட்டவும் போய்ச் சொல்லணும்..

மாமா: என்ன மாப்பிள்ளை யோசிக்கிறீங்க?

மகன்: ஒண்ணுமில்லை மாமா... உங்க தாராள மனசை நெனைச்சு சந்தோஷப் பட்டுக்கிட்டிருக்கேன். நான் அப்புறம் வரேன் மாமா...

**(போக முற்படுகிறான்)**

மாமா: இதைக் கேட்டுட்டுப் போங்க.. நாற்காலி பழக்கப்பட்டுப் போயிட்டதுனால அது இல்லாம நம்மாள சமாளிக்க முடியல்லே. உங்க வீட்டுல உள்ள நாற்காலியை இங்க கொண்டு வந்து போட்டுடுங்க. தங்கச்சிக்கிட்டவும், மச்சான் கிட்டவும் சொல்லிடுங்க. சாயங்காலம் இந்தப் பக்கிட்டு வரும்போது எடுத்துட்டு வரியளா மாப்பிள்ளை...

**(போனவன் பிரமை பிடித்தவன் போல நிற்கிறான்.)**

**(திரை)**

# என் உயிர்த் தோழன்

**இதுவரை படிக்காதவர்களுக்கு...**

சிட்டு —

சந்தனத்தேவன்பட்டி கிராமத்தின் இளம் அழகி. ஊருக்குள் நாடகம் போட வந்த குழுவில் தென்னவன் என்ற இளைஞனைக் காதலிக்கிறாள். இதையுணர்ந்த அவள் அப்பா அவளுக்கு வேறு மாப்பிள்ளை ஏற்பாடு செய்யும் சமயத்தில், சிட்டு தென்னவனோடு பட்டணத்திற்கு ரயில் ஏறுகிறாள்.

ரயிலில் வரும்போது தான் அணிந்திருந்த நகைகளையெல்லாம் கழற்றித் தென்னவனிடம் கொடுத்து அதைப் பட்டணத்தில் வியாபாரத்திற்கான முதலீடாகப் பயன்படுத்திக் கொள்ளும்படி கூறுகிறாள். அவன் நகைகளை வாங்கித் தன் பையில் பத்திரப் படுத்திக் கொள்கிறான்.

ரயில் காலையில் சென்னை வந்து சேர்ந்த போது, தென்னவனைக் காணாது திகைத்துப் பயத்துடன் ஸ்டேஷனை விட்டு வெளியேறுகிறாள் சிட்டு. அப்போது குயில் குப்பத்தைச் சேர்ந்த ரிக்ஷாக்கார இளைஞன் தருமன், சிட்டுவைக் கண்டு — நிலைமை ஒருவாறு ஊகித்துக் கொண்டு அவளைத் தனது குப்பத்திற்கு அழைத்துச் செல்கிறான்.

சிட்டுவின் அனாதை நிலைமை உணர்ந்த டில்லி பாபு என்ற ஒரு ரௌடி, தருமனிடமிருந்து சிட்டுவைத் தட்டிக் கொண்டு வந்துவிட்டால் அவளைத் தனது 'தொழிலுக்கு'ப் பயன்படுத்திக்கொள்ளலாமேயென்கிற ஆசையில் சிட்டு தங்கியிருந்த தருமனின் குடிசைக்குத் தனது சகாக்களோடு போகிறான்...

## அத்தியாயம் 16
## கண்ணாடி மழை!

"இன்னா டில்லி... புச்சா இந்தப் பக்கம்? இன்னா சமாசாரம்?" என்றாள் மல்லிகா.

"அட இது ஒண்ணும் இல்லே மல்லிகா... நம்ம ஆளுங்க குண்டூர்லேந்து புச்சா ஒரு பார்ட்டியை அனுப்பிருந்தானுங்க. அத்த இட்னு வர்றதுக்கு நான் இந்தத் தடியனை அனுப்ப, இவன் அடையாளம் தெரியாம மிஸ் பண்ணிக்கிறான். அப்பாலே வெசாரிச்சப்புறந்தான் தெரிது நம்ம தருமன் கைலதான் பார்ட்டிகீதுன்னு. அதான் இட்டுகினு போகலாம்னு வந்தேன். பார்ட்டியைக் கூப்பிடு... டைமாவுது. போவுணும்..." என்று டில்லிபாபு முடிக்குமுன் மல்லிகாவின் கூச்சல் கூரையைப் பிளந்திருந்தது..

"இந்தா டில்லி அனாவசியமாத் தகராறு வாணா. தருமன் இத்த என் கைலே வுட்டுட்டுப் போயிருக்குது. அது வந்துச்சுன்னா அப்பாலே உனக்குத்தான் பேஜாரு. அத்தாலே கம்முனு பூடு... சொம்மா இங்க வந்து ஊளை உதாரெல்லாம் வுடாதே அஆங்..."

டில்லி எரிச்சலில் எகிறினான், "ஏய் நான் யாரு தெரியுமில்லே? இங்க கீற அத்தினி பேரையும் நாஸ்தி பண்ணிடுவேன். இன்னாங்கடா தருமன் பெரிய கொம்பனா... இன்னாவோ பூச்சாண்டி காட்றீங்க..." என்று கத்திக் கொண்டிருக்கும் போதே, வானத்தில் இரு சோடா பாட்டில்கள் சந்தித்துச் சண்டையிட்டுப் பல சுக்கல்களாய்ப் பூமியில் சிதற, அதைத் தொடர்ந்து தருமனின் "ஓய்" என்ற குரலுக்கு அதிர்ந்து, குப்பமே வெளியே வந்திருந்தது.

"டேய் மாசாண்ம், சம்பத்து... எல்லாரையும் இட்டுக்கினு வாங்கடா இங்க..."

தருமனின் ஆணைக்குட்பட்டுக் குப்பத்திலுள்ள முக்கால்வாசியினர் கையில் உருட்டுக் கட்டை, சோடாப் பாட்டில், சைக்கிள் செயின் மற்றும் சுத்தமாக இந்தியாவிலியே தயாரிக்கப்பட்ட பல்வேறு ஆயுதங்களோடு அவனைப் பின்தொடர்வதைக் கண்ட டில்லிக்குத் தருமனுடன் மோதிய பழைய சம்பவங்கள் ஒரு நொடி தோன்றி மறைய, 'டில்லி' உஷாரானான்.

சற்று நேரத்திற்குமுன் கத்திக் கொண்டிருந்த டில்லியின் குரல் இப்போது பெண்மையடித்திருந்தது. அதிகம் நெளிந்து, பின், "வா... தர்மா. உனுக்குத்தான் காத்துக்கினு இருந்தேன். நீயே வந்துட்டே... சௌக்கியமா?" என்று கேட்டான்.

"அத்தெல்லாம் இருக்கட்டும். எங்கே இந்தப் பக்கம்?"

"அது வேறே ஒண்ணு இல்ல தர்மா... தே... இப்பத்தான் மல்லிகா கைலே கூட சொல்லிக்கினு இருந்தேன். குண்டூர்லேந்து நம்ம ஆளுங்க அனுப்புன பார்ட்டி ஒண்ணு எப்படியோ நேத்து எக்மோர்லே மிஸ் ஆயிடுச்சு. அப்பாலேதான் தெரிஞ்சுது நீதான் இட்டுகினு வந்துக்கறேன்னு. அதான்

பாரதிராஜா

உன் கைலே கேட்டு அத்த இட்னு போலாம்னு....''

"எப்டி... எப்டி..? அது உனக்குப் பார்ட்டியா... குண்டூர்லேந்து ப்ரெண்டு அனுப்புனானா? இந்தா டில்லி நல்லாக் கேட்டுக்க. நீ யாரு... உன் பிஸினஸ் இன்னா... எல்லாம் எனுக்குக் கிளீனாத் தெரியும். எதோ தெரிஞ்ச மூஞ்சியாறேதுனாலே அதுலே இப்ப எதும் கோடு போடாமே அனுப்பறேன். இதே வேறே யாரோ கண்டி இருந்தா நடந்துக்கறதே வேறே. கம்னு பூடு...'' என்று கத்தியவாறே தன் கையில் இருந்த சோடாப் பாட்டிலை வீசி, வானத்தில் எறிய, வேறு எங்கிருந்தோ வந்த மற்றொரு சோடா பாட்டில் அதோடு முறுக்கிக் கொள்ள, மீண்டும் ஒருமுறை அங்கு கண்ணாடி மழை பொழிந்தது.

இதற்கு மேலும் தருமனிடம் ஏதும் வாதிப்பது என்பது தற்கொலை செய்து கொள்வதற்கு இணையானதொரு முட்டாள் தனமான செயல் என்பதை நன்கு உணர்ந்திருந்த டில்லிபாபு உயிர் பிழைக்கும் அவசரத்தில் குயில் குப்பத்தை விட்டகன்றான்.

தீவிர சிந்தனைக்குப் பிறகு ஒரு முடிவுக்கு வந்தவனாய்த் தருமன் பொன்னம்மா அக்காவிடம் சொல்லிக் கொண்டு சிட்டுவின் தந்தையைக் கண்டு விவரம் தெரிந்து வர அவள் கிராமத்திற்குச் சென்று திரும்பி



யிருந்தான்.

ஊரில் இருந்து திரும்பி வந்தவன், ஏதும் விவரம் சொல்லுவான் என்று காத்திருந்து காத்திருந்து அவனிடமிருந்து எந்தவித வார்த்தையும் வராததால் பொறுமையிழந்த பொன்னம்மாக்கா "இன்னாடா தருமா, போனியே, எதனாச்சும் வெசாரிச்சியா? அவங்கப்பாவைக் கண்டுக்கினு வந்தியா? இன்னா மேட்டராம்?" என்று மூச்சு விடாது விசாரிக்க...

"தே... அம்மாந் தொலவு போயிட்டு வந்துக்கறேன் இல்லே... இன்னாடா நாஷ்டா பண்ணியா? பசிக்குதான்னு எதனாச்சும் கேட்டியா நீ... வந்தவுடனே லோலோன்னு கூவுறியே. சோத்தை எடுத்துப் போடு. நான் போயி காலை கயுவிகினு வர்றேன்..."

கத்தி விட்டுச் சென்றவனை ஆச்சரியமாய்ப் பார்த்தவாறே அவனுக்குத் தட்டில் சோற்றை எடுத்துப் போட்டு விட்டுக் காத்திருந்தாள்.

திரும்பி வந்தவன், "யக்கா போயிருந்தேன் யக்கா. அத்த ஏன் கேக்கறே போ... இத்துப் பேச்சைக் கேட்டுகினு ஏதோ ஊருன்னு நெனைச்சிக்கினு நான் போனா... அங்க ஒரு நாலு மொட்டைத் தென்னை மரம். நம்ம குப்பத்துலேயே... புள்ளியாரு கோயிலு.. அந்த மாதிரியே ஒரு கோயிலு யக்கா. பொளப்பில்லாம அலையற ஒரு நாலு பெரிசுங்க... டவுசருப் போட்டுகினு அலையுற ஒரு நாலு மொட்டைப் பசங்க... மொத்தமே இவ்ளோதான்! இது ஒரு ஊராம் யக்கா. நான் பேஜாராயிட்டேன் யக்கா..." என்றான்.

தொடர்ந்து, "கொஞ்சம் கொயம்பு ஊத்து. அப்பாலே வெசாரிச்சி... பொண்ணு அப்பனைப் போய்ப் பாத்தேன். ஆளுக்கு வயசு ஆவுதே ஒழிய, அந்த அளவுக்கு அறிவே இல்லேயக்கா. அஆங் நாம நெனச்சா மாதிரியே மேட்டரு பெரிசுதான் யக்கா. இந்தப் பொண்ணை எவனோ டாவடிச்சிக்கிறான். இதுவும் அவன் கையிலே

---

# காதல் மலர்ந்த இடம்!



• திருமண வரவேற்பில் ஃபாத்திமா — பாபு.

**டீ**.வி. (பகுதி நேர) செய்தி வாசிப்பாளர் ஃபாத்திமா திடுதிப்பென்று காதல் திருமணம் செய்து கொண்டது. டீ.வி. நோக்கர்களுக்கு ஓர் இன்ப அதிர்ச்சியாகி விட்டது! திருமணம் திடீரென்று நடந்தாலும் காதல் திடீரென்று வந்திருக்க முடியாதே! விசாரித்தோம்.

ஃபாத்திமா முஸ்லீம் மதத்தைச் சார்ந்தவர். அவரது பெற்றோரும் கலப்புத் திருமணம் செய்து கொண்டவர்கள்தானாம். இவர் இந்தியன் ஆயில் கார்ப்பொரேஷனில் வேலைக்குச் சேர்ந்த அதே சமயத்தில்தான் பாபுவும் வேலைக்குச் சேர்ந்தாராம். பாபு இந்து.

ஃபாத்திமா வேலை பார்ப்பது சென்னை நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலையிலுள்ள 'இந்தியன் ஆயில் பவன்' கட்டடத்திலுள்ள ஐந்தாவது மாடியிலுள்ள விற்பனைப் பிரிவில். பாபுவுக்கு முதல் மாடியிலுள்ள அக்கவுண்ட்ஸ் பிரிவில் வேலை. இருவருமே கிளார்க்—கம்—டைப்பிஸ்ட்.

ஃபாத்திமா கலகல டைப். பாபு அவருக்கு நேரெதிர். இந்த எதிரெதிர்த் தன்மைதான் ஈர்ப்புத் தன்மைக்கு அடிக்கல் நாட்டி விட்டது போல் இருக்கிறது.

இருவரும் பழக ஆரம்பித்தது ஆபீஸிலுள்ள 'ரெக்ரியேஷன் கிளப்'பில். சனி, ஞாயிறு விடுமுறை தினங்களில் கூட இருவரும் காலை பத்தரை மணிக்கு கிளப்பில் ஆஜராகி விடுவார்கள். டேபிள் டென்னிஸ் விளையாடுவார்கள். மோ. பைக்கில் 'வாக்கிங்' போவார்கள்!

பதிவுத் திருமணம் நடந்த போது மிக நெருங்கிய நண்பர்களே உடனிருந்தார்கள். மாலை வரவேற்புக்கு மட்டும், அலுவலகத்திலுள்ள சக ஊழிய நண்பர்கள், டீ.வி. நிலைய நண்பர்கள் என்று கொஞ்சம் விஸ்தாரமாக அழைப்புக் கொடுத்திருக்கிறார்கள். இப்போது வளசரவாக்கத்தில் குடித்தனம். பத்திரிகை பேட்டிக்காக அணுகுபவர்களைத் "தடங்கலுக்கு வருந்துகிறோம்" என்று பலமாக மறுத்து விடுகிறார் ஃபாத்திமா.

— எஸ். சந்திரமௌலி

படம் — உதவி: தினத்தந்தி.

மடிஞ்சிடிச்சி. அந்தப் பேமானி இத்த மெட்ராஸுக்கு இட்னு வந்து சோக்கா வெச்சுக்கிறேன். அப்டி இப்டின்னு சொல்லி இது வூட்லேகிற நகையெல்லாத்தையும் தௌப்பிக்கினு வரச் சொல்ல... இத்தும் அவனை நம்பி அவன் கூடக் கம்பி நீட்டிட்டுக்கிது... கூட்டினு வந்த கசமாலம் வழியிலேயே நகையெல்லாம் கயிட்டுகினு பொண்ணையும் அம்போன்னு வுட்டுட்டு அம்பேலாயிட்டுக்கறான். அதான் இது மெட்ராசுலே எறங்கி முயிச்சிக்கினும் அயதுகினும் இருந்துகுது...

அப்பாலே நான் அவங்கப்பன் கைலே எடுத்துச் சொன்னேன். இன்னா இருந்தாலும் அது வெவரம் தெரியாத பொண்ணு. நம்ப காலம் மாதிரி இப்பல்லாம் கண்டிஷனா யாரு இருக்கறது. ஏதோ தெரியாம தப்புப் பண்ணிடுச்சு. நம்ம பொண்ணு இன்னாதான் ஆயிரம் தப்புப் பண்ணாலும் அத்த மன்னிச்சி நாமதான ஏத்துக்கணும். அப்டின்னு சொன்னேன். அதுக்கு அந்தாளு இல்ல யக்கா, கைல ஒரு சொம்பை எடுத்துகினு கூடவே என்னையும் கூட்டிகினு எங்கியோ போனான். யக்கா... சொன்னா நம்பவே மாட்ட யக்கா, நம்ப ஊருலே ஓடுது பாரு கூவம், அத்த மாதிரியே அங்க ஒண்ணு ஓடுது யக்கா. கெயவன் அதுலே எறங்கிச் சொம்புல தண்ணிய மொண்டு மொண்டு தலைக்கு ஊத்திக்கினான். அட, இது இன்னாடா குளிக்கறதுக்கு எதுக்குடா கெயவன் நம்மளக் கூடக் கூட்டிக்கினு வந்துக்கறான்னு பார்த்தா... அவன் சொல்றான் யக்கா... அவன் பொண்ணைத் தலை முயுவிட்டானாம்!

"அவன் அது கைலே எப்பவும் சொல்லுவானாம். பொண்ணாப் பொறந்தவளுக்கு அச்சம்.. மடம்.. பயிப்பு அத்தெல்லாம் இருக்கணுமாம்... என்னிக்கு அவரு பொண்ணு ஒருத்தனோட ஓடிருச்சோ, அப்பவே அதுக்கு அது எதுவும் கெடயாதாம் யக்கா... பொண்ணெல்லாம் மறுபடியும் ஏத்துக்க முடியாதுன்னு கண்டிஷனாச் சொல்லிட்டான் யக்கா..."

ஒரே மூச்சில் தருமன் சிட்டுவின் வாழ்க்கை வரலாற்றை ஒப்பித்து விட்டு, மூச்சு வாங்கிய அந்த இடைவேளையில் பொன்னம்மா, "அதுக்கு நீ இன்னாடா சொன்னே?" என்றாள்.

"நான் இன்னாத்தச் சொல்ல... பொண்ணைப் பெத்தவனே அத்த வேணான்னு சொல்லிட்டான். இனி நாம சொல்றதுக்கு இன்னா கீது? அத்தத்தான் கேக்குறேன். அத்தக் கூப்பிடு..."

பொன்னம்மா குடிசையில் சிட்டுவைக் காணாது குழம்ப, திடீரென்று யாரோ ஓடி வந்து, "தருமா நீ இட்னு வந்த பொண்ணு டிச்சிக் குழியிலே விழுந்துடுச்சி ஓடியா..." என்று கூவத் தருமனும் பொன்னம்மாவும் விழுந்தடித்துக் கொண்டு ஓடினர்.

(தொடரும்)

## "தூள் கிளப்பிய சுகபோகத் தீவுகள்..."



* இருபத்தெட்டு வாரங்களாகச் சுகபோகத் தீவுகளைப் பிரபஞ்சன் கட்டிக் காட்டிய விதம் மிக அழகு. விநோதினி, கிருஷ்ணமூர்த்தி பாத்திரப்படைப்புக்கள் மிக அருமை.

கனியக்காவிளை, கே. புஷ்பராஜ்.

* அரசியலின் அவலங்களை அக்கு வேறு ஆணி வேறாகக் கிழித்துத் தூள் கிளப்பி விட்டார் பிரபஞ்சன். கிருஷ்ணமூர்த்தி — விநோதினி இணைந்தது இதமளித்தது.

மதுரை — 1. பிரபாகர் ப்ரியன்.

* இந்தச் சமுதாயத்தின் அழுகிய அரசியல், பொய்களை, புரட்டுக்களைப் பிரபஞ்சன் அடித்த அடி அருமை! அதைவிட அந்த அடிகளால் என் போன்றோருக்குக் கிடைத்த மனநிம்மதி இருக்கிறதே... அதற்காக உங்களுக்கு என் நன்றி.

பெரம்பலூர், அ. சிங்கார வேலு.

* அரசியலில் புகுந்து, ஆடம்பரத்தின் பிடியில் சிக்கி, அருமையான வாழ்வை இழந்து விடுவானோ கிருஷ்ணமூர்த்தி, என நினைத்தேன். நல்ல வேளை எல்லோருக்கும் பிடித்தமான முடிவையே கொடுத்திருக்கிறார் எழுத்தாளர். மிக்க நன்றி.

சென்னை — 45, ஏ. ஜப்பர் காதர்.

* ஒருவன் (கிருஷ்ணமூர்த்தி) நேர்மை வழிக்கு எப்படித் திரும்புகிறான் என்பதைக் கதை எடுத்துக் காட்டினாலும் கூட, மற்ற அரசியல்வாதிகள் அதே அரசியல் சாக்கடையிலிருந்து விடுபட வழி காட்டவில்லையே கதை!

நீடூர், அ. முஹம்மது நிஜாமுத்தீன்.

* ஒவ்வொரு வாரமும் எதிர்பார்த்துப் படிக்க வைத்த கதை. பிரபஞ்சனுக்கு எனது பாராட்டுக்கள்.

குத்தாலம், ஜி. ஆர். ஜேஷ்.

* ஒவ்வொரு பாத்திரத்தையும் செதுக்கியிருந்த விதமும், உணர்ச்சி பூர்வமாய் எழுதப் பட்டிருந்த உரையாடல்களும், அந்த உணர்ச்சிகளுக்கு உயிர் கொடுக்கும் வகையில், ராமுவின் தூரிகையிலிருந்து பிறந்திருந்த ஓவியங்களும் — நெஞ்சை விட்டு அகலாதவை!

கொரட்டூர். கே.என். ஸ்ரீனிவாஸ்.



# சம்சார சங்கீதம் — அரசியல் அபஸ்வரம்...

"என் படத்தை ஓட விடாமல் செய்வதற்காக அமைச்சர் உள்ளிட்ட தி. மு. க. பெரும் புள்ளிகள் தியேட்டர்காரர்களை மிரட்டினார்கள். இதனால் வேலூர், விழுப்புரம், தூத்துக்குடி ஆகிய ஊர்களில் என் படம் திரையிடப்படவில்லை" என்று குற்றம் சாட்டுகிறார் டி. ராஜேந்தர்.

'இது எவ்வளவு தூரம் உண்மை? சென்னையில் படம் ஓடும் தியேட்டர்களில் விசாரித்தால் உண்மை நிலவரம் தெரிய வருமே?' என்று கருதிச் சென்றோம்.

நடராஜ் தியேட்டர் ஜெயவேலு கூறுகிறார்: "நான் கிட்டத்தட்ட இருபது வருடங்களாக இந்தத் தியேட்டர் மானேஜராக இருந்து வருகிறேன். "சம்சார சங்கீதம்" படத்தை வெளியிட்ட பிறகுதான் எங்களுக்கு வணிக வரி அதிகாரிகளின் கெடுபிடி அதிகமாக இருக்கிறது. முன்பெல்லாம் ஆறு மாதம், எட்டு மாதத்துக்கு ஒரு முறை வரும் அதிகாரிகள், இப்போது தினசரி வந்து படம் ஓடும்போது தியேட்டருக்குள் புகுந்து மக்களிடம் டிக்கெட் சோதனை செய்கிறார்கள். ரசிகர்கள் எரிச்சலடைகிறார்கள். [illegible] தியேட்டர்களில் தில்லுமுல்லு செய்ய முடியாது. படம் பார்க்க வருகிறவர்கள் விவரம்தெரிந்தவர்கள். பணத்தைக்கொடுத்த பிறகு டிக்கெட் தரவில்லையென்றால் எங்களைத் தட்டிக் கேட்கக் கூடியவர்கள். அவ்வாறு இருக்க இந்தத் திடீர் கெடுபிடி எதற்கு? அற்பக் காரணங்களுக்காக எங்களை அதிகாரிகள் எச்சரித்து விட்டுப் போயிருக்கிறார்கள். முதல் சில நாட்களில் போலீஸார், டிக்கெட் ரிஸர்வ் செய்துவிட்டுக் காத்திருந்த ரசிகர்களைத் தியேட்டருக்கு வெளியே துரத்தியும் இருக்கிறார்கள்."

சங்கம் தியேட்டர் மானேஜர் ஜெயகுமாரைச் சந்தித்தபோது, "சமீப காலமாக வணிகவரி அதிகாரிகளின் கெடுபிடி அதிகமாகத்தான் இருக்கிறது" என்று அவரும் சொன்னார். "டி. சி. ஆரைப் (டெய்லி கலெக்‌ஷன் ரிப்போர்ட்) போட்டு முடிக்க ஐந்து நிமிடங்கள் தாமதமானாலும் அபராதம் போடுகிறார்கள்!"

"படம் திரையிடக் கூடாது என்று மிரட்டல் ஏதும் உண்டா?"

"நேரடியாக இல்லை; ஆனால் தொலைபேசியில் மிரட்டல்கள் வந்தன."

"பட்டாசு வெடித்தவர்களைப் போலீஸ் கைது செய்ததாமே?"

"சாலையில் பட்டாசு வெடித்ததாகவும் போக்குவரத்துக்கு இடைஞ்சல் என்று கூறிப் போலீஸார் அவர்களைத் 'தள்ளிக் கொண்டு' போனதாகவும் கேள்விப்பட்டேன்."

கீழ்ப்பாக்கம் போலீஸ் ஸ்டேஷன் சென்று விசாரித்தபோது, பட்டாசு சம்பவம் நடந்தபோது இருந்த இன்ஸ்பெக்டர் மாற்றலாகிப்போய்விட்டார்(தற்செயலா?)என்றும் கைதான நபர்களை ராஜேந்தர் அபராதம் கட்டி வெளியே அழைத்துப் போனார் என்றும் தெரிய வந்தது.

எது எப்படியோ, சங்கம், நடராஜ் ஆகிய இரு தியேட்டர்களிலும் பெண்கள் கூட்டம் தெரிகிறது!

— ப்ரியன்

படம்: | சுபா

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: இ. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157: ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.



# ஆயத்தமாகிவிட்டார் ஆனந்தமான நேரத்தை அனுபவித்திட.

அலுவலகத்தில் ஓயாத உழைப்பு. பதற்றம். ஆனால் இப்போதோ அது ஓடி ஒளிந்து விட்டது. குழந்தைகளோடு குழந்தையாய் அளவற்ற சக்தியுடன் விளையாடுகிறார்.

ஊட்டச் சத்துமிக்க ஒரு கோப்பை ஹார்லிக்ஸ் கொடுத்து நாள் முழுவதும் அவருக்கு வேண்டிய வலிமையும் ஆற்றலும் அளிக்கும் உங்களுக்கே நன்றி.



"ஹார்லிக்ஸில், வலிமைக்கும், ஆற்றலுக்கும், நல்ல உடல் ஆரோக்கியத்துக்கும் தேவையான- புரோட்டீன்ஸ், விட்டமின்ஸ், மினரல்ஸ், கார்போஹைட்ரேட்ஸ் —ஆகிய முக்கிய ஊட்டச்சத்துக்கள் அடங்கியுள்ளன.

அதுவே, நாள் முழுவதும் ஆரோக்கியம் தரும் ஹார்லிக்ஸின் மேன்மை."







சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka